பழகிவிட்டால் எந்த வேலையும் மனிதனுக்குச் சுலபமாகிவிடுகிறது. அல்லது எந்த வேலைக்கும் மனிதன் சுலபமாகிவிடுகிறான். சம்பந்தப்பட்டவர்களுக்கு அது ஒரு வேலை. சம்பந்தப்படாதவர்களுக்குத்தான் அது ஒரு பிரச்னை....

ஆதீஸ்வரன் ஒரு பெட்டியில் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே ஏற முயன்றான். தள்ளிய கதவு சிறிது நகர்ந்து அப்படியே நின்றுவிட்டது.

கதவைத் திறக்கக்கூட இடமில்லாதபடி நுழை வாசல் வரை கூட்டம் நிரம்பியிருந்தது.

ஒருவரையொருவர் இடித்துக் கொண்டு, மூச்சு விடுவதற்காகச் சிரமப் பட்டுத் தலையை உயர்த்திக் கொண்டு— 'கொஞ்சம் உள்ளே நகர்ந்து நில்லய்யா' என்று கத்திக் கொண்டு—வேர்த்து வேர்த்து வழிந்தபடி—

ஆதீஸ்வரன் பின்வாங்கினான்.

பின்னால் நின்றுகொண்டிருந்தவர்கள் அவனைப் பிடித்து இழுத்துவிட்டு முன்னேற முயன்று கொண்டிருந்தார்கள்.

"ஏய்யா, இப்படி இடித்துக் கொண்டு ஏற வேண்டுமா? அடுத்த பெட்டியைப் பார்க்கறது."

"எல்லாப் பெட்டியுமே இப்படித்தான். இந்தப் பெட்டியிலாவது கதவைத் திறந்து வெச்சிருக்காங்க!"

அவர்களுடைய பேச்சு அவனைத் தயங்க வைத்தது. மற்றப் பெட்டிகளில் இதைவிடச் சிரமமாயிருக்கும் போலும். இதே பெட்டியில் மீண்டும் முயற்சி செய்யலாமா —

அந்த நினைவைக் கைவிட்டான். நிற்கவாவது சிறிது வசதியாய் இடம் கிடைக்கக்கூடிய பெட்டியைத் தேடிப் பிடிக்க நடந்தான். தன்னைப் போலவே தேடி ஓடுபவர்களும் தேடிவிட்டுத் திரும்புவர்களுமான கூட்டத்தைக் கடந்தான்.

பெட்டி, கூடைகளை இடுக்கிக் கொண்டு, கையில் குழந்தைகளையும் பிடித்து இழுத்துக் கொண்டு — கட்டை கட்டையான ஆண்களுக்கு மத்தியில் சில பெண் பிள்ளைகள் பரிதாபமாகச் சிக்கிக் கொண்டிருந்ததை பார்த்தபோது — மூச்சு விட முடியாமல் கால்களுக்கிடையில் அகப்பட்டுக்

கொண்டு குழந்தைகள் கத்தியபோது— கூட்ஸ் வண்டிக்கும், பிரயாணிகள் வண்டிக்கும் என்ன வித்தியாசம் என்று அவன் யோசித்தான்.

கூட்ஸ் வண்டியில் பொருள்களைக் கணக்கிட்டு அளவு பார்த்துத் திணித்து வைக்கிறார்கள். பிரயாணிகள் வண்டியில் கணக்கிடாமல், அளவு பார்க்காமல் மனிதர்கள் தாங்களே திணித்துக் கொள்ளுகிறார்கள்.

கூட்டம் கட்டுக்கடங்காமல் போய்விடவே சில பெட்டிகளில் சற்று வசதியாக நிற்கவாவது முடிந்தவர்கள் மேற்கொண்டு யாரும் நுழைந்து–விடாதபடி பெட்டியின் கதவுகளை அடைத்துத் தாழ்ப்பாள் போட்டு–விட்டார்கள்.

ஆதீஸ்வரன் இரண்டு கதவுகளைத் தட்டிப் பார்த்தான். திறக்க–வில்லை. அடுத்த பெட்டிக் கதவின் முன் "ஒரே ஒரு ஆள்தானுங்க!" என்று சொல்லிச் சத்தியாக்கிரகம் ஆரம்பித்தான். ஓர் ஓரமாக ஒண்டிக் கொள்வதற்கு அனுமதி கேட்டான். சற்று நேரத்திற்கு முன்பு இதேபோல் அனுமதி வாங்கிக்கொண்டு உள்ளே நுழைந்த ஒருவனே தற்போது காவல் அதிகாரியாக மாறிக் கண்டிப்புக் காட்டிக் கொண்டிருந்தான். பின்னாலிருந்த சிலர் சத்தமிட்டனர்.

"அட—கதவைத் திறய்யா — என்னமோ ஒன் வீட்டுக் கதவை அடைச்சு வச்சிட்டிருக்கிற மாதிரி ".

"ஏய்யா — இது ஒங்கொப்பன் வீட்டு ரயிலா?"

உள்ளேயிருந்தவன் கூச்சலிட்டான்: "ஒங்கொப்பன் வீட்டு ரயிலாவே இருக்கட்டும். இங்கே ஒதுங்கக்கூட இடமில்லே. வேறு பெட்டியைப் பாரு."

பதில் சொன்னவனின் வாட்ட சாட்டமான உடம்பைப் பார்த்துவிட்டு அவனிடம் இனிமேல் பேச்சு வார்த்தை வைத்துக் கொள்வது தங்கள் அந்தஸ்துக்கும் உடம்புக்கும் ஆகாது என்று தீர்மானித்தவர்கள் மற்ற பெட்டிகளைப் பார்க்க நகர்ந்தார்கள். ஆதீஸ்வரன் மட்டும் அங்கேயே நின்று கொண்டிருந்தான். ஏனென்றால் இருந்த இரண்டாம் வகுப்புப் பெட்டிகளில் – 'பெண்கள் மட்டும்', 'ராணுவத்தினர் மட்டும்', 'சிட்டிங் ரிஸர்வேஷன்' பெட்டிகள் போக – உள்ளே நின்று கொள்ளச் சிறிது இடமிருப்பதாகத் தோன்றியது இந்தப் பெட்டியில்தான். மற்ற பெட்டிகளிலும் தேடிவிட்ட கூட்டம் திரும்பிக் கொண்டிருந்தது.

மீண்டும் சிலர் அங்கு வந்து அவனோடு சேர்ந்துகொண்டு கதவைத் திறந்து விடச் சொன்னார்கள். உள்ளிருந்த தடியன் அதைச் சட்டை செய்யவே இல்லை. அந்தப் பெட்டியின் ஜன்னல் வழியே குதித்து உள்ளே 'விழுந்துவிட' இரண்டு பேர் செய்த முயற்சி உடனடியாக முறியடிக்கப்பட்டது. ஜன்னலின் விளிம்பில் உட்கார்ந்துகொண்டு முதுகால் ஜன்னலை மூடவும், தலையை வெளியே நீட்டி இடைவெளியை அடைத்துக் கொள்ளவும் ஒரு 'தற்காப்புப் படை' அங்கே தயாராக இருந்தது. உள்ளே நின்றிருந்தவர்களுக்கு இது ஒரு சிறிது மகிழ்ச்சியளித்தது.

எல்லோரும் போய்விட்ட பிறகும் ஆதீஸ்வரன் போகவில்லை. எப்படியாவது அந்தத் தடியனின் இரக்கத்தைச் சம்பாதித்து உள்ளே நுழைந்துவிடுவதென்று தீர்மானம்.

"ஸார்... ப்ளீஸ்... கொஞ்சம் கதவைத் திறங்க. 'கோவிச்சுக்காதீங்க எல்லாப் பெட்டியிலும் கூட்டமாய் இருக்கு. இதை விட்டுட்டா வேறே ரயில் கிடையாது. காலையில் நான் மதுரையில் இருக்கணும். அவசரமான வேலை "-- அவன் குரல் கீழ் ஸ்தாயியில் கெஞ்சியது.

"இந்த டிரெயினில் போகிற எல்லாருக்குமே ஏதாவதொரு அவசர-மான வேலைதான் ! "-- உள்ளே இருந்த ஒருவன் முணுமுணுத்து விட்டுக் கதவை அடைத்து நின்றிருந்த முரடனின் ஆமோதிப்பை எதிர்பார்த்துச் சிரித்தான். எங்கே கடைசி நேரத்தில் இரக்கப்பட்டு முரடன் கதவைத் திறந்து விட்டுவிடுவானோ என்ற அச்சத்தை வெளிப்படுத்தியது அது. அவனையோ, அவன் குறுக்கீட்டையோ முரடன் பொருட்படுத்தவில்லை. அவன் கருமமே கண்ணாக இருந்தான்.

ஆதீஸ்வரன் கடிகாரத்தைப் பார்த்துவிட்டுப் பதறினான். "ஸார் பிளீஸ்... ப்ளீஸ், ரயில் புறப்படப் போகிறது."

ஜன்னல் விளிம்பில் கழுத்தில் அங்கவஸ்திரத்தோடு உட்கார்ந்-திருந்த பெரியவர் அவனைக் கையசைத்துக் கூப்பிட்டார். ஆதீஸ்வரன் நம்பிக்கையோடு திரும்பினான்.

"டீ விற்பவனைக் கூப்பிடுங்க."

அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் 'டீ ... பன்' என்று சத்தமிட்டவாறு விரைந்துகொண்டிருந்த பையனை ஓட்ட ஓட்டமாய்த் துரத்திப் போய்

அழைத்து வந்தான். டீ பையன் அங்கவஸ்திரத்தின் கையில் ஒரு டம்ளரைக் கொடுத்து விட்டு அடுத்த பெட்டிகளுக்குப் பறந்தான்.

"இதென்ன டீயா ..... சுடு தண்ணீர் ! " —முகத்தைச் சுளித்தவாறே அவர் குடிக்கத் தொடங்கினார். ஆதீஸ்வரன் அவரது முகத்தை ஆவலோடு பார்த்தான் "ஸார்—கொஞ்சம் ஒதுங்கிக் கொள்ளுங்க— ப்ளீஸ் ஜன்னல் வழியா உள்ளே வந்துடறேன்."

"அங்கவஸ்திரம் மிக நிதானமாக—கண்ணாடிப் பாத்திரத்தைக் கையாள்வது போல் சர்வ ஜாக்கிரதையாக—வார்த்தைகளைப் பேசினார்." என்ன ஸார் பண்ணுவது? உங்களை உள்ளே வர விடணும்னுதான் எனக்கு ஆசை. ஆனால்—உங்களை உள்ளே வரவிட்டா இங்கிருப்பவங்க என்னை வெளியே தள்ளிடுவாங்க.

ரயிலின் ஒரு கோடியிலிருந்து பச்சை விளக்கு அசைந்தது.

டீக்காரப் பையனிடம் டம்ளரையும், சில்லறையையும் அவசரமாகக் கொடுத்துவிட்டு, அங்கவஸ்திரம்—ஆதீஸ்வரன் மீதுள்ள தன் அனு–தாபத்தைக் காட்டிக் கொண்டது. "ஸார் ரயில் புறப்படப் போகிறது. சீக்கிரம் வேறு எந்தப் பெட்டியிலாவது போய்த் தொற்றிக் கொள்ளுங்க!"

காலையில் ஊரில் நடக்கவிருக்கும் தன் தம்பியின் திருமணத்திற்குப் போய்ச் சேர முடியாதபடி குறுக்கே நிற்கும் தடியர்களைப் பார்த்தான் அவன். அவர்களுடைய இரக்கத்தைப் பெற்றுக் கொள்ளச் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. அங்கவஸ்திரக்காரரின் இரக்கமும் வெறும் ஆறுதல் வார்த்தைகளிலேயே வந்து நின்றது.

போலித்தனமான அந்த அனுதாபம் அவனுக்கு எரிச்சலைத்தான் உண்டாக்கியது.

மனிதர்களுக்குத்தான் எத்தனை பொய்முகங்கள்!

விசிலடித்தது.

உடம்பை ஒரு தடவை முறித்துச் சொடக்கு விட்டுக் கொண்டு 'குப்குப்' என்று புகை விட்டபடி ரயில் புறப்பட்டுவிட்டது.

அவனைப் போலவே 'தொற்றிக் கொள்ள' முடியாமல் போனவர்கள் பிளாட்பாரத்தில் அங்குமிங்கும் பரிதாபத்திற்குரிய பரபரப்போடு அலைபாய்ந்தார்கள். ஏற்கனவே பயணத்தை நிச்சயித்து, இடத்தை

'ரிசர்வ்' பண்ணியிருந்தவர்கள் வெகு சொகுசாக நடந்து போய்த் தங்கள் பெட்டிகளில் ஏறிக் கொண்டு, வழியனுப்ப வந்திருந்தவர்களுக்குக் கையசைத்தார்கள். யார் யாரோ யார் யாருக்கோ விடை கொடுத்தார்கள். "உங்கள் பயணம் மகிழ்ச்சி மிக்கதாய் இருக்கட்டும்! " என்ற ஆங்கில வார்த்தைகள் காற்றில் கரைந்தன.

ரயில் இலேசாக நகர்ந்து கொண்டிருந்தது.

தனக்கு அருகில் இருந்த பெட்டியின் ஜன்னல் விளிம்பை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, மற்றொரு கையால் தன் சிறிய பையைக் கெட்டியாகப் பற்றியபடி ரயிலோடு சிறிது தூரம் நடந்து பார்த்தான் அவன். ரயிலோடு நடந்துகொண்டிருந்த நடையின் வேகம் அதிகரித்துப் பிறகு ஓட்டமாக மாறத் தொடங்கியபோது – ஆதீஸ்வரன் தன் சகல நம்பிக்கைகளையும் இழந்து தடுமாறி நின்றுவிட்டபோது—

எங்கிருந்தோ ஒரு வாலிபன் அங்கு வந்து சேர்ந்தான். அவனுக்குப் பின்னால் தலையில் இரண்டு கனமான சூட்கேஸ்களைத் தூக்கியபடி போர்ட்டர் ஓடி வந்தான். பேன்ட்டும், சிலாக்கும் அணிந்து எடுப்பாகக் காட்சியளித்த அந்த வாட்டசாட்டமான வாலிபன் ரயிலைத் தொடர்ந்து ஓடினான்.

தான் இவ்வளவு நேரம் கெஞ்சியும் இடம் விடாதவர்கள் இந்த வாலிபனுக்கா இடம் கொடுக்கப் போகிறார்கள் — அதுவும் ரயில் இந்த வேகத்தில் போய்க் கொண்டிருக்கும்போது, ஆதீஸ்வரனுக்கு அந்த வாலிபன் மீது அனுதாபம் வந்தது. அவன் பார்த்துக் கொண்டிருக்கு-போதே மின்வெட்டும் நேரத்தில் அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது.

ரயில் ஓடத் துவங்கிவிட்டதால் – ஜன்னல் விளிம்பை மறைத்து உட்கார்ந்திருந்த அங்கவஸ்திரக்காரர் சற்று ஒதுங்கியிருந்தார்.

போர்ட்டரின் தலையிலிருந்த ஒரு சூட்கேஸை எடுத்து அந்த இடைவெளியில் உள்ளே எறிந்தான் அவன். சூட்கேஸ் தங்கள்மீது மோதிவிடக் கூடாதென்பதற்காகச் சிறிது ஒதுங்கிக் கொண்டு உள்ளே இருந்தவர்கள் சத்தம் போட்டார்கள். அதைப்பற்றிக் கவலைப்படாமல் அடுத்த சூட்கேஸையும் உள்ளே எறிந்த அந்தப் புதிய வாலிபன் அதே வேகத்தில் சரேலென்று தானும் பெட்டிக்குள்ளே குதித்தான். குதித்த வேகத்தில் உள்ளே இருந்த இரண்டு, மூன்று பேர் மீது மோத வேண்டியிருந்தது.

"ஏம்ப்பா—உனக்கு அறிவிருக்கா! ஆடு மாடு வந்து விழுந்த மாதிரி உள்ளே விழுறியே !"— என்று ஆளுக்கு ஆள் சத்தம் போட்டார்கள். எதையுமே கவனிக்காத அவன் ரயிலோடு மூச்சு வாங்க ஓடி வந்து கொண்டிருந்த போர்ட்டரை நோக்கி ஒரு ரூபாய் நோட்டை வீசி எறிந்தான்: "எடுத்துக்கோ".

எறிந்திருந்த சூட்கேஸ் மூலைக்கொன்றாய் ஓடியிருந்தது. நின்றிருந்த ஒருவர் கணுக்காலைத் தடவிக் கொண்டிருந்தார்.

அவன் மிகவும் அமைதியாக இரண்டு சூட்கேஸ்களையும் எடுத்து ஜன்னலின் ஓரத்தில் அடுக்கினான். கோபத்தோடு முறைத்துக் கொண்டிருந்தவர்களில் சிலருக்கு ஆவேசம் வந்துவிட்டது.

"ஏம்பா, காது செவிடா? இப்படியா தடித்தனமா உள்ளே வந்து குதிக்கிறது? நாங்கள் மனுஷர்களா தெரியலியா?"

அவர்களை ஒவ்வொருவராகச் சுற்றிப் பார்வையை ஓடவிட்டு மெதுவான குரலில் அவன் சொன்னான் :

"தெரியலே."

"இந்தக் காலத்து இளைஞர்களுக்கே திமிர் ஜாஸ்தீங்க, நம்ம இத்தனை பேரையும் துரும்பாக நினைத்து அவன், பதில் சொல்வதைப் பாருங்க" என்றார் ஒருவர்.

"மிருகத்தனமா சூட்கேஸை நம்மேல் எறிஞ்சுட்டு உள்ளே குதிக்கிறானுக. சரியான பாடம் கற்பிச்சாத்தான் சரிப்படும்", என்றான் கோபக்காரன்.

அவன் பதில் சொன்னான் :

"ஏய் மிஸ்டர் ! இப்படி மிருகத்தனமா நான் நடந்துக்கலேன்னா— உள்ளேயே வந்திருக்க முடியாது. என் பிரயாணம் தடைப்பட்டிருக்கும். நீங்கள்ளாம் அவ்வளவு மனுஷத்தனமா—யாரும் உள்ளே வந்துவிடாதபடி கதவை அடைச்சுக் காப்பாத்திக்கிட்டிருந்தா... என்னைப் போன்றவர்கள் இப்படித்தான் நடக்க வேண்டியிருக்கும். என்னமோ, பாடம் கற்பிக்கணுமின்னியே... என்ன செய்வே ?"

"உன் சூட்கேஸ்களைத் தூக்கி வெளியே வீசி எறிவேன்."

"எறிஞ்சு பாரு.... அடுத்த நிமிஷம் உன்னைத் தூக்கி இதே ஜன்னல் வழியே வெளியே வீசுறேனா இல்லையான்னு தெரிஞ்சுக்குவே."

வார்த்தைகள் தடித்து, கைகள் நீண்டு சண்டை தொடங்கப் போன–போது அங்கவஸ்திரக்காரர் குறுக்கிட்டுப் பேசினார்: "சரி. விடுங்க.... ஏதோ வந்தது வந்துவிட்டான். முன்னாடியே தடுத்திருக்கணும். ஆளையே தூக்கி வெளியே வீசுகிறவனோடு என்ன நியாயம் பேசமுடியும்? நம்ம மரியாதையை நாமதான் காப்பாத்திக்கணும்." பெஞ்சில் வசதியாகச் சாய்ந்து உட்கார்ந்திருந்த பெரியவர் சொன்னார்:" ஆமாங்க. காலம் ரொம்பக் கெட்டுப் போயிட்டது. கும்பிட்டுவிட்டு மன்னிப்புக் கேட்க வேண்டியவன் குஸ்திக்கு நிற்கிறான்".

ஜன்னல் ஓரத்தில் சாய்ந்தபடி நின்றிருந்த அங்கவஸ்திரக்காரர், டீக்காரப் பையனைத் தனக்காக அழைத்து வந்துவிட்டு, "ப்ளீஸ்... ஜன்னல் வழியே உள்ளே வந்துடறேன்," என்று கெஞ்சுதலோடு தன்னிடம் அனுமதி கேட்டவனை நினைத்துப் பார்த்தார். புகை வண்டி புறப்பட்டு ஓடத் தொடங்கியதும், பரிதாபமாக அங்குமிங்கும் பார்த்தபடி, கண் கலங்க அவன் பிளாட்பாரத்திலேயே நின்று விட்ட காட்சி அவரை என்னவோ செய்தது. அவனை உள்ளே விட்டிருக்கலாமே என்று தோன்றியது.

ஆர்ப்பாட்டமாக உள்ளே குதித்து இடம் பிடித்துவிட்டு அத்தனை பேரிடமும் அட்டகாசமாகப் பேசிச் சண்டை போட்டவனை இப்போது பார்த்தார்.

அவன் ஒரு சூட்கேஸை எடுத்துக் கீழே வைத்து அதன் மீது அமர்ந்து பெஞ்சில் விளிம்பில் இலேசாகச் சாய்ந்து கொண்டிருந்தான். இன்னொரு சூட்கேஸைத் திறந்து ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு அதை நிதானமாக மூடி பெஞ்சுக்குக் கீழே தள்ளினான்.

முகத்தில் வியர்த்திருந்த வேர்வையைத் தன் அங்கவஸ்திரத்தால் துடைத்துக் கொண்டு அவர் அந்தப் புத்தகத்தின் அட்டையைக் கவனித்தார்.

'சத்திய சோதனை' என்ற பெரிய பெரிய எழுத்துக்களுக்குக் கீழே 'மகாத்மா காந்தியின் சுயசரிதை' என்ற சின்ன எழுத்துக்கள் பச்சை வண்ணத்தில் வெள்ளைக் கோடுகளாய்ப் பதிந்திருந்தன.

ஏற்கனவே படித்துவிட்டு அடையாளம் வைத்திருந்த பக்கத்தைப் புரட்டி, சத்திய சோதனையில் தான் விட்ட இடத்திலிருந்து மறுபடியும் அமைதியாகப் படிக்கத் தொடங்கினான் அவன்.

மூலம் : "1976 – ஆம் ஆண்டின் பன்னிரண்டு சிறந்த சிறுகதைகள்"
பதிப்பு : ஏப்ரல் 1977
பதிப்பகம் : வானதி, சென்னை


* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – பாட வரிசைப்படி (Note on Vocabulary)

| | | |
|---|---|---|
| (அதைச்) சட்டை செய்யவே இல்லை | – | (அதைப்) பொருட்படுத்தவே இல்லை; did not mind (that) |
| நிரம்பி வழி (v) | – | overflow. |
| முகத்தைச் சுளி (v) | – | வெறுப்பை வெளிப்படுத்துதல் show disdain (in one's face) |
| ஒரு தடவை | – | ஒரு முறை ; ஒரு தரம் ; once |
| இடைவெளி (n) | – | நடுவில் உள்ள இடம் ; gap; intervening space. |
| கவலைப்படாமல் | – | without any concern |
| ஆளுக்கு ஆள் | – | ஒவ்வொருவரும்; (when used distributively) each |
| எறிந்திருந்த (RP) | – | (something that is) thrown |
| முறைத்துக் கொண்டு (vp) | – | (கோபத்தால்) முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு; with glowing / burning |
| ஆவேசம் (n) | – | கோபம்; fury |
| செவிடு (n) | – | deaf |
| தடித்தனம் (n) | – | யோசனையற்ற தன்மை ; rash |
| கண் தெரியலையா ? | – | can't you see ? |
| பார்வையை ஓடவிட்டு | – | having glanced through / having allowed to run the sight |
| திமிர் (n) | – | பிறரை மதிக்காத போக்கு அகம்பாவம் ; insolence; haughtiness |
| பாடம் கற்பி (v) | – | teach a lesson (to a person) |
| சரிப்படும் | – | (only then it will be) alright |

| | | |
|---|---|---|
| வார்த்தைகள் தடித்து (vp) | – | பேச்சு அளவுக்கு மீறி, speech exceeding the limits |
| கும்பிட்டுவிட்டு (vp) | – | after worshipping |
| மன்னிப்பு (n) | – | pardon |
| கெட்டுப்போய் (n) | – | ஒழுக்கமின்றி; gone bad |
| கெஞ்சுதலோடு | – | தயவாக வேண்டுதல்; with begging, pleading |
| தயங்கவைத்தது | – | made (him) feel hesitation |
| மீண்டும் முயற்சி செய். | – | try again |
| பிரயாணிகள் (n) | – | passengers |
| திணி (v) | – | pack; stuff (things in a bag, etc.,) |
| கட்டுக்கடங்காமல் | – | beyond control, uncontrolable. |
| ஒண்டிக்கொள் (n) | – | (ஒருவரின் அருகில் போய்) ஒட்டினாற்போல் இருத்தல் ; cling to; refuge, etc., |
| தீர்மானி(v) | – | decide |
| குறுக்கீடு (n) | – | interference |
| முரடன் (n) | – | நன்றாக வளர்ந்து பெரியதோற்றம் உடையவன்; ruffian |
| பொருட்படுத்தவில்லை | – | did not mind |
| பதறினான் | – | நிதானம் இழந்து அவசரப்பட்டான் ; was in a hurry |
| கோபித்துக்கொள் (v) | – | get angry |
| நம்பிக்கை (n) | – | confidence |
| விரைந்துகொண்டு | – | hurrying |
| ஓட்ட ஓட்டமாய் | – | followed (the person) by running |
| (பெட்டிகளுக்குப்) பறந்தான் | – | (to reach compartment) ran fast (like flying) |
| பொய்முகங்கள் (n) | – | false faces, masks |
| பயணத்தை நிச்சயித்து (vp) | – | (those who have) fixed the travel |
| காற்றில் கரைந்தன | – | disappeared in the air |
| நகர்(v) | – | move |
| வழியனுப்பு (v) | – | bid farewell |
| பையைக் கெட்டியாகப் பற்றியபடி | – | by strongly holding the bag |
| மின்வெட்டு (n) | – | lightning |
| நிகழ்ந்தது | – | it happened |

| | | |
|---|---|---|
| ஆச்சரியம் (n) | – | surprise |
| (நடக்கும்போது) நம்மைத் தாண்டும் பஸ் | – | (நடக்கும்போது) நம்மைக் கடந்துபோகும் பஸ் |
| அன்றாட(ம்) | – | daily ; routine. |
| தொற்றிக் கொள் (v) | – | (ஒரு வாகனத்தில்) வசதியான நிலையில் இல்லாமல் ஒட்டிக் கொள்வதைப் போல ஏறுதல் (அல்) அமர்தல் ; to perch ; to hold precariously onto; hang on |
| பரபரப்பாக (பரபரப்பு + ஆக) | – | அமைதியும் நிதானமும் இழந்த நிலை |
| மதர்ப்போடு (மதர்ப்பு + ஒடு) | – | (உடல்) செழிப்பு, வளம், (of body) healthy sheen of youthfulness |
| செழிப்போடு (செழிப்பு + ஒடு) | – | (உடல்) ஊட்டம், nourishment |
| நடவடிக்கைகள் | – | ஒருவரின் செயல்பாடு, நடந்து கொள்ளும் முறை ; behaviour |
| ஊடுருவு (v) | – | to penetrate, to pierce |
| மோதிவிடு (v) | – | to (complete) dash |
| தடவு (v) | – | to rub, sense by touch |
| ஒதுக்கிப்பிடித்தபடி | – | pushing (the bag) to the side and holding |
| நின்று விடு | – | come to stop |
| வேர்(v) | – | to sweat, to perspire |
| வேர்வை (n) | – | sweat |
| சொன்னவன் (n) | – | the person who said |
| வாட்டசாட்டமான (adj.) | – | நல்ல உயரமும் உயரத்திற்கு ஏற்ற பருமனும் கொண்ட தோற்றம் ; stalwart like; handsome figure; being tall and well built |
| கெட்டியாகப்பற்றியபடி | – | by strongly holding |
| வாலிபன் | – | இளைஞன் |
| மின்வெட்டும் நேரம் (n) | – | fraction of time like lightning |
| குதி (v) | – | jump |
| முறியடி (v) | – | frustrate; over power |
| முறியடிக்கப்பட்டது | – | got diffused / frustrated / overpowered |
| தற்காப்புப்படை (n) | – | self protection force, self defencing force |
| விளிம்பு (n) | – | edge |

| | | |
|---|---|---|
| தடியன் (n) | – | stout fellow |
| சம்பாதி (v) | – | earn |
| கத்திக்கொண்டு | – | shouting |
| தயங்கு (v) | – | hesitate; |
| தயங்கவை | – | make a (person) feel hesitation |
| கைவிடு (v) | – | give up |
| கட்டையான (adj.) | – | short (contextual) |
| கூடைகள் (n) | – | baskets |
| முணுமுணு (v) | – | murmur |
| வெளிப்படுத்து | – | to exhibit |
| குறிக்கீடு (n) | – | interference |
| ரயிலின் ஒருகோடி (n) | – | one end of the train |
| போலித்தனம் (n) | – | பொய்மை நிறைந்த தன்மை ; fake quality |
| எரிச்சல் (n) | – | irritation; angry |
| சொடக்கு (n) | – | snapping/cracking (the fingers) |
| சரேலென்று (adv) | – | instantaneously; all of a sudden (onamatopoec) |
| கெஞ்சு (v) | – | beg |
| கணுக்கால் (n) | – | ankle, (lower leg) |
| ஆர்ப்பாட்டம், (n) அட்டகாசம் (n) | – | கூச்சல், கிளர்ச்சி, demonstration, uproar |
| பதிந்திரு (int.v) | – | having got imprinted |
| அடையாளம் (n) | – | mark |
| புரட்டு (v) | – | turn (the pages) |
| அமர் (v) | – | sit |
| அங்கும் இங்குமாய் | – | here and there (there and here) |
| விசிலடி (v) | – | whistle |
| அவசரத்திலும் | – | even at (the time of ) urgency |
| நிதானித்து (vp) | – | with calmness, cool |
| அனுபவபூர்வமாக | – | by actually experiencing |
| மேலாடை | – | upper garment, tops |
| யுத்த நடவடிக்கை | – | war activities (here quarrel) |
| விடுவிடென்று | – | hurriedly |

| | | |
|---|---|---|
| பழகிவிட்டால் | – | (if one) get acquainted with; be used to; to familiar (பழகிவிடு) with; get trained |
| சுயசரிதை | – | autobiography |
| தள்ளியகதவு | – | the door which got pushed |
| மூச்சுவிடு | – | breath |
| கத்திக்கொண்டு | – | by shouting |
| வேர்த்து வேர்த்து வழிந்தபடி | – | with sweating |
| சாய் (v) | – | lean (against, towards, over) |
| சத்திய சோதனை (n) | – | in search of truth, an autobiography of Mahatma Gandhi (My experiences with truth) |

## ❑ பிறமொழிச்சொற் குறிப்பு (Note on Vocabulary from other Languages)

### 1. ஆங்கிலம்

| | | | | |
|---|---|---|---|---|
| பஸ் | – | Bus | – | பேருந்து |
| ரோடு | – | road | – | சாலை, பெருவழி |
| எக்ஸ்பிரஸ் | – | express | – | விரைவு வண்டி |
| பிளாட்பாரம் | – | platform | – | புகைவண்டி நிலையத்தின் தளம் |
| த்ரி டயர் ஸ்லீப்பர் | – | three tier sleeper | – | மூன்றடுக்குப் படுக்கை (வசதி) |
| ரேஸ் | – | race | – | ஓட்டப்பந்தயம் |
| மிஸ்டர் | – | mister | – | பொதுநிலை ஆள் சுட்டு விளிக்குறிப்பு |
| ஸாரி | – | sorry | – | வருந்துகிறேன் |
| ரிசர்வ் | – | reserve | – | முன்பதிவு |
| ஸிட்டிங்–ரிசர்வேஸன் | – | seat reservation | – | இருக்கை முன்பதிவு |
| கூட்ஸ் (வண்டி) | – | goods wagon | – | பொருள் (ஏற்றும் வண்டி); பாரவண்டி |
| ஸார்... பிளீஸ் | – | sir .... please | – | ஐயா ... தயவுசெய்து |
| போர்ட்டர் | – | porter | – | சுமைதூக்குபவர் |
| சூட்கேஸ் | – | suitcase | – | கைப்பெட்டி; தூக்குபேழை |
| பேண்ட் | – | pants | – | முழுக்கால் சட்டை |

சிலாக் – slack – தொய்வான / தொளதொளப்பான (சட்டை)

பெஞ்ச் – bench – மரம் (அ) கல்லினால் ஆன நீண்ட இருக்கை

2. சமஸ்கிருதம்

யதார்த்தம் – (எதையும் மறைக்காத) வெளிப்படைத்தன்மை realistic manner

மனுஷர் – மனிதர்

கீழ்ஸ்தாயி – (இசை) ஒலி விஸ்தாரத்தில் உள்ள ஏழு ஸ்வரங்களில் கடைசியில் (கீழே) உள்ளதிலிருந்து வெளிவரும் குறைந்த அளவிலான சப்தம்

ஜாஸ்தி – அதிகம்

ஜன்னல் – காற்றும் வெளிச்சமும் வருவதற்காக வைக்கப்பட்டுள்ள திறப்பு; window

குஸ்தி – மல்யுத்தம்; wrestling

அங்கவஸ்திரம் – நீண்ட துண்டு (ஆண்கள் மேலே போட்டுக்கொள்ளும் அடுக்கடுக்கான மடிப்புகளைக் கொண்ட நீண்ட துண்டு

சத்தியசோதனை – உண்மைக்கு ஏற்படும் துன்பம் (கஷ்டம்) (period of trial for truth)

## ☐ பயிற்சி (Exercise)

I அ. இணைத்து எழுதுக (சந்திவிதிகளின்படி) :

*எ.கா.:* i. *வேலை + செய் = வேலைசெய் (n + v)*
ii. *செய் + முடி = செய்துமுடி (vp + v)*
iii. *படி + தொடங்கு = படிக்கத்தொடங்கு (inf. + v)*
iv. *தடி + தனம் = தடித்தனம் (n + suffix).*

| | |
|---|---|
| 1. நிரம்பு + வழி | 7. சிரமம் + படு |
| 2. தொற்று + கொள் | 8. சேர் + கொள் |
| 3. காண் + பிடி | 9. உட்கார் + கொள் |
| 4. ஓடு + போ | 10. கணக்கு + இடு |
| 5. கூச்சல் + இடு | 11. வெளி + படுத்து |
| 6. நில் + விடு | 12. வழி + அனுப்பு |

13. குறுக்கு + இடு
14. மிருகம் + தனம்
15. போலி + தனம்
16. மனுஷன் + தனம்
17. எதிர் + பார்
18. வீசு + எறி
19. கை + விடு
20. முறி + அடி

ஆ. பிரித்து எழுதுக.

எ.கா.: பல்கலைக்கழகங்களிலும் – பல்கலை + கழகம் + கள் + இல் + உம்

சம்பந்தப்படாதவர்களுக்குத்தான் ..................
நின்று கொண்டிருந்தவர்கள் ..................
மோதிவிடக்கூடாதென்பதற்காக ..................
கட்டுக்கடங்காமல் ..................

II அ. பிறவினைச் சொற்களாக (transitive) மாற்றுக.

எ.கா. : இறங்கு – இறக்கு
ஓடு – ஓட்டு
வளர்ந்தது – வளர்த்தது

1. ஒதுங்கு
2. ஏறு
3. சாய்ந்து
4. கரைந்தன
5. உணர்ந்து
6. நிகழ்ந்து
7. துவங்கு
8. கூடு

ஆ. தன்வினைச் (intransitive) சொற்களாக மாற்றுக.

எ.கா. : பதித்திரு – பதிந்திரு
கலக்கு – கலங்கு

1. நிரப்ப
2. உயர்த்து
3. உண்டாக்கியது
4. கற்பி
5. இறக்கிவிடு
6. அடைத்து
7. இடித்து
8. விலக்கு

III அ. இணைச் சொற்கள் (synonyms) தருக.

1. போர்
2. இராணுவம்
3. பிரச்சினை
4. மிருகம்
5. முறியடி
6. கூச்சலிடு
7. கண்டிப்பாக

ஆ. எதிர்ச்சொற்கள் (antonyms) தருக.

1. அவசரம்
2. சிரமம்
3. திற
4. மகிழ்ச்சி
5. அச்சம்

IV. *எழுத்துத் தமிழில் (in formal written Tamil) மாற்றி எழுதுக.*

1. "ஏய் மிஸ்டர்! இப்படி மிருகத்தனமா நான் நடந்துக்கலேன்னா உள்ளயே வந்திருக்க முடியாது. என் பிரயாணம் தடைப்பட்டிருக்கும். நீங்கள்ளாம் அவ்வளவு மனுஷத்தனமா யாரும் உள்ளே வந்து–விடாதபடி கதவை அடைச்சுக் காப்பாத்திக்கிட்டிருந்தா, என்னைப் போன்றவர்கள் இப்படித்தான் நடக்க வேண்டியிருக்கும். என்னமோ பாடம் கற்பிக்கணுமின்னியே... என்ன செய்வே?"

2. "அட – கதவைத் திறய்யா ... என்னமோ ஒன் வீட்டுக் கதவை அடைச்சு வச்சிட்டிருக்கிற மாதிரி "
" ஏய்யா ... இது ஒங்கொப்பன் வீட்டு ரயிலா ? "
"ஒங்கொப்பன் வீட்டு ரயிலாவே இருக்கட்டும். இங்கே ஒதுங்கக்கூட இடமில்லே. வேறு பெட்டியைப் பாரு"

3. "ஸார் ... ப்ளீஸ் ... கொஞ்சம் கதவைத் திறங்க. கோவிச்சுக்காதீங்க– எல்லாப் பெட்டியிலும் கூட்டமாய் இருக்கு. இதை விட்டுட்டா வேறே ரயில் கிடையாது. காலையில் நான் மதுரையில் இருக்கணும். அவசரமான வேலை"

V. *வேற்றுமை உருபு (case-marker) கொண்டு கோடிட்ட இடத்தை நிரப்புக.*

1. ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் நான்காவது பிளாட்பாரத்தில் + ________ இன்னும் பத்து நிமிடங்களில் புறப்பட இருக்கிறது. (ஐ , இருந்து)
2. இரண்டாம் வகுப்புப் பெட்டிகள் ________________ தேடித்தான் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. (ஆல், ஐ ).
3. பழகிவிட்டால் எந்த வேலையும் மனிதன் _________ சுலபமாகி விடுகிறது. (க்கு, இல்)
4. இருந்த இரண்டாம் வகுப்புப் பெட்டிகள் _______________ இந்தப் பெட்டியில்தான் இடமிருப்பதாகத் தோன்றியது (இல், இன்)
5. பையைக் கெட்டியாகப் பற்றியபடி ரயில் _________ சிறிது தூரம் நடந்து பார்த்தான் அவன். (ஒடு, க்கு)
6. போர்ட்டர் ______________ தலையிலிருந்து ஒரு சூட்கேஸை எடுத்து ஜன்னல் இடைவெளியில் உள்ளே எறிந்தான் அவன். (இல், இன்)
7. முகத்தில் வியர்த்திருந்த வேர்வையைத் தன் அங்கவஸ்திரம் ________ துடைத்துக் கொண்டார் அவர். (ஒடு, ஆல்)

VI அ. *இக்கூற்றுகள் உணர்த்தும் பொருளை (ஒரு தொடரில்) எழுதுக.*

1. "ஏய் மிஸ்டர் கண் தெரியலையா?"
2. "அடுத்த பெட்டியைப் பார்க்கிறது"
3. "உள்ளே விழுந்து விட இரண்டுபேர் செய்த முயற்சி உடனடியாக முறியடிக்கப்பட்டுவிட்டது."
4. "அவன் கருமமே கண்ணாயிருந்தான்."
5. "ரேஸில் ஓடப்போகிற ஒரு குதிரையின் மதர்ப்போடு – ஆற்றங்–கரையில் வளர்ந்த ஒரு செடியின் செழிப்போடு விளங்கிய அவள்"

ஆ. *பாடப்பகுதி உணர்த்தும் செய்தியினைப் பொருள் சிதைவு இன்றி* (without any loss of information) *எளிமையான சிறு சிறு வாக்கியங்களாக எழுதுக.*

1. பெட்டி கூடைகளை இடுக்கிக்கொண்டு கையில் குழந்தைகளையும் பிடித்து இழுத்துக்கொண்டு, கட்டை கட்டையான ஆண்களுக்கு மத்தியில் சில பெண்பிள்ளைகள் பரிதாபமாகச் சிக்கிக் கொண்டிருந்–ததைப் பார்த்தபோது – மூச்சுவிட முடியாமல் கால்களுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டு குழந்தைகள் கத்தியபோது – கூட்ஸ் வண்டிக்கும் பிரயாணிகள் வண்டிக்கும் என்ன வித்தியாசம் என்று அவன் யோசித்தான்.
2. பதில் சொன்னவனின் வாட்டசாட்டமான உடம்பைப் பார்த்துவிட்டு அவனிடம் இனிமேல் பேச்சுவார்த்தை வைத்துக் கொள்வது தங்கள் அந்தஸ்துக்கும் உடம்புக்கும் ஆகாது என்று தீர்மானித்தவர்கள் மற்ற பெட்டிகளைப் பார்க்க நகர்ந்தார்கள்.

VII. *பெயரெச்சம்* (RP), *வினையெச்சம்* (VP), *மற்றும் கட்டுப்பாட்டுச் சொற்கள்* (conditional words) *அடங்கிய வாக்கியங்களைக் கவனிக்க. அவற்றைப்–போல வேறு வாக்கியங்களைச் சொந்தமாக எழுதுக.*

1. அவனைத் திட்டுவதற்குத் தயாராக அவள் செய்திருந்த யுத்த நடவடிக்–கைகள் – அவனது பார்வையின் ஊடுருவல்களைப் பார்த்துவிட்டுப் பணிந்து கொடுத்தன.
2. கையிலிருந்த சிறிய பைய்ய ஒதுக்கிப் பிடித்தபடி விடுவிடென்று நடந்தவன், கூட்டம் குறைவாக இருந்த அந்த இரண்டாம் வகுப்புப் பெட்டியில் ஏறினான்.
3. ஏற்கனவே பயணத்தை நிச்சயித்து இடத்தை 'ரிசர்வ்' பண்ணி–யிருந்தவர்கள், வெகு சொகுசாக நடந்துபோய்த் தங்கள் பெட்டிகளில் ஏறிக்கொண்டு வழியனுப்ப வந்தவர்களுக்குக் கையசைத்தார்கள்,

4. ஆர்ப்பாட்டமாக உள்ளே குதித்து இடம்பிடித்துவிட்டு அத்தனை பேரிடமும் அட்டகாசமாகப் பேசிச் சண்டை போட்டவனை இப்போது பார்த்தார்.
5. உங்களை உள்ளே வரவிட்டா இங்கிருப்பவங்க என்னை வெளியே தள்ளிவிடுவாங்க.

VIII. இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக. (Explain with reference to context).

1. "அவனுக்குக் கண் நன்றாகவே தெரிகிறது என்பதை அவள் அனுபவ பூர்வமாக உணர்ந்து கொள்ள நேர்ந்தது. மேலாடையைச் சரிசெய்து கொண்டாள்"
2. "பை மோதியதற்குப் பதிலாகத் தானே மோதியிருந்தால் அவள் சந்தோஷப்பட்டிருக்கலாம்."
3. "டீ பையன் அங்கவஸ்திரத்தின் கையில் ஒரு டம்ளரைக் கொடுத்து–விட்டு அடுத்த பெட்டிகளுக்குப் பறந்தான்."
4. "ஏம்ப்பா! உனக்கு அறிவிருக்கா! ஆடு மாடு விழுந்த மாதிரி உள்ளே விழுறியே?"
5. "ஒரே ஒரு ஆள் தானுங்க."
6. "சம்பந்தப்பட்டவர்களுக்கு அது ஒரு வேலை. சம்பந்தப்படாதவர்–களுக்குத் தான் அது ஒரு பிரச்சினை."
7. "என்னமோ, பாடம் கற்பிக்கணுமின்னியே.. என்ன செய்வே? "

IX. சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

| | |
|---|---|
| பிளாட்பாரத்திலிருந்து | நிரம்பிவழி |
| அனுபவபூர்வமாக | பரிதாபமாக |
| வாட்டசாட்டமான | பொருட்படுத்தவில்லை |
| தொற்றிக்கொள் | மின்வெட்டும் நேரத்தில் |
| யார்யாருக்கோ | கவலைப்படாமல் |
| அட்டகாசமாக | பதிந்திருந்தன |
| துரும்பாக நினைத்து | மிருகத்தனமா |
| தேடிப்பிடிக்க | அங்குமிங்குமாய் |
| கண்ணாடிப் பாத்திரத்தைக் கையாள்வதுபோல் | |

X. இரண்டு வாக்கியங்களில் விடை எழுதுக.

1. எதற்காக ஆதீஸ்வரன் மதுரை போகிறான்?

2. கூட்ஸ் வண்டிக்கும் பிரயாணிகள் வண்டிக்கும் என்ன வித்தியாசம் என்று அவன் நினைத்தான்?
3. அங்கவஸ்திரக்காரர் கடைசியில் ஆதீஸ்வரனைப் பற்றி என்ன நினைத்தார்?
4. கடைசியாக 'சத்திய சோதனை' என்ற புத்தகத்தைக் குறிப்பிடுவதன் நோக்கம் என்ன?

## ❑ பொதுக் குறிப்பு (Note on General Information)

1. *(மனிதர்கள்) பரபரப்பாகப் பறந்து கொண்டிருந்தார்கள்* –
   *அமைதியற்ற நிலையில் அங்குமிங்கும் விரைவாகச் சென்று கொண்டிருந்–தார்கள்*; (people) hurriedly moving here and there. [*A compound construction*]
2. *குதிரையின் மதர்ப்பு* –
   *(ஓடப் போகிற) குதிரையின் கம்பீரமான தோற்றப் பொலிவு*; elegance; commanding look. [*Given for comparision*]
3. *ஆற்றங்கரையில் வளர்ந்த செடி* –
   கொழு கொழுவென்று செழுமையாக இருக்கும் செடி; chubby.
   [*Given for comparision*]
4. *பார்வையின் ஊடுருவல்கள்* –
   *(எதிரே இருப்பவரின் மனதில் உணர்வு ஏற்படும்படியாகக் கூர்ந்து பார்க்கும்) பார்வையின் துளைத்தல்கள்*; the penetrations of look.
   [*Used in an idiomatic sense*]
5. பை மோதியதற்குப் பதில் தானே மோதியிருந்தால் அவள் சந்தோஷப்–பட்டிருக்கலாம் –
   'தானே' என்பது ஆதீஸ்வரனைக் குறிக்கிறது. ['*தானே*' *is anophora*]
6. பத்திரிகைக் கட்டோடும், டீயோடும் பன்னோடும் –
   with bundles of papers, tea and bun. [*A complex construction*]
7. *'சம்பந்தப்பட்டவர்களுக்கு அது ஒரு வேலை. சம்பந்தப்படாதவர்களுக்குத் தான் அது ஒரு பிரச்னை'* –
   to those concerned it is a work, and to the unconcerned it is a problem.
   [*Consisting of only noun phrases*]
8. 'கூட்ஸ் வண்டிக்கும் பிரயாணிகள் வண்டிக்கும் என்ன வித்தியாசம்' –
   ஒழுங்கு முறையற்ற / கட்டுப்பாடு அற்ற வகையில் மனிதர்கள் கூட்டம் நிரம்பியிருந்தது. [*A complex construction*]

9. ஓரமாக ஒண்டிக்கொள்வது –
ஓரமாக ஒளிந்து கொள்வது ; இருக்கிற இடத்தைப் பகிர்ந்து கொள்வது. [*Adverbial construction*]

10. அந்தஸ்துக்கும் உடம்புக்கும் ஆகாது –
எதிர்த்துப் போராட முடியாது என்ற பொருளில் கூறப்படுகிறது. [*A complex construction*]

11. 'இரண்டு பேர் செய்த முயற்சி உடனடியாக முறியடிக்கப்பட்டது'–
சாதாரணமாகப் போர்க்களத்தில்தான் இம்மாதிரி நடக்கும். 'முறியடிப்பது' என்பது எதிர் அணியினர் செய்யும் எல்லா முயற்சிகளையும் தடுத்துவிடுவது.

12. கடிகாரத்தைப் பார்த்துவிட்டுப் பதறினான் –
இரயில் புறப்படும் நேரம்வரைத் தனக்கு இடம் கிடைக்கவில்லையே என்று மனம் துடித்தபடி இருந்தான். [*A complex construction*]

13. ஓட்ட ஓட்டமாய்த் துரத்திப் போய் அழைத்து வந்தான் –
(டீக்காரனை) 'மிக வேகமாய்ப் பின் தொடர்ந்து ஓடி அழைத்து வந்தான்' என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.
[*A consruction with reduplicative structure*].

14. கண்ணாடிப் பாத்திரத்தைக் கையாள்வது போல் –
[*இது ஓர் உவமைத் தொடர் ; simile* ]

15. திருமணத்திற்குப் போய்ச் சேரமுடியாதபடி குறுக்கே நிற்கும் தடியர்கள் –
ரயிலில் ஏறிக்கொள்ளுவதற்கு வழி விடாதவர்கள் என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. [*A complex construction*]

16. உடம்பை ஒரு தடவை முறித்துச் சொடக்கு விட்டுக்கொண்டு 'குப் குப் ' என்று புகைவிட்டபடி ரயில் புறப்பட்டது –
[*இது ஓர் உருவக வாக்கியப்பகுதி ; Metaphorical statement ; A complex construction*]

17. யார் யாருக்கோ விடை கொடுத்தார்கள் –
தங்கள் உறவினர்களுக்கு மட்டுமல்ல, மற்றவர்களுக்கும் விடை கொடுத்தார்கள். அதாவது ரயிலில் செல்லும் முன்பின் தெரியாத மற்ற ஆண்கள் பெண்களுக்கும் சேர்த்து கையசைத்து வழியனுப்புதல். [*Construction with reduplicated forms*]

18. சூட்கேஸை எடுத்து அந்த இடைவெளியில் உள்ளே எறிந்தான் –
'முரட்டுத்தனமாக பண்பற்ற முறையில் அதே சமயம் விரைவாகச் செய்தான்' என்று பொருள் படும். [*A complex construction*]

19. சரேலென்று தானும் பெட்டிக்குள் குதித்தான் –
(வாலிபன்) எதையும் பொருட்படுத்தாமல் விரைவாகக் குதித்து இரயில் பெட்டிக்குள் சென்றான் என்று பொருள்.
[*'சரேல்' என்பது – onamatopoec form*]

20. நின்றிருந்த ஒருவர் கணுக்காலைத் தடவிக் கொண்டிருந்தார் –
*(ரயில் பெட்டிக்குள் எறியப்பட்ட சூட்கேஸ் மோதியதால் ஏற்பட்ட வலி காரணமாக) நின்றிருந்தவர் கணுக்காலைத் தடவிக் கொண்டிருந்தார் என்று பொருள்.*

21. பாடம் கற்பித்தல் –
அடித்து உதைத்து தவறினைச் சுட்டிக்காட்ட வேண்டும் எனப் பொருள்– படும். [*இங்கே மரபுத் தொடராக வந்துள்ளது*]

22. நீங்கள்ளாம் அவ்வளவு மனுஷத்தனமா... இப்படித்தான் நடக்க வேண்டியிருக்கும் – ரயிலில் உள்ளேயிருந்தவர்கள் நல்ல பண்புள்ள மனிதர்கள் அல்ல. அவர்களிடம் பண்புடன் நடந்து எதையும் சாதிக்க முடியாது என்பதாகும். [*A complex construction with conditional clause*]

23. சத்திய சோதனை – அன்றாட வாழ்க்கையில் நியாயத்துக்கு / உண்மைக்கு ஏற்படும் சிக்கலை மறைமுகமாகக் குறிக்கிறது இப்பாடப்பகுதி.
[*A symbolic representation of the day to day incidents*]

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

அன்றாடப் பயண வாழ்க்கையில் இயல்பாகப் பயன்படுத்தப்படும் சொற்களையும் தொடர்களையும் பிரதிபலிக்கிற விளக்க நடை (descriptive style) யிலும், 'ஏன் மிஸ்டர்!' போன்ற பிறமொழிச் சொற்களடங்கிய பேச்சு மொழி கலந்து உள்ளதை உள்ளபடியே சித்தரிக்கும் விவரிப்பு நடை (Narrative style)யிலும் அமைந்திருக்கிறது இப்பாடப்பகுதி. கதை அல்லது நிகழ்ச்சியின் தொடர்ச்சி அறுபடாதவகையில் உவமைகள் மற்றும் உருவகங்களுடன் ஏராளமான வாக்கியங்கள் இப்படி காணப்படுகின்றன. பொதுவாக, படைப்–பிலக்கியங்களில் கதை அல்லது நிகழ்ச்சித் துணுக்கு வேகமாக ஓடும்போது இந்நடை கையாளப்படுகிறது.

## 2. தங்கைக்கு

### மு. வரதராசன்

*[மு.வ. என்று பலராலும் அறியப்படும் மு. வரதராசனார் அவர்கள் பச்சையப்பன் கல்லூரியிலும் சென்னைப் பல்கலைகழகத்திலும் தமிழ்ப் பேராசிரியராக இருந்து, பின்னர் மதுரைப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராகவும் பணியாற்றியவர். சங்க இலக்கியத்தில் இயற்கை என்ற பொருளில் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். பல துறைகளில் எழுதும் வல்லமை உள்ளவர். இலக்கியம், இலக்கணம், மொழியியல் ஆகிய துறைகளில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார். பல நாவல்களும் சிறுகதைகளும், நாடகமும் எழுதியுள்ளார். திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் (ஆராய்ச்சி), மொழிநூல் (மொழியியல்), காந்தி அண்ணல் (வாழ்க்கை நூல்), தம்பிக்கு (கடிதம்), கள்ளோ காவியமோ? (நாவல்), ஓவச்செய்தி (ஆராய்ச்சி), ஆகியவை சென்னை அரசினர் பரிசு பெற்றவை. இவரது "அகல் விளக்கு" என்ற நாவலுக்கு சாகித்திய அகாடமிப் பரிசு கிடைத்துள்ளது. ]*

### கடிதம்

*அன்புள்ள தங்கை,*

தம்பிக்கு எழுதுவது போல் உனக்கு நீண்ட கடிதங்கள் எழுத நான் எண்ணியதில்லை. ஆனால் அத்தகைய கடிதங்களை எழுதும்படியாக நீயே செய்துவிட்டாய்.

"பொதுவான அறிவுரைகள் கூறுவதில் பயனில்லை. உங்கள் வாழ்க்கையிலிருந்தும் உங்கள் நண்பர்களின் வாழ்க்கையிலிருந்தும் நீங்கள் பெற்ற அனுபவங்களைத் தெரிவியுங்கள்" என்று எழுதியிருக்கிறாய். வாழ்க்கையில் வரக்கூடிய சிக்கல்களைப் பற்றியும் அறிந்து கொள்ள விரும்புகிறாய். இவ்வாறு நீ எனக்கு எழுதிய கடிதம் உன்னுடைய முற்போக்கைத் தெரிவிக்கிறது. நீ கண்மூடியாய் நில்லாமல் கண் திறந்து வாழ விரும்புவதைக் காட்டுகிறது, செம்மறியாட்டாகச் செல்லாமல் சிந்தனைப் பிறவியாக வளர்வதைப் புலப்படுத்துகிறது. கடிதம் எனக்குப் பெருமகிழ்ச்சி அளித்துள்ளது. உங்கள் இல் வாழ்க்கையைப் பற்றி அம்மா என்னிடம் சொன்னபோது உண்டான மகிழ்ச்சியைவிட இப்போது பெரிய மகிழ்ச்சி அடைகிறேன்.

பழங்காலப் பெண்களைப் போல் உரிமையுணர்ச்சியோடு வாழ்வது நல்லதா என்று கேட்டிருக்கிறாய். எனக்கு விடை சொல்லத் தெரியும். ஆனால் எப்படி எழுதுவது என்று எண்ணும்போது தயங்குகிறேன். எவ்வளவோ எழுத வேண்டும் என்று விரிவான பல எண்ணங்களும் எழுகின்றன.

சிறுவர்களுக்கு, வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று தனித்தனியே பிரித்துப் பார்த்தே அறிவு வளர்கின்றது. பசி உணவு இந்த இரண்டும் ஒன்றற்கொன்று நேர்மாறானவை என்று எண்ணி விடுகிறார்கள். அதனால் பசி எடுப்பது நல்லதா, வயிறாரச் சாப்பிடுவது நல்லதா என்று உடனே கேட்டு விடுகிறார்கள். உன் கேள்வியும் ஏறக்குறைய அதே போல்தான் உள்ளது.

விடை சொல்லட்டுமா? இரண்டும் நல்லவைகளே. அடங்கியும் நடக்க வேண்டும், உரிமையோடும் வாழ வேண்டும்.

இதைப் படித்ததும் நீ என்னைப் பற்றி என்னவோ எண்ணுவாய். ஆனால் உண்மை இதுதான். பசி எடுக்கின்ற வயிறு உள்ளவர்கள் தான் வயிறாரச் சாப்பிட முடியும். அடங்கி நடக்கின்றவர்கள்தான் உரிமையின் நன்மையை அனுபவிக்க முடியும்.

அடங்கி நடக்கலாம். ஆனால் பிறருடைய அடக்கு முறைக்கு அஞ்சி இரையாகக் கூடாது, நாமே அன்புள்ளவர்களின் அன்புக்கு அடங்கி நடக்கலாம். ஆனால் மனம் போன போக்காய் வாழக்கூடாது, கடமையை ஒழுங்காய்ச் செய்து உரிமையைக் காத்துக் கொள்ளலாம்.

இன்று பலர் தெளிவு இல்லாத கல்வியால் தவறாக எண்ணுகிறார்கள். தான்தோன்றித்தனத்தை உரிமை என்று கருதிக் கெடுகிறார்கள். விட்டுக் கொடுத்து இணங்கி நடப்பதை அடிமைத்தனம் என்று இகழ்கிறார்கள்.

என் நெடுங்கால அனுபவத்தின் பயனாக நான் தெரிந்து கொண்ட உண்மையை எழுதுகிறேன். கடமைகளை ஒழுங்காகச் செய்கின்றவர்கள் மட்டுமே உரிமையை அனுபவிக்க முடியும். மற்றவர்கள் பிறர் உரிமையில் தலையிட்டுக் கெடுத்து இறுதியில் தம் உரிமையையும் இழந்து விடுவார்கள். ஆகையால் கடமையை முதலில் காத்து, உரிமையை இரண்டாவதாக வைத்து நடப்பது எளிய நெறியாகும். இது இந்த நாட்டு மக்கள் மட்டும் கண்ட நெறி என்று எண்ணாதே. மேற்கு நாட்டு அறிஞர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்துப் பார். உரிமைக்குப்

பெயர் பெற்ற அந்த நாடுகளிலும் நான் சொல்லும் உண்மை விளங்கு-வதை உணரலாம்.

இன்னொரு தவறு உள்ளது. இப்படிப் பெண்களுக்குச் சொல்லி ஏமாற்றி ஆண்கள் மட்டும் உரிமையோடு வாழப் பார்க்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அது உண்மை அல்ல. நல்ல குடும்பங்களாக வாழ்-கின்றவர்களிடையே நான் பார்த்து வருகிறேன். மனைவி கணவனுக்கு விட்டுக்கொடுத்து வாழ்வது போலவே, கணவனும் பலவகையில் மனைவிக்கு விட்டுக்கொடுத்து வாழ்க்கை நடத்துகிறான். இளமையில் இல்வாழ்க்கையின் தொடக்கத்தில் ஆணின் அடக்குமுறை காணப்படும் குடும்பங்களிலும், வரவர அது குறைந்து அன்பு வாழ்க்கையே வளர்கின்றது. கணவனுக்கு வயது ஆக ஆக அவன் மனைவிக்கு விட்டுக் கொடுப்பதையே மிகுதியாகக் காண்கிறேன். நெடுங்கால அனுபவத்திற்குப் பிறகு அவன் கற்றுக் கொண்ட பாடம் இது என்று தோன்றுகிறது.

அன்புக்காக விட்டுக் கொடுத்து இணங்கி நட, உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே என்று நான் சொல்வேனானால், அது உனக்கும் உன்னைப் போன்ற பெண்களுக்கும் மட்டும் சொல்லும் அறிவுரை என்று எண்ணாதே. என்னுடன் பழகும் நண்பர்களான ஆண்கள் பலருக்கு இதையே நான் சொல்லியிருக்கிறேன். 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்னும் நாலடியாரின் பொன்மொழி இல்வாழ்க்கையின் மந்திரமாக விளங்க வேண்டும். ஒருவேளை கணவனும் இன்னொருவேளை மனைவியுமாக விட்டுக் கொடுத்தால்தான் வாழ்க்கை எளிதாக நடக்கும்.

என்னுடன் படித்த கனகா – பக்கத்துத் தெரு வழக்கறிஞர் மகள் கனகாவைப் பற்றி உனக்கு நினைவு இருக்கும் என நம்புகிறேன். எங்களோடு படித்து வந்த அந்தக் காலத்திலேயே உரிமை மிகுந்த பெண்ணாக இருந்தாள். குடும்பத்தாரும் அப்படியே வளர்த்து வந்தார்கள். அவளுடைய வாழ்க்கை என்ன ஆயிற்று தெரியுமா அவள் தாய்வீட்டில் வாழ்கிறாள்; கணவன் தனியே மனம் போன போக்காய் காலம் கழிக்கிறான். கனகா இனிமேல் பி. டி. படித்து ஆசிரியர் தொழிலுக்குப் போக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவளுடைய வாழ்க்கை இப்படி ஆனதற்கு என்ன காரணம் சொல்லுகிறாய்? அவளுக்கு அழகு, அறிவு முற்போக்கு, திறமை எல்லாம் இருக்கின்றன. விட்டுக்கொடுத்தல் என்ற ஒன்று மட்டும் இல்லை. அவளுடைய கணவனைப் பற்றி எனக்கு நேரே

ஒன்றும் தெரியாது. அந்த ஊரான் ஒருவனோடு நெருங்கிப் பழகிக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அவனும் அறிவு திறமை எல்லாம் உடையவனாம். ஆளைப் பார்த்திருக்கிறேன். அழகான தோற்றமும் உண்டு. இவ்வாறு இருந்தும் இருவரும் வாழத் தெரியாதவர்கள் ஆகிவிட்டார்கள். இனி என்ன செய்வது? இனிமேல் இவர்களின் மனத்தில் அன்பும் காதலும் வளர்வது அருமை. மனம் அப்படிப் பட்டது. ஒரு முறை பிரிந்து நின்ற பிறகு, வெறுப்பையும் பகையையுமே மனம் வளர்த்துக் கொள்ளும்; எதைக் கண்டாலும் எதைக் கேள்விப்பட்டாலும், அவற்றை எல்லாம் வெறுப்புக்கும் பகைக்குமே எருவாக்கிக்க கொள்ளும். இந்த வாழ்க்கையைப் பற்றி நான் பலநாள் எண்ணியது உண்டு. இருவருமே உரிமையை முன்னே வைத்துப் போராடுகின்றவர்கள் என்பது என் கருத்து. கனகாவின் கணவனைப் போன்ற ஆண்களும் பலர் இருக்கிறார்கள். அந்தக் குடும்பங்கள் எப்படியோ அமைதியாக நடந்து கொண்டிருக்கின்றன. காரணம் அந்தக் குடும்பங்களில் பெண் இப்படி இருந்தால் ஆண் விட்டுக் கொடுப்பவனாக இருக்கிறான்; ஆண் இப்படி இருந்தால் பெண் விட்டுக் கொடுப்பவளாக இருக்கிறாள். உரிமை வெறி மிகுந்த பெண்ணோ, ஆணோ நாளடைவில் பழகிப் பழகித் தம் உரிமை வெறியைக் குறைத்துக் கொள்கிறார்கள். தீயும் நீரும் உறவு கொண்டு ஒன்றை ஒன்று குறைப்பது போல் ஆகின்றது அவர்களின் வாழ்க்கை. ஆனால் கனகாவும் கனகாவின் கணவனும் இரண்டு ஆண்டுகள் வாழ்ந்த வாழ்க்கை, தீயும் தீயும் உறவு கொண்டு பெருந்தீ ஆகிய கதை என்று கருதுகின்றேன். அவர்கள் திருமணமான தொடக்கத்தில் மிகவும் அன்பாக வாழ்க்கையைத் தொடங்கியிருப்பார்கள். இதில் எள்ளளவும் ஐயுற வேண்டா. ஒரே வீட்டில் பல மாதம் கூடிவாழவேண்டி ஏற்பட்ட பிறகுதான் வெறுப்பு வளர்ந்திருக்கும். அதற்குப் பிறகுதான் உரிமைப் போராட்டம் தலையெடுத்து வம்பு செய்திருக்கும்.

இரயிலில் பயணம் செய்யும் போது பக்கத்தில் உள்ளவர்களோடு எவ்வளவோ இணங்கி அன்பாக நடக்கிறோம். புதுமையான சிலமணி நேரப் பழக்கம் ஆகையால் அப்படி நடக்கிறோம். அவர்களின் பண்பு-களும் கருத்துக்களும் நமக்கு நேர்மாறானவைகளாக இருந்தபோதிலும் சில மணி நேரப் பழக்கம்தானே என்ற அன்போடு இணங்கி நடக்கிறோம். பல நாள் பழக நேர்ந்தால் அப்படி நடக்க மாட்டோம். அப்போது வெறுப்பும் பகையும்-தலைகாட்டும். கனகாவும் அவளுடைய கணவனும் திருமணம் ஆகாமலே காதலர்களாகப் பழகுவதாக இருந்தால்

இன்னும் நெடுங்காலம் அன்போடு வாழ்ந்திருப்பார்கள். திருமணம் ஆகியிருந்தாலும் ஒரே வீட்டில் ஒரே ஊரில் வாழாமல் தனித்தனியே தொழில் செய்து வெவ்வேறு இடங்களில் வாழ்ந்து விடுமுறை நாட்களில் மட்டும் கூடிப் பழகும் நிலைமை இருந்திருந்தால், அவர்கள் இன்னும் பல ஆண்டுகள் அன்போடு காலம் கழித்திருக்க முடியும். எதிர்காலத்தில் படித்தவர்கள் பலருடைய வாழ்க்கை அப்படித்தான் கழியும் என்று தோன்று–கிறது. அப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்கிறவர்களுக்கு என்னுடைய இந்த அறிவுரை வேண்டியதில்லை. நானும் நீயும் சொல்லாமலே அவர்கள் ஒருவர்க்கு ஒருவர் விட்டுக் கொடுத்து நடப்பார்கள். பிரிந்து பிரிந்து குறைந்த நேரம் பழகுகின்றவர்கள் இயற்கையாகவே விட்டுக் கொடுத்து அன்போடு பழகுகின்றார்கள். பழக்கம் ஒரே இடத்தில் நின்று நீடிக்கும்–போது தான், ஒருவர் குறை மற்றொருவர்க்குத் தெரிகிறது, பிறகு வெறுப்பு வளர்கின்றது, அதன் பிறகு உரிமைப் போராட்டம் எழுகின்றது.

'பழகப் பழகப் பாலும் புளிக்கும்' என்று ஒரு பழமொழியை முதல் முதலில் அமைத்தார்களே, அவர்கள் வாயில் சர்க்கரை இடவேண்டும். எவ்வளவு பெரிய உண்மையை எவ்வளவு எளிதாகச் சொல்லிவிட்டார்கள்! இதில் பாலின்மேல்வைத்து விளக்கிய உண்மையையே, பழைய சங்கப்பாட்டு ஒன்றில் தேனின் மேல் வைத்து, "ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்" என்று சொல்லியிருக்கிறார்கள். இந்தப் பாட்டைப் பாடிய புலவர் குடும்ப வாழ்க்கையில் வரும் சிக்கல்களைக் குறித்தே பாடியிருக்கிறார். கணவன் வேறொருத்தியை நாடுவதை அறிந்து மனைவி மனம் நொந்து வருந்தும் நிலையில் அவன் வீட்டிற்குத் திரும்பி வரும் வேளையில், மனைவிக்கு உயிர்த் தோழியாக உள்ள ஒருத்தி அவனுக்கு அறிவுரை கூறுவதாகப் பாடியுள்ளார். "அய்யா! காதல் வாழ்வின் தொடக்கத்தில் எவ்வளவு அன்போடு உனக்கு உதவி செய்தோம். அப்படிப்பட்ட அன்பை மறந்து விட்டு, நீ இப்போது இவ்வாறு நடக்கிறாய். விடாமல் பருகுவோரின் வாயில் தேனும் புளிக்கும் என்பது பொருத்தமாக உள்ளது. அப்படி வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு எம்மைவிட்டு நீங்குவதானால், தாய் வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்து விடு. பிறகு உன் விருப்பம் போல் நட" என்று தோழி அவனிடம் சொல்கின்றாள். பலமுறை எண்ணிப் பார்த்து மனத்து இயல்பை உணர்வதற்குத் துணை செய்யும் பாட்டு இது.

இதைப் பற்றி எழுதும் போது, எனக்கு மற்றொரு நல்ல நினைவும் வருகின்றது. தமிழ் இலக்கியத்தில் தோழி என்று வரும் இவளுடைய திறமை போற்றத்தக்கதாக உள்ளது. காதலர் இருவர் நெருங்கி உறவு

கொள்வதற்குக் காரணமாக விளங்கும் இவள், அவர்களை எத்தனை முறை எத்தனை காரணங்களால் பிரிக்க முயல்கிறாள் தெரியுமா? அவர்களைப் பிரித்து அடியோடு ஒதுக்கிவிட வேண்டும் என்பது அவள் நோக்கமா? இல்லை. தடை இல்லாமல் இடர் இல்லாமல் கூடிப் பழகினால் வாழ்க்கை சுவைக்காமல் போய் விடுமே என்று அஞ்சி, அடிக்கடி ஒருவரை ஒருவர் காணாதபடி இடையிடையே பிரித்து வைக்கிறாள். அவ்வாறு செய்வதால், காணவேண்டும் என்று ஏங்கும்படியான நிலைமையை உண்டாக்கி, அந்த ஏக்கத்தால் காதல் வளரும்படியாகச் செய்கின்றாள். அவள் மனத்தின் தன்மையை நன்றாக உணர்ந்தவள் என்று கூற வேண்டும்.

நம் நாட்டில் திருமணமான தொடக்கத்தில் மனைவி கணவனோடு இருக்கக் கூடாது என்று பிரிக்கும் வழக்கம் ஒன்று இருந்து வருகிறது. அதுவும் இவ்வகையான நன்மைக்கே என்று எண்ணுகிறேன். அறிஞர் எச். ஜி. வெல்ஸ் வாழ்க்கையில் ஒரு குறிப்பு – அவரே எழுதிய குறிப்பு ஒன்று என் நினைவுக்கு வருகிறது. அவருடைய இரண்டாம் மனைவி ஒரு முறை வாழ்க்கையில் மிகச் சலித்தபோது, கணவருக்குச் சொல்லி அனுமதி பெற்றுத் தனியே பிரிந்து சில வாரங்கள் வாழ்ந்தாராம். அப்போது சென்று தங்கியிருந்த இடத்தையும் கணவருக்குத் தெரிவிக்க–வில்லையாம்.

பழகி வாழும் வாழ்க்கை எப்படிப்பட்டது என்பதையும் மனம் எப்படிப்பட்டது என்பதையும் எண்ணிப்பார். கணவன் மனைவி என இருவர் ஓரிடத்தில் நிலையாகப் பழகி வாழும் வாழ்க்கை இப்படிப்பட்டது என்றால், அதில் உரிமையை முதலில் வைத்து நடப்பவர் தொல்லைப்–படுவதைக் கேட்க வேண்டுமா?

அதனால் உரிமையை இழந்துவிட வேண்டும் என்று நான் கூறவில்லை. அது முதலில் வேண்டா என்பதே நான் கூறுவது. அன்போடு கடமையைச் செய்தல் முதலில் இருக்க வேண்டும். அப்படி இருந்தால், மனத்தின் பேயாட்டத்திற்கு இடம் இருக்காது, தவற வாய்ப்பு நேராது; நேர்ந்தாலும் விழிப்போடு தற்காப்புத் தேடிக் கொள்ளலாம்.

இல்வாழ்க்கைக்கு மட்டும் இந்த அறிவுரை என்று எண்ண வேண்டியதில்லை. நீ அங்கே யாரேனும் ஒரு பெண்ணோடு நட்புக்

கொண்டு நெருங்கிப் பழகும்போதும் நட்பு நீடிக்க வேண்டுமானால் இதுதான் வழி. நான் இந்த விதியைப் போற்றி நடப்பதால்தான் நண்பர் அருளப்பரோடு இளமை முதல் இன்று வரையில் தொடர்ந்து நண்பனாக இருந்து வர முடிகின்றது. இனியும் அவ்வாறே இருந்துவர முடியும்.

உனக்கு ஒரு பழக்கம் இருந்தால் நல்லது. அப்போது இந்த உண்மைகள் தெளிவாக விளங்கும். அது என்ன பழக்கம், தெரியுமா? மூன்றாம் வீட்டுக் குடும்பச் சண்டையைப் பற்று இல்லாமல், உணர்ச்சி இல்லாமல் அமைதியாக நீ பார்க்க முடியும் அல்லவா? அது போலவே, உன் மனத்தின் போக்கையும் நீ வேடிக்கை பார்ப்பது போல் பார்த்துப் பழக வேண்டும். மனம் எப்படி வெறி கொண்டு எழுகிறது, எப்படி யாரைத் தாக்குகிறது, பிறகு எப்படி அலைகிறது எப்படி அமைதி அடைகிறது என்பவற்றை அமைதியாக எண்ணிப்பார்.

எடுத்துக்காட்டாக ஒன்று சொல்வேன். கோபம் வருகிறது. பிறகு தணிகிறது. கோபத்தில் நண்பனைக் கண்டபடி பேசுகிறேன். கோபம் தணிந்த பிறகு, நண்பனை அவ்வாறு கடிந்தது தவறு என்று ஓர் எண்ணம் மெல்லத் தோன்றுகிறது. நண்பனிடம் சென்று மன்னிப்புக் கோரலாமா என்று தோன்றுகிறது. நண்பனிடம் செல்வதற்குள் மற்றோர் எண்ணம் அதைத் தடுத்துவிடுகிறது. "நாம் என்ன செய்துவிட்டோம்? அவன் இப்படிக் கேட்டதால்தானே நான் கோபித்துக் கொண்டேன்? இதற்காக மன்னிப்புக் கோர வேண்டுமா? மானம் இல்லையா? கூடாது " என்று அந்த எண்ணம் தடுக்கிறது. ஒரு மனம் அன்போடு பணிந்து போக முனைகிறது; மற்றொரு மனம் ஆணவத்தோடு இணங்காமல் நிற்கிறது.

இப்படிப்பட்ட நெருக்கடியில் நாம் என்ன செய்ய வேண்டும் தெரியுமா? அன்புமனத்தை ஆதரிக்க வேண்டும் ; ஆணவ மனத்தைக் கைவிட வேண்டும்.

மனிதரிடம் இப்படி இருவகை மனநிலையும் இருந்து வருகின்றன. அன்புமனத்தைத் தெய்வமனம் என்றும் ஆணவமனத்தை விலங்குமனம் என்றும் கூற வேண்டும். நாம் எப்போதும் தெய்வமனம் சொல்வதைக் கேட்டு நடக்க முதலில் விலங்குமனம் வல்லமையோடிருந்து தடுக்கும். "ஏன் விட்டுக் கொடுக்க வேண்டும்? விட்டுக் கொடுப்பது கோழைத்தன்மை; தோல்வி மனப்பான்மை ; ஆகையால் விட்டுக் கொடுக்காமல் போராடு" என்று விலங்குமனம் தொடக்கத்தில் வற்புறுத்தும். அதன் பேச்சைக்

கேளாமல் புறக்கணித்துப் பழகி விட்டால் நாளடைவில் அதன் முனைப்பு அடங்கிவிடும்.

நண்பர்களின் பழக்கத்திலேயே இவ்வளவு போராட்டம் என்றால், ஒரே வீட்டில் இருந்து வாழ்நாள் முழுவதும் பழகுவதற்கென்று அமைந்த இல்வாழ்க்கையில் உரிமை உரிமை என்று மனம் போன போக்காய் விட்டால் என்ன ஆகும்? முன்னே குறித்தபடி யாராவது ஒருவர் முழு அடிமை ஆனால் தவிர, இருவர் கூடி இல்வாழ்க்கை நடத்த முடியாது என்று கூறவேண்டும். உரிமைக்கு முதல் இடம் கொடுக்காமல் அன்புக்கு விட்டுக்கொடுத்து வாழக் கற்றுக்கொண்டால், யாரும் அடிமை ஆகாமலே வாழ்க்கை நடத்த முடியுமே.

இப்படிப்பட்ட வாழ்க்கையில் 'பிகு' என்று சொல்லப்படும் வேடிக்கைப் பிடிவாதம் இருக்குமே தவிர, வெறுத்துப் பிரிவதற்குக் காரணமான விலங்குப்– பிடிவாதம் இருக்காது. இவர்களிடையில்தான் நாளடைவில் உரிமையின் சிறப்பு விளங்கும்.

இந்த வாழ்க்கையில் சிறுசிறு பூசல் வரலாம்; போகலாம்: அவைகளுக்கு நிலையான இடம் தரக்கூடாது. சிறு பூசல் காரணமாகக் கணவனும் மனைவியும் பேசாமல் சில மணி நேரம் இருக்க நேரலாம். ஆனால் அடுத்தபடி அன்போடு பேசுவதற்கு வாய்ப்பை எதிர்பார்த்திருக்க வேண்டும். வலியச் சென்று பேசுவதற்கு நல்ல மனம் தூண்ட வேண்டும். அவ்வாறு வலியப் பேசி விட்டுக்கொடுத்தவர் தோற்றுவிட்டவர் அல்ல; அவர்தான் அன்பு வாழ்க்கையில் வெற்றி பெற்றவர் என்கிறார் திருவள்ளுவர். "ஊடலில் தோற்றவர் வென்றார்" என்னும் அவருடைய கருத்து எவ்வளவு உயர்ந்த பண்பாட்டின் அடிப்படையாகப் பிறந்திருக்கிறது! அத்தகைய பண்பாடு இல்லாத போது அறிவு எவ்வளவு கூர்மையாக இருந்தபோதிலும் என்ன பயன்? பண்பாடு இல்லாத அறிவு நமக்கு உதவாது; நம்மைக் கெடுக்கவும் கெடுக்கும். அது எதற்கும் காரணம் சொல்லும்; சிறிய குற்றத்தைப் பெரிய குறையாக்கிக் காட்டும்; பெரிய குணத்தையும் சிறிதாக்கி மறக்கச் செய்யும். பண்பாடு இல்லாத போது அத்தகைய அறிவால் பயன் என்ன? அது நம்பத் தகாதது.

"அரம்போலும் கூர்மையரேனும் மரம் போல்வர்
மக்கட் பண்பு இல்லாதவர்"

என்று திருவள்ளுவர் சொன்னது நினைவு இருக்கட்டும்.

மற்றவை பிறகு எழுதுவேன். நீயும் உன் கருத்துக்களைக் தயங்காமல் எழுது. நல்ல முயற்சிக்குத் தயக்கம் ஏன் ?

உன் அண்ணன்,
வளவன்

மூலம் : நூல் : தங்கைக்கு



* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – அகர வரிசைப்படி (Note on Vocabulary)

| | | |
|---|---|---|
| அஞ்சு(v) | – | பயப்படு; be afraid of |
| அடக்குமுறை(n) | – | repression |
| அடங்கிநட | – | be obedient |
| அடிமைத்தனம்(n) | – | slavery |
| அடியோடு | – | completely |
| அதேபோல் | – | like that |
| அந்த ஊரான் | – | man of that village |
| அரம் (n) | – | file (filing instrument) |
| அருமை (n) | – | அபூர்வம்; அரிது; rarity |
| அறிந்துகொள் (v) | – | to know |
| அறிவுரை (n) | – | புத்திமதி; advice |
| அறிவுரை கூறு (v) | – | அறிவுறுத்து; advise |
| அனுபவம் (n) | – | experience |
| அனுமதிபெறு | – | get permission |
| ஆணவம் (n) | – | மற்றவரை மதிக்காததன்மை; இறுமாப்பு; arrogance. |
| ஆர்ந்தோர்(n) | – | விடாமல் பருகுவோர் (contextual) |
| ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும் | – | விடாமல் தொடர்ந்து பருகுபவருக்கு தேனும் புளிக்கும் |
| இடர்ப்பாடானது | – | the one with a difficulty |
| இயற்கையாகவே | – | by nature |

| | | |
|---|---|---|
| இரை (n) | – | prey, feed (direct); victim (contextual) |
| இரையாகக் கூடாது | – | shoud not become a victim |
| இல்வாழ்க்கை | – | *திருமணவாழ்க்கை* ; house hold life / married life |
| இளமை | – | youth |
| உண்டான (மகிழ்ச்சி) | – | (the joy) that occured |
| உண்ணமுடியும் | – | can eat |
| உயிர்த்தோழி | – | intimate female friend |
| உரிமையுணர்ச்சி | – | the feeling of right |
| உறவுகொள்(v) | – | have relation. |
| ஊரான் | – | one who belongs to a particular village |
| ஊடல் (n) | – | *(காதலர்களுக்குள் அல்லது கணவன் மனைவிக்குள் ஏற்படும்) சிறு பிணக்கு; அன்புச்சண்டை,* fit of sulkiness (as between lovers) |
| எடுத்துக்காட்டு (n) | – | *உதாரணம்* ; example |
| எதிர்காலம் | – | future |
| எப்படிப்பட்டது | – | *எந்த விதமானது* ; whatever |
| எம்மை (எம் + ஐ) | – | *எங்கள்* ; our (exclusive plural). [cf : *நம்* – our (inclusive plural) |
| எரு (n) | – | manure |
| எழுதும்படியாக | – | make (me) to write (such letters) (Ref. line 2 para1) |
| எள்ளளவும் (எள் + அளவும்) | – | (அளந்து சொல்லப்படுவதில்) சிறிய எள் அளவும் ; a very small quantity (contextual) |
| ஐயுற வேண்டா(ம்) | – | do not get suspicion |
| ஒருவர் பொறை இருவர் நட்பு | – | one person's tolerence two person's friendship |
| ஒன்றற்கொன்று நேர்–மாறானவை | – | ஒன்றுடன் ஒன்று முற்றும் எதிரானவை ; contrary to each other |
| கண்டபடி (வி.அ) | – | எந்தவித ஒழுங்கும் இல்லாமல்; *தாறுமாறாக*; without observing any norm or standard or rule |

| | |
|---|---|
| கண்மூடியாய் | – ஆராயாமல் ஏற்றுக் கொள்ளும் தன்மையுடையவளாய் ; blindly |
| கருத்து (n) | – அபிப்பிராயம் ; opinion |
| கழித்திருக்கமுடியும் | – could have spent |
| குற்றம் (n) | – mistake |
| குறை (n) | – defect / error |
| கூடாது | – should not |
| கூடிப் பழகும் நிலைமை இருந்திருந்தால் | – had there been a state of behaving intimately or closely |
| கூர்மை | – sharpness |
| கூறுவதில் | – சொல்லுவதில் |
| கைவிடு (v) | – give up |
| கோரல் (n) | – request |
| கோழைத்தன்மை (n) | – cowardice |
| சங்கப்பாட்டு | – poetry composed during cankam period |
| சலித்தபோது | – (மிகுதியின் காரணமாக) வெறுப்படைதல் ; (when get) fed up with; be tired of |
| சிந்தனைப் பிறவி | – a thinker |
| சிலமணிநேரப் பழக்கம் | – a few hour friendship |
| சுவைக்காமல் போய்விடுமே | – may go without any interest |
| செம்மறியாடாக (செம்மறி ஆடு + ஆக) | – like a sheep (without thinking) |
| தணிகிறது | – subside; cools down |
| தயங்கு (v) | – hesitate |
| தலைகாட்டு(v) | – be visible |
| தலையிட்டு | – by having interfered |
| தலையெடு(v) | – தோன்று (v), appear |
| தவற (தவறு + அ) | – to miss |
| தற்காப்பு (n) | – self-protection |

| | | |
|---|---|---|
| தாக்கு (v) | – | attack |
| தான்தோன்றித்தனம் (n) | – | தன்னிச்சை; irresponsibility |
| தீ | – | நெருப்பு, fire |
| துணைசெய்(யும் பாட்டு) | – | (the poetry that will) help |
| தெளிவு (n) | – | clarity |
| தேனும் புளிக்கும் | – | even the honey will be sour in taste |
| தொல்லைப்படு (v) | – | get suffered |
| தோல்வி மனப்பான்மை (n) | – | the feeling of defeat; failure |
| தோழி(n) | – | girl friend (a character usually found in love poetries of Cankam period) |
| நட்பு (n) | – | friendship |
| நாடு (v) | – | incline (towards) |
| நாளடைவில் | – | in due course |
| நிலையான இடம் | – | permanent place |
| நீடிக்கும் | – | will prolong |
| நீண்ட கடிதம் | – | long letter |
| நெடுங்கால அனுபவம் (n) | – | பழுத்த அனுபவம், well experience |
| நெருக்கடி (n) | – | இக்கட்டு; crisis |
| நெறி (n) | – | righteous conduct |
| நேரே (ஒன்றும் தெரியாது) | – | directly (not known) |
| நொந்து (vp) | – | having suffered |
| நோக்கம் (n) | – | motive |
| பகை(n) | – | enmity; hostility |
| பண்பாடு (n) | – | culture |
| பழகிப்பழகி | – | having acquainted with (a person) again and again |
| பழங்காலம் | – | ancient period |
| பயனில்லை | – | not useful |
| பற்று (n) | – | desire |
| பிடிவாதம் (n) | – | adament |

| | | |
|---|---|---|
| பிரிக்கும் வழக்கம் | – | custom of separating |
| புலப்படுத்து (tr.v) | – | make clear |
| புறக்கணி (v) | – | reject with contempt |
| பிகு (n) | – | a kind of (self imposed) posing |
| பூசல் (n) | – | quarrel |
| பேயாட்டம் (n) | – | the play of devil |
| பொறை (n) | – | பொறுமை |
| பொன்மொழி (n) | – | golden words (old saying) |
| போக்கு (n) | – | tendency |
| போராட்டம் | – | struggle |
| போற்றத்தக்கது | – | worth to be praised |
| மந்தநிலை | – | indigestion; stagnation |
| மனத்தின் இயல்பு | – | the nature of mind |
| மனத்தின் பேயாட்டம் | – | the uncontrolled play of mind |
| மனம் போன போக்காய் | – | as the mind goes |
| மாறானது (மாறு + ஆனது) | – | முரணானது; புறம்பானது; the one which is contrary |
| மானம் (n) | – | dignity |
| முற்போக்கு | – | progressiveness |
| முனைப்பு | – | தீவிரம் ; மும்முரம்; கவனம்; determination |
| மெல்ல | – | slowly |
| யாரேனும் | – | anybody; even if any one |
| வம்பு செய் (v) | – | give trouble |
| வயது ஆக ஆக | – | as the age increases |
| வயிறார | – | stomachfull |
| வரக்கூடிய (adj.) | – | (things) which come |
| வர வர | – | காலம் செல்லச்செல்ல; as time goes by |
| வலிய | – | forecefully |

| | | |
|---|---|---|
| வழக்கறிஞர் | – | lawyer |
| வாய்ப்பு (n) | – | chance; opportunity |
| விட்டுக்கொடு | – | பிடிவாதம் காட்டாமல் இணங்கிப் போதல், to accommodate |
| விடை (n) | – | பதில்; answer; response |
| விடைசொல் (v) | – | answer |
| விதி (n) | – | fate |
| விரிவான (adv.) | – | elaborate |
| விலங்குமனம் (n) | – | mind that changes often |
| விழிப்போடு | – | watchfully |
| வெறி (n) | – | wild or uncontrolled behaviour |
| வெறுப்பு (n) | – | dislike; hatredness |
| வேடிக்கை (n) | – | fun; amusement |
| வேண்டா | – | often used in place of 'வேண்டாம்'; பழைய வழக்கு |

## ❑ பயிற்சி (Exercise)

*I அ. இணைச் சொல் (synonym) தருக.*

1. அடங்கிநட
2. இடர்ப்பாடு
3. எதிர்காலம்
4. நேர்மாறானவை
5. தோல்வி மனப்பான்மை
6. புறக்கணி
7. பூசல்

*ஆ. எதிர்ச்சொல் (antonym) தருக.*

இளமை –
பழங்காலம் –
போற்று –
முற்போக்கு –
வெறுப்பு –

*II. பிறவினைச் (transitive) சொற்களாக மாற்றுக.*

அடங்கு –
வளர்(ந்த) –

தொடங்கு –
குறை(ந்த) –
பிரி(ந்த) –
பணிந்து –

III. *பொருத்தமான சொல்லைத் தேர்ந்தெடுத்து கோடிட்ட இடம் ஒவ்வொன்றையும் நிரப்புக.*

1. பழக்கம் ஒரே இடத்தில் நின்று நீடிக்கும் போதுதான் ஒருவர் ______ மற்றொருவருக்குத் தெரிகிறது. பிறகு __________ வளர்கின்றது. அதன்பிறகு ____________ எழுகின்றது.
(வெறுப்பு, உரிமைப்போராட்டம், குறை)

2. தடையில்லாமல் இடர் இல்லாமல் கூடிப் பழகினால் வாழ்க்கை ____________ போய்விடுமே என்று அஞ்சி, அடிக்கடி ஒருவரை–யொருவர் _________ இடையிடையே __________ வைக்கிறாள்.
(பிரித்து, காணாதபடி, வாழ்க்கை)

3. அவ்வாறு செய்வதால் ____________ என்று ஏங்கும்படியான நிலைமையை உண்டாக்கி, அந்த ஏக்கத்தால் காதல் ______ ஆகச் செய்கிறாள். (காணவேண்டும், வளரும்படி)

4. ________ க்கு முதல் இடம் கொடுக்காமல் _________ க்கு முதலிடம் கொடுத்து விட்டுக்கொடுத்து வாழக் கற்றுக் கொண்டால் யாரும் ________ ஆகாமலே வாழ்க்கை நடத்த முடியும்.
(அடிமை, உரிமை, அன்பு)

5. ____________ இல்லாதபோது அறிவு எவ்வளவு ____________ ஆக இருந்த போதிலும் என்ன ____________ ?
(பயன், பண்பாடு, கூர்மை)

IV. *ஒவ்வொரு உரைப்பகுதியும் உணர்த்தும் பொருளைச் சுருக்கமாகச் சொந்த வாக்கியத்தில் எழுதுக. (Give the theme of the following passages in your own sentences).*

1. தமிழ் இலக்கியத்தில் தோழி என்று வரும் இவளுடைய திறமை போற்றத்தக்கதாக உள்ளது. காதலர் இருவர் நெருங்கி உறவு கொள்வதற்குக் காரணமாக விளங்கும் இவள், அவர்களை எத்தனை முறை எத்தனை காரணங்களால் பிரிக்க முயல்கிறாள் தெரியுமா? அவர்களைப் பிரித்து அடியோடு ஒதுக்கிவிட வேண்டும் என்பது அவள் நோக்கமா? இல்லை. தடையில்லாமல் இடர் இல்லாமல் கூடிப்பழகினால் வாழ்க்கை சுவைக்காமல் போய்விடுமே என்று

அஞ்சி, அடிக்கடி ஒருவரையொருவர் காணாதபடி இடையிடையே பிரித்து வைக்கிறாள்.

2. மனிதரிடம் இருவகை மனநிலைகள் இருந்து வருகின்றன. அன்பு மனத்தைத் தெய்வமனம் என்றும் ஆணவமனத்தை விலங்குமனம் என்றும் கூற வேண்டும். நாம் எப்போதும் தெய்வமனம் சொல்வதைக் கேட்டு நடக்க முதலில் விலங்குமனம் வல்லமையோடிருந்து தடுக்கும். ''ஏன் விட்டுக் கொடுக்க வேண்டும்? விட்டுக் கொடுப்பது கோழைத் தன்மை; தோல்வி மனப்பான்மை; ஆகையால் விட்டுக் கொடுக்காமல் போராடு'' என்று விலங்குமனம் தொடக்கத்தில் வற்புறுத்தும். அதன் பேச்சைக்கேளாமல் புறக்கணித்துப் பழகிவிட்டால் நாளடைவில் அதன் முனைப்பு அடங்கிவிடும்.

3. இந்த வாழ்க்கையில் சிறுசிறு பூசல் வரலாம், போகலாம். அவைகளுக்கு நிலையான இடம் தரக்கூடாது. சிறு பூசல் காரணமாகக் கணவனும் மனைவியும் பேசாமல் சில மணி நேரம் இருக்க நேரலாம். ஆனால் அடுத்தபடி அன்போடு பேசுவதற்கு வாய்ப்பை எதிர்பார்த்திருக்க வேண்டும். வலியச்சென்று பேசுவதற்கு நல்லமனம் தூண்ட வேண்டும். அவ்வாறு வலியப் பேசி விட்டுக்-கொடுத்தவர் தோற்றுவிட்டவர் அல்ல; அவர்தான் அன்பு வாழ்க்கையில் வெற்றி பெற்றவர் என்கிறார் திருவள்ளுவர்.

V. *அடிக்கோடிட்ட பகுதிகளைப் பயன்படுத்தி எ.கா.வில் உள்ளதுபோல் சொந்த வாக்கியங்கள் எழுதுக. (Frame your own sentences by using the underlined items, as shown in the example)*

1. *எ.கா.: எப்படி எழுதுவது என்று எண்ணும்போது தயங்குகிறேன். எவ்வளவோ எழுத வேண்டும் என்று விரிவான பல எண்ணங்களும் எழுகின்றன.*

2. *எ.கா.: பசி எடுக்கின்ற வயிறு உள்ளவர்கள்தான் வயிறாரச் சாப்பிட முடியும். அடங்கி நடக்கின்றவர்கள்தான் உரிமையின் நன்மையை அனுபவிக்க முடியும்.*

3. *எ.கா.: மனைவி கணவனுக்கு விட்டுக்கொடுத்து வாழ்வது போலவே கணவனும் பலவகையில் மனைவிக்கு விட்டுக் கொடுத்து வாழ்க்கை நடத்துகிறான்.*

4. *எ.கா.: விடுமுறை நாட்களில் மட்டும் கூடிப்பழகும் நிலைமை இருந்திருந்தால் கனகாவும் அவளுடைய கணவனும் இன்னும் பல ஆண்டுகள் அன்போடு காலம் கழித்திருக்க முடியும்.*

5. *எ.கா.: காணவேண்டும் என்று ஏங்கும்படியான நிலைமையை உண்டாக்கி, அந்த ஏக்கத்தால் காதல் வளரும்படியாகச் செய்கிறாள்.*

6. *எ.கா.: நான் இந்த விதியைப் போற்றி நடப்பதால்தான் நண்பர் அருளப்பரோடு இளமைமுதல் இன்று வரையில் தொடர்ந்து நண்பனாக இருந்துவர முடிகின்றது.*

7. *எ.கா.: மூன்றாம் வீட்டுக் குடும்பச் சண்டையைப் பற்று இல்லாமல், உணர்ச்சி இல்லாமல் அமைதியாக நீ பார்க்க முடியும் அல்லவா? அது போலவே, உன் மனத்தின் போக்கையும் நீ வேடிக்கை பார்ப்பது போல் பார்த்துப் பழக வேண்டும்.*

8. *எ.கா.: மனம் எப்படி வெறிகொண்டு எழுதுகிறது, எப்படி யாரைத் தாக்குகிறது, பிறகு எப்படி அலைகிறது. எப்படி அமைதி அடைகிறது என்பவற்றை அமைதியாக எண்ணிப்பார்.*

9. *எ.கா.: உரிமைக்கு முதல் இடம் கொடுக்காமல், அன்புக்கு விட்டுக் கொடுத்து வாழக் கற்றுக்கொண்டால், யாரும் அடிமை ஆகாமலே வாழ்க்கை நடத்த முடியுமே.*

10. *எ.கா.: இப்படிப்பட்ட வாழ்க்கையில் 'பிசு' என்று சொல்லப்படும் வேடிக்கைப்பிடிவாதம் இருக்குமேதவிர, வெறுத்துப் பிரிவதற்கு காரணமான விலங்குப் பிடிவாதம் இருக்காது.*

VI. *பழமொழி ஒவ்வொன்றும் பாடப்பகுதியிலுள்ள கருத்துக்குப் பொருத்தமாகவுள்ளதை விளக்குக (நான்கு (அ) ஐந்து வரிகளில்)*

1. ஒருவர் பொறை இருவர் நட்பு
2. பழகப் பழகப் பாலும் புளிக்கும்
3. ஊடலில் தோற்றவர் வென்றார்

VII. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக. (Explain with reference to context).*

1. "அன்புக்காக விட்டுக் கொடுத்து இணங்கிநட. உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே"
2. "அவளுக்கு அழகு, அறிவு, முற்போக்கு, திறமை எல்லாம் இருக்கின்றன. விட்டுக்கொடுத்தல் என்ற ஒன்று மட்டும் இல்லை"
3. "தீயும் நீரும் தொடர்பு கொண்டு ஒன்றையொன்று குறைப்பது போல் ஆகின்றது அவர்களின் வாழ்க்கை."

4. ''அவருடைய இரண்டாம் மனைவி ஒரு முறை வாழ்க்கையில் மிகச் சலித்த போது கணவருக்குச் சொல்லி அனுமதி பெற்றுத் தனியே பிரிந்து சில வாரங்கள் வாழ்ந்தாராம்''

5. ''வலியச் சென்று பேசுவதற்கு நல்ல மனம் தூண்ட வேண்டும். அவ்வாறு வலியப்பேசி விட்டுக்கொடுத்தவர் தோற்றுவிட்டவர் அல்ல ; அவர்தான் அன்பு வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்.''

VIII. *சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக. (அடைப்புக்குள் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது).*

அ. 1. கண்மூடியாய் நில்லாமல் (தெளிவின்றி)
2. செம்மறியாடாகச் செல்லாமல் (சிந்திக்காமல்)
3. வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று (தெள்ளத் தெளிவாக)
4. ஒன்றற்கொன்று நேர்மாறானவை (எதிரானவை)
5. தான்தோன்றித்தனத்தை (இஷ்டம்போல்)
6. விட்டுக் கொடுத்து வாழ்வதுபோல் (புரிந்து கொண்டு வாழ்வதுபோல)

ஆ. 1. வெறுப்பும் பகையும் தலைகாட்டும்
2. சொன்னவர்கள் வாயில் சர்க்கரை இட வேண்டும்
3. ஏங்கும் படியான நிலைமையை உண்டாக்கி

IX. *நான்கு அல்லது ஐந்து வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. கட்டுரை ஆசிரியரின் தங்கை தன் கடிதத்தில் எழுதியிருப்பது என்ன?
2. நெடுங்கால அனுபவத்தின் பயனாகக் கட்டுரை ஆசிரியர் (அன்பு உரிமை பற்றி) அறிந்து கொண்டவைகளை எழுதுக.
3. கனகா யார்? அவள் மன வாழ்க்கை என்ன ஆயிற்று? ஏன்?
4. சங்க (இலக்கியப்) பாட்டில் வரும் தோழி எப்படிப் பட்டவள்?
5. மனிதனிடம் இருக்கும் இருவகை மனநிலை குறித்துக் கட்டுரை-ஆசிரியர் குறிப்பிடுவது யாது ?

## ❑ பொதுக் குறிப்பு (Note on General Information)

1. வெறுப்பும் பகையும் தலைகாட்டும் –
hatredness and enmity will appear. [*உம்மைத் தொகை*]

2. வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று –
   தெளிவாகப் பொருள்விளங்கும்படி பேசுதல்; cut and right. [*மரபுத்தொடர்*]
3. அடங்கியும் நடக்க வேண்டும் உரிமையோடும் வாழ வேண்டும் –
   (one) must behave obediently and live with rights.
   [*உம்மைத் தொகை ; a complex construction*]
4. கடமையை ஒழுங்காய்ச் செய்து உரிமையைக் காத்துக் கொள்ளலாம் –
   by performing the duties regularly one may protect his/her rights. [*complex sentence with vp.*]
5. 'ஒருவர்பொறை இருவர்நட்பு' என்னும் நாலடியாரின் பொன்மொழி –
   one person's tolerence two person's friendship. '*நாலடியார்*' என்பது தமிழ்ப் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று.
6. வெறுப்புக்கும் பகைக்கும் எருவாக்கிக் கொள்ளும் –
   having it as manure for (developing) hatredness and enmity
7. உரிமைப் போராட்டம் தலையெடுத்து வம்பு செய்திருக்கும் –
   the struggle for right would have turned out to be an issue leading to quarrel.
   [*a complex sentence with vp and future perfect*].
8. ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும் என்னும் சங்கப்பாட்டு –
   விடாமல் பருகுவோருக்குத் தேனும் புளிக்கும் என்பது சங்கப்பாட்டின் கருத்து ; cankam poetry is dated back to the second century AD during which period, literature on *அகம்* and *புறம்* themes were compiled.
9. தமிழ் இலக்கியத்தில் தோழி –
   (in Cankam lit.) heroine's girl friend.
10. யாராவது ஒருவர் முழு அடிமை ஆனால் தவிர இருவர் கூடி இல்வாழ்க்கை நடத்த முடியாது –
   unless one among the two (i.e. husband and wife) completely surrenders it is not possible to live in harmony; [*a complex construction*].
11. '*பிகு*' என்று சொல்லப்படும் வேடிக்கைப் பிடிவாதம் –
   being unresponsive to requests, hospitality, etc., [*a complex construction*].
12. ஊடலில் தோற்றவர் வென்றார் என்கிறார் திருவள்ளுவர் –
   (among the lovers) the one who is defeated in the fit of sulkiness is the (actual) winner. *திருவள்ளுவர்* is the author of *திருக்குறள்*, one of the 18 works which are classified as *பதினெண்கீழ்க்கணக்கு*. [*a complex construction*].

13. 'அரம்போலும்' கூர்மையரேனும் மரம் போல்வர் மக்கட் பண்பில்லாதவர்– திருக்குறள்–997 : பண்புடைமை. அரம்போன்று கூர்மையான அறிவு இருந்தாலும் மக்களுக்கு இருக்க வேண்டிய நல்ல பண்பு இல்லாதவர்கள் மக்களல்லர் – மரத்தோடு சேர்ந்தவர் ஆகும்.

14. திருவள்ளுவர் சொன்னது நினைவு இருக்கட்டும் –
keep in mind what Thiruvalluvar said.

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

மு.வ. அவர்களின் நடையை இலக்கியக்கட்டுரைகளுக்கான ஒரு பொதுவான 'எழுத்துத் தமிழ்' நடை என்று குறிப்பிடலாம். பேச்சுத் தமிழை இவருடைய நடையில் காண்பது அரிது. ஆங்காங்கே வினா எழுப்பி விடை தரும் வகையில் இவருடைய எழுத்துநடைப் போக்கு பெரும்பாலும் அமையும். மிக நீண்டதாகவோ அல்லது மிகக் குறைந்ததாகவோ அன்றி ஓரளவு இடைப்பட்ட நிலையிலான அளவினையுடைய வாக்கியங்களே இவருடைய கட்டுரைகளில் அதிகம் காணப்படும். ஆங்காங்கே மேற்கோள்களைக் கொண்டதாகவும் ஓரளவு அமையும். இவருடைய மொழி நடையைக் 'கட்டுரை நடை' என்று நடையியலார் கூறுவர்.

# 3. காசுமரம்

அகிலன்

[இவரது இயற்பெயர் அகிலாண்டம். கலைமகள் மாத இதழின் மூலம் தமிழகத்திற்கு அறிமுகமான எழுத்தாளர் இவர். சிறு கதைகளும் நர்வல்களும் கட்டுரைகளும், நாடகங்களும், சிறுவர்க்கான கதைகளும் எழுதியுள்ளார். இவரது 'நெஞ்சின் அலைகள்' என்ற நாவலுக்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தினர் பரிசும் 'வேங்கையின் மைந்தன்' என்ற நாவலுக்குச் சாகித்திய அகாடமிப் பரிசும் கிடைத்துள்ளன. 'பாவை விளக்கு' என்ற நாவல் திரைப்படமாக்கப்பட்டுள்ளது. இவரது சிறுகதைகள் கன்னடம், மலையாளம், இந்தி, ஆங்கிலம், செக் போன்ற மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவர் எழுதிய 'சித்திரப்பாவை' என்ற சரித்திர நாவலுக்கு 'ஞானபீட விருது' கிடைத்துள்ளது.]

## சிறுகதை

பணக்கார வீட்டு எலி பூனைகளுக்கு மாத்திரமல்ல, இன்னும் அவர்களுக்குச் சொந்தமான மேஜை நாற்காலி தட்டுமுட்டுச் சாமான்கள் முதலிய யாவற்றிற்குமே ஒரு செல்லப் பெயர் வைத்து அழைப்பது அவர்களுடைய பெருமைக்குரிய வழக்கங்களில் ஒன்றாக இருக்கிறது. எங்கள் ஊர்க்குடியானவர் தெரு மூலையில் குடியிருக்கும் 'கோடிவீட்டு நாகம்மாள்' அந்த பணக்கார வர்க்கத்தைச் சேர்ந்தவளல்ல; பிரபுக்களது வாழ்க்கையில் மலிந்து கிடக்கும் குபேர போகங்களைப் பற்றி அவள் கனவுகூடக் கண்டதில்லை. ஆனால், அவளுக்கும் மேற்கூறிய பிரபு வர்க்கத்தினருக்கும் ஒரே ஒரு வகையில் மாத்திரம் ஒற்றுமை இருக்கத்தான் செய்தது. தன்னுடைய வீட்டுக் கொல்லையில் வளர்ந்திருந்த ஒரு சிறு மாங்கன்றிற்கு அவள் 'காவேரி' என்று பெயர் வைத்து இருந்தாள்.

நாகம்மாளுக்கு இப்போது ஏறக்குறைய நாற்பது வயதாகிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்புதான் கண்டிச் சீமைக்கு ஓடிப் போயிருந்த அவளுடைய கணவன் சுப்பையாவும் சொந்த ஊருக்குத் திரும்பி வந்திருந்தான். அவன் வீட்டிற்கு வந்ததிலிருந்து அவளுக்குச் சிறிது சாப்பாட்டுக் குறை நீங்கியது. கண்டியிலிருந்து கொண்டு வந்த பணத்தை நன்செய் நிலத்தில் போட்டு விட்டு, அதன் வரும்படியால் இரண்டு பேரும் சிரமமில்லாமல் காலந் தள்ளினார்கள்.

நாகம்மாளும் சுப்பையாவும் கருக்கிருட்டு வேளைகளில் எத்தனையோ முறை தங்கள் வீட்டுக் கொல்லையில் தனிமையாக உட்கார்ந்து பேசிக்கொண்டு இருந்திருக்கிறார்கள். அப்போதெல்லாம் அவர்கள் தங்களுடைய மாங்கன்றாகிய காவேரியின் நிழலில்தான் உட்கார்ந்து பேசுவது வழக்கம்.

பேச்சு முடிந்து இருவரும் வீட்டிற்குத் திரும்பும்போது, நாகம்மாள் ஒரு விதமான சோகம் கலந்த பார்வையுடன் தன்னுடைய காவேரியை உற்று நோக்குவாள். உடனே வெப்பம் கலந்த பெருமூச்சொன்று அவளுடைய மார்பை விம்மச் செய்து கொண்டு சீற்றத்தோடு வெளியே வரும். "அம்மா காவேரி ! விளக்கு வைக்கிற நேரமாச்சு; வீட்டுக்குப் போய் வேலையைப் பார்க்கணும்; பத்திரம் அம்மா" என்று அதனிடம் விடை பெற்றுக்கொண்டு வீட்டிற்குள் நுழைவாள்.

பத்து ஆண்டுகளுக்கு முன்பு. அப்போது நாகம்மாளின் வயிற்றிலே காவேரி ஒன்பது மாதச் சிசுவாயிருந்தாள். கிராமத்தில் பஞ்சம் பொறுக்க முடியாததாக இருந்தது. வெகு நாளாகச் சேர்ந்தாற்போல் வானம் மழை பெய்யாததால் நிலபுலங்களெல்லாம் வறண்டு போய் புழுதி படிந்து கிடந்தன. குடும்பத்தைச் சமாளிக்க முடியாமல் இரவோடு இரவாய் ஊரை விட்டுக் கிளம்பிச் சம்பாதிப்பதற்காக அக்கரைப் பிரதேசத்திற்குப் புறப்பட்டுவிட்டான் சுப்பையா.

காவேரி பிறந்து இரண்டு வருடம் வரையில் நாகம்மாள் தன் பெயரில் இருந்த ஒரு காணி நிலத்தையும் விற்று, அதைக் கொண்டு காலம் தள்ளி வந்தாள். அந்தப் பணமும் அவளுக்கு அதற்கு மேல் கட்டி வரவில்லை.

கணக்குப்பிள்ளை ராஜமையர் வீட்டில் அவளுக்கு மூன்று ரூபாய்ச் சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்தது. அதிகாலையில் எழுந்து சென்று அவருடைய வீட்டைக் கூட்டி மெழுகிக் கோலமிட்டுப் பாத்திரம் பண்டங்களை விளக்கிக் கொடுத்து மற்ற எடுபிடி வேலைகளையும் செய்து வந்தாள். சம்பளப் பணமும், அவர்கள் தினந்தினம் கொடுத்து வந்த பழைய கறி, சாதம், குழம்பு முதலிய பொருள்களும் நாகம்மாளின் அரை வயிற்றைக் கழுவப் போதியனவாக இருந்தன.

அந்த வருமானத்திலும் ஏதோ ஒரு பகுதியை வெகு சிரமத்தோடு மீதம் பிடித்து அதனால் தன்னுடைய குழந்தை காவேரிக்கு விதவிதமான

உடுப்புக்கள் வாங்கிப் போட்டு மகிழ்ந்து வந்தாள் நாகம்மாள். தான் வேலை பார்த்து வரும் வீட்டிலுள்ள பிராம்மணக் குழந்தைகளைப் போலவே தன்னுடைய குழந்தையும் வளர்ந்து வர வேண்டுமென்பது அவளது மனத்தில் இருந்த அந்தரங்க ஆவல்.

காவேரிக்கு வயது வளர்ந்து கொண்டு வந்ததைப் போலவே தாயின்மேல் அளவுக்கு மீறிய பாசமும் வளர்ந்து கொண்டு வந்தது. தகப்பன் என்ற ஒருவன் உயிரோடு இருக்கிறானா இல்லையா என்பதைப் பற்றி அவள் சிறிதேனும் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. அந்த மாதிரி ஒரு விபரீத ஏக்கம் தன் மகளுக்கு ஏற்பட்டு விடக் கூடாதென்பதற்காக நாகம்மாள் காவேரியைக் கவலையோடு கவனித்து வந்தாள்.

ஒருநாள் மாலையில் பள்ளிக்கூடம் கலைந்த பிறகு காவேரி ஒரு கையில் புத்தகத்துடன், மற்றொரு கையில் பாவாடையைப் பிடித்துக் கொண்டு வீட்டை நோக்கிப் பரக்கப் பரக்க ஒடி வந்தாள். வீட்டின் வெளிப்பக்கத்துத் திண்ணையில் அழுதுகொண்டு உட்கார்ந்திருந்த அவளுடைய தாயைப் பார்த்தவுடன் காவேரியின் பரபரப்பெல்லாம் ஒரே திகிலாக மாறிவிட்டது. சற்றுநேரம் கவலையோடு தாயையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, "என்னத்துக்கம்மா அழுகிறே?" என்றாள் கொஞ்சலாக.

கண்களைச் சேலை முனையால் துடைத்துக் கொண்டே, 'ஒண்ணுமில்லேடி கண்ணு' என்றாள் தாய்.

"ஊஹும்! எதுக்காகன்னு சொன்னாத்தான் உன்னை விடுவேன்" என்று சொல்லிக்கொண்டே நாகம்மாளின் மார்பில் பாய்ந்து அவளை இறுகக் கட்டிக் கொண்டாள் காவேரி.

குழந்தையின் உடல் தாயின் மேல் பட்டவுடன் அவளுடைய மனம் சற்று திருப்தியடைந்தாற் போல் தோன்றியது. "எனக்கு இனிமே வேலை கிடையாதும்மா காவேரி ; ஐயரை வேறே ஊருக்கு மாத்தியாச்சு; அவுங்க வீட்டிலே எல்லாரும் ஊருக்குக் கிளம்புறாங்க" என்றாள்.

"அதுக்காக நீ ஏம்மா அழுகிறே? ஐயர் வீட்டிலே வேலை இல்லாட்டி, நீ இங்கையே இருந்து என்னைப் பார்த்துக்கோயேன்! நான் பள்ளிக்கூடம் போய்ப் படிச்சுட்டுச் சுருக்க வீட்டுக்கு வந்திடறேன்; அப்புறம் நம்ப ரெண்டு பேரும் நம்ப வீட்டு வேலையைப் பார்ப்போம்...."

நாகம்மாளுக்கு அழுகையோடு அழுகையாய்ச் சிரிப்பு வேறு வந்துவிட்டது. ஆர்வம் தாங்காமல் குழந்தையை இரண்டு கைகளாலும் சேர்த்து அணைத்துக் கொண்டு உச்சி மோந்தாள். ஆனந்த மிகுதியால் அவளுடைய தாயுள்ளம் பூரிப்படைந்தது.

"கவலையெல்லாம் மறக்கறத்துக்காக எனக்குக் காவேரியை கொடுத்திருக்—கானே கடவுள்;அது ஒண்ணே போதும், இந்தப் பாவம் செய்த கட்டைக்கு" என்று சொல்லி பெருமூச்சு விட்டாள்.

நாளுக்கு நாள் நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது. தங்களுடைய வாழ்வுக்கு நாகம்மாளால் ஒரு விதமான வழியும் கண்டு பிடிக்க முடியவில்லை. காரணம் தெரியாத கவலைகளும், எதைக் கண்டாலும் வெறுப்பும் அவளுக்கு அதிகமாயின. வெகுநாள் சிரமப்பட்டு அலைந்து விரக்தி அடைந்த பிறகு தோப்பு மேஸ்திரியின் மனைவி அவளைத் தன் வீட்டில் வேலைக்கு அமர்த்திக்கொண்டாள்.

மேஸ்திரியின் வீட்டிலிருந்து சம்பளந்தான் ஐந்து ரூபாய் கிடைத்து வந்ததே தவிர வேறு விதமான மேல் வரும்படி ஒன்றையும் நாகம்மாளால் எதிர்பார்க்க முடியவில்லை. உள்ள வருமானத்தைக் கொண்டு அப்படியும் இப்படியுமாகக் காவேரியுடன் பொழுதை ஓட்டி வந்தாள்.

பள்ளிக்கூடத்திற்குப் புறப்படப்போகும் சமயத்தில் தினந்தோறும் காவேரியின் கையில் காலணாக் கொடுத்து அனுப்புவது நாகம்மாளின் வழக்கம். கணக்குப்பிள்ளை வீட்டு வேலை தொலைந்துபோன பிறகு நாள் ஒன்றுக்கு ஒரு பைசாவாவது கொடுத்து வந்தாள். அந்தக் காசைக் குழந்தை எவ்விதம் செலவு செய்கிறாள் என்பதைப் பற்றி அவள் கவலை கொள்வதில்லை.

மற்றப் பிள்ளைகளைப் போலத் தானே ஏதாவது மிட்டாய் வாங்கித் தின்னப் போகிறாள் ? என்று நினைத்தாள்.

ஆனால், காவேரி தினமும் மிட்டாய்க்காரனிடம் காசைக் கொடுப்பதில்லை எப்போதாவது இரண்டொரு நாளைத் தவிர மற்ற நாட்களிலெல்லாம் அன்னை கொடுக்கும் காசுகளை அவளுக்குத் தெரியாமல் ஒரு மண்—கலயத்தில் போட்டு வைத்திருந்தாள்.

ஒருநாள் நாகம்மாளின் கையில் தம்படிக் காசுக் கூட இல்லை. 'நாளைக்குத் தருகிறேன்' என்று சொல்லிக் காவேரியைப் பள்ளிக்கு

அனுப்பிவிட்டாள். அடுத்த நாளும் அவளால் கொடுக்க முடியவில்லை. காவேரிக்குக் கோபம் கோபமாய் வந்தது; மனத்திற்குள்ளேயே பொருமிக்– கொண்டு பதில் பேசாமல் படிக்கச் சென்று விட்டாள். மூன்றாவது நாள் வந்தபோது, "எப்படியாவது இன்றைக்கு அம்மாவிடமிருந்து காசு வாங்கிவிட வேண்டும்" என்று காவேரிக்குத் தோன்றியது. தாயை நச்சுப்படுத்தினாள். இரண்டு நாளாகக் கிடைத்து வந்த அதே 'நாளைக்கு' என்னும் பதில்தான் அன்றைக்கும் கிடைத்தது. காவேரியால் இந்த ஏமாற்றத்தைப் பொறுக்க முடியவில்லை.

"போ, அம்மா! நீ என்னிக்குக் கேட்டாலும் நாளைக்கின்னே பொய் சொல்ற" என்றாள் முகத்தைச் சுளித்துக் கொண்டு.

நாகம்மாளின் நினைவு அப்போது எங்கேயோ இருந்ததால் குழந்தை குறுக்கே பேசுவதைச் சகிக்காமல், "என்ன காவேரி, ஏன் தொந்தரவு செய்யறே? காசு காசுன்னு தினம் வம்பு பண்ணினா நான் காசுக்கு எங்கே போகிறது? நம்ம வீட்டிலே காசு மரமா முளைக்குது!" என்று பொறுமையில்லாமல் குழந்தையின் மேல் எரிந்து விழுந்தாள்.

தன் தாய் தன்னிடம் இவ்வளவு வெடுவெடுப்பாகப் பேசி, காவேரி ஒரு நாள் கூடக் கேட்டதில்லை.

தன்னால் எவ்வளவு எண்ணங்களை ஒரே சமயத்தில் எண்ணிப் பார்க்க முடியுமோ அவ்வளவு எண்ணங்களையும் எண்ணிக்கொண்டே, அவள் பள்ளிக்கூடத்தை நோக்கி ஊர்ந்து சென்றாள். அவளுடைய மனம் அன்றைய பாடத்தில் ஊன்றவேயில்லை, பக்கத்துப் பிள்ளைகளின் பேச்சுக்குக் கூடப் பதில் சொல்லாமல் சுவரோடு சுவராய் உட்கார்ந்திருந்தாள்.

கோபம் சற்றுத் தணிந்தவுடன் தாயின் மேல் இருந்த வெறுப்பு முழுவதும் காவேரிக்கு அனுதாபமாக மாறி வந்தது.

அம்மாளிடம் காசில்லை பாவம்! காசுக்கு அவள் எங்கே போவாள்? காசு முளைக்கிற மரம் அவளிடம் இருந்தால்தானே....? அந்த மரம் மட்டும் இருந்திருந்தால் நமக்குக் காசுக்குப் பஞ்சமே இல்லை. ரொம்ப காசு தருவாள்; கோவிச்சுக்கவே மாட்டாள். அப்புறம் அம்மா பணக்காரி– தான்; ஏன்; நான் கூடப் பணக்காரக் காவேரிதான்.

காவேரியின் மனம் வெகு நேரம் வரையிலும் காசுகளைப் பற்றியும் காசு முளைக்கக் கூடிய மரங்களைப் பற்றியும் நினைத்துக்

கொண்டு இருந்தது. தன்னுடைய கற்பனைக்குத் தகுந்தாற்போல் மானசீகமாக ஒரு காசு மரத்தைத் தனக்குள் உற்பத்தி செய்து கொண்டு அதன் கிளைகளில் குலுங்கி நிற்கும் காசுகளைத் தன் மனக்கண்ணால் கண்டு அனுபவித்துக் கொண்டிருந்தாள். அதைப் போல் ஒரு மரம் தன்னுடைய வீட்டுக் கொல்லையில் அவசியம் இருக்க வேண்டுமென்று அவளுக்குத் தோன்றியது. அதைப் பற்றி யோசித்து, யோசித்து, அன்றைக்குப் பள்ளிக்கூடம் விடுவதற்குள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள்.

மாலை நேரத்தில் வீட்டில் நாகம்மாள் இல்லாத சமயம் பார்த்து, காவேரி தன்னுடைய கலயத்திலிருந்து சில காசுகளை எடுத்துக் கொல்லையில் ஊன்றி வைத்தாள். வழக்கத்தை அனுசரித்துக் கொஞ்சம் தண்ணீரும் தெளித்தாள். அந்த இடத்திற்கு அடையாளமாக ஒரு சிறு குச்சியும் நட்டு வைக்கப்பட்டது. தினந்தோறும் மறந்து விடாமல் அதிகாலையில் எழுந்து அடையாளத்தைச் சுற்றிலும் தண்ணீர் வார்த்து வந்தாள். வாரம் ஒன்றுக்கு மேலாகியும் அந்தப் பொல்லாத காசுகளில் ஒன்றாவது முளைகிளம்பி வெளியே வரவேயில்லை! மண்ணைக் கிளறிப் பார்த்தபோது எல்லாக் காசுகளும் வேரும் விடாமல், தளிரும் விடாமல் முன்னைவிடக் கறுப்பாகப் பாசி பிடித்துப் போய்க்கிடந்தன. காவேரியின் நம்பிக்கை தளர்ந்துகொடுக்க ஆரம்பித்தது.

சில நாட்கள் சென்ற பிறகு காவேரியின் பள்ளிக்கூடத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

அன்றைக்கு ஒரு பையன் ஆரஞ்சுப் பழ விதை ஒன்றை அப்படியே விழுங்கிவிட்டுப் பள்ளிக்கூடம் வந்திருந்தானாம். மற்றக் குழந்தைகு-ளெல்லாம் நிச்சயம் அந்தப் பயலோட வயத்திலிருந்து ஆரஞ்சு மரம் முளைக்கப் போறது என்று தங்களுக்குள் குசுகுசுவென்று பேசிக்-கொண்டார்கள். இந்தப் பேச்சு எப்படியோ காவேரியின் காதுகளில் விழுந்து திடீரென அவளுடைய மனத்தில் ஓர் ஆச்சரியமான மாறுதல் உண்டுபண்ணிவிட்டது.

அன்று பள்ளிகூடத்திலிருந்து திரும்பிப் போகும் போது, காவேரி குதித்துக் கொண்டே ஓட்டமும் நடையுமாய்ப் போய் வீட்டை அடைந்தாள்.

நடவடிக்கைகளில் சிரத்தை கொண்டாள். எதற்கெடுத்தாலும் தாயிடம் குறுக்கும் நெடுக்குமாய்க் கேள்விகளைக் கேட்டுச் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொண்டாள். சில தினங்களுக்குள் அவளுக்குப்

பொதுவாக ஒரு விஷயம் புலப்பட்டுவிட்டது "காசில்லை, காசில்லை" – அவளுடைய தாயின் வருத்தத்திற்கு இதுதான் முக்கிய காரணம்.

"அட பாவமே! நமக்குத் தெரிகிற யோசனை கூட நம் அம்மாவுக்குத் தெரியமாட்டேங்கறதே!" என்று தன் மட்டில் காவேரி பெருமைப்பட்டுக் கொண்டாள்.

தன் யோசனையில் காவேரிக்குத் தீவிரமான நம்பிக்கை இருந்தாலும் தன்னுடைய சிநேகிதி கண்ணம்மாவின் வாயிலாக அதை தெளிவுபடுத்திக்கொள்ள விரும்பினாள். ஆனால் தான் செய்யப்போகும் காரியத்தை ஒருவருக்கும் சொல்லக்கூடாதென்ற பிடிவாதமும் அவளிடம் இருந்தது. ஆகையால் வெகு தந்திரமாகக் கண்ணம்மாவிடம் பேசினாள்.

"நான் ஒரு மாதுளங் கொட்டையை முழுங்கி விட்டேண்டி கண்ணம்மா!" என்றாள் கண்களை அகலத் திறந்துக்கொண்டு.

"அப்படியானால் உன் வயத்திலேயிருந்து கட்டாயம் ஒரு மாதுள மரம் முளைக்கும்" என்றாள் கண்ணம்மா.

உடனே காவேரி பேச்சை மாற்றினாள்; "இல்லேடி, இல்லே! மாதுளக் கொட்டையை இல்லை; ஒரு காசைத்தான் முழுங்கிட்டேன்".

"சரி, சரி, காசையா முழுங்கினே? காசை முழுங்கினாக் காசுமரம் முளைக்கும்."

"மரம் முளைச்சா, காசு காய்க்குமோ?"

"போடி, போ! காசு மாத்திரமா காய்க்கும்? ரூபா, அணா, பைசா, நோட்டு, இன்னும் எத்தனை பணம் பூலோகத்திலே இருக்கோ அத்தனையும் கொத்துக் கொத்தாய்க் காய்க்குமே!"

"மரம் எப்படிக் கண்ணம்மா முளைக்கும்?" என்றாள் காவேரி.

"வயத்திலிருந்து முளைச்சு, வாய் வழியா மேலே வரும் ; வந்தவுடன் பூப் பூக்கும் காய் காய்க்கும் ; அப்புறம் எங்கே பார்த்தாலும் கிளைக்குக் கிளை பணம் பணமாய் தொங்கும்"

"அந்த சமயத்தில் நான் உசிரோட இருப்பேனா?" என்றாள் காவேரி கலவரத்தோடு.

"நீதான் வயத்திலே காசு முளைச்சு வர்றபோதே செத்துப் போயிடு-வியே? " என்று கவலையில்லாமல் பதில் வந்தது.

காவேரியின் முகம் சுருங்கிவிட்டது; இருந்தாலும் அதைக் காண்-பித்துக் கொள்ளாமல், கண்ணம்மாவிடம் இது பற்றி அதிகம் பேச்சுக் கொடுக்கக் கூடாதென்று வீட்டிற்கு ஓடி வந்து விட்டாள்.

இரண்டு மூன்று நாள் காவேரியின் நெஞ்சிற்குள் இந்தப் போராட்டம் இடை விடாமல் நடந்து வந்தது. தான் உயிரோடு இருப்பதைத் தாய் அதிகமாக விரும்புவாளா? அல்லது பணந்தான் இப்போது அவளுக்கு முக்கியமாக இருக்கிறதா? கடைசியில் காவேரியின் முடிவுக்கு வந்த விஷயம் பணத்தைப் பற்றியதுதான்.

முதல் நாள் காலையில் ஒரு சல்லிக்காசை வாயில் போட்டு விழுங்கினாள்; பலன் தெரியவில்லை. இரண்டாவது நாள் காலணாவை விழுங்கிப் பார்த்தாள்; அப்போதும் ஒன்றும் தெரியக் காணோம். ஒரு வேளை தன்னைக் கண்ணம்மா ஏமாற்றி விட்டாளோ என்கிற சந்தேகங்கூட அவளுக்கு ஏற்பட்டுவிட்டது.

மரம் முளைக்க ஆரம்பித்தது!

அன்றைக்கு மாலையில் காவேரியின் தலை சுற்றியது; கிறுகிறுப்பு அதிகரித்தது. நிலைகொள்ளாதபடி அடிவயிற்றை இழுத்துப் பிடிப்பது போலிருந்தது. வாடித் துவண்டுபோய் மூலையில் உட்கார்ந்திருந்தாள்.

"கட்டாயம் மரம் முளைத்துவிட்டது" என்ற அந்த நம்பிக்கை அவளை இத்தனை வேதனைகளையும் பொறுத்துக் கொண்டிருக்கும்படி செய்தது.

இரவு பாதிப் பொழுதுக்கு மேலாகி விட்டது. நாகம்மாளின் வீட்டு அடுப்பங்கரை மூலையில் இருந்த சிமினி விளக்கொன்று, 'உயிரை விடுவோமா, வேண்டாமா?' என்ற நிலையில் இருப்பதுபோல் மினுக்கு மினுக்கென்று கண்சிமிட்டிக் கொண்டிருந்தது. நாகம்மாள் தலைவிரி கோலமாய் உட்கார்ந்து தேம்பிக்கொண்டிருந்தாள். அவளுக்கு அருகில் கீழே விரித்திருந்த கிழிசல் சமுக்காளத்தில் குழந்தை காவேரியின் உடல் அலங்கோலமாய்க் கிடந்தது. அவளுடைய உயிர் இன்னும் போக-வில்லை. தொண்டைக்கும் நெஞ்சுக்குமாக இழுத்துக் கொண்டு சிமினி விளக்கின் நிலைமையில் இருந்தது.

காவேரியைச் சுற்றிலும் மஞ்சள் மஞ்சளாய் வாந்தியெடுத்துக் கிடந்தன; அதன் மேலெல்லாம் நாகம்மாள் நெல் உமியை எடுத்துத் தூவி வைத்திருந்தாள்.

வைத்தியக்காரப் பண்டிதர் சற்று முன்னே சொல்லிப் போன வார்த்தைகளை நாகம்மாள் நினைத்துப் பார்த்தாள். "குழந்தைக்கு வயத்திலே களிம்பு ஊறி பாசி பிடிச்சிருக்கு. ஏதோ என்னால் முடிஞ்சதைச் செய்யறேன்; உசிரைக் காப்பாத்தக் கடவுளாலேதான் முடியும்" – நாகம்மாளுக்கு அந்த வார்த்தைகளை நினைத்துப் பார்க்கக் கூட பயமாக இருந்தது.

"குழந்தை எப்போதும் போல இருக்கப் போறான்னு நெனைச்சுத்தானே இன்னிக்குக்கூட அவளுக்கு ஒரு மாம்பழம் வாங்கிட்டு வந்தேன். என்னை இப்படிச் சோதிக்கிறாரே கடவுள்! அம்மா, காவேரி ! என் வயத்திலே பாலை வார்த்திடம்மா... " என்று கோவெனக் கதறினாள்.

காவேரிக்குச் சிறிது சுயநினைவு வந்தது; தாய் தனக்காக வாங்கி வந்த மாம்பழத்தைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, "அம்மா" என்றாள் மெலிந்த குரலில்.

"ஏண்டா கண்ணா"

"இனிமே உனக்கு ரொம்பப் பணம் கிடைக்கும் அம்மா; நான் இன்னிக்கு நிறையக் காசு முழுங்கியிருக்கேன். நான் செத்துப் போனவுடனே சீக்கிரம் காசு மரம் முளைக்கும். அப்புறம் உனக்குக் கஷ்டமே இல்லேம்மா!" என்று தன் முழு பலத்தையும் சேர்த்துக் கொண்டு ஒரே மூச்சில் காவேரி சொல்லி முடித்தாள்.

தாயின் நெஞ்சு ஆயிரஞ் சுக்கலாய் வெடித்து, நாலு பக்கமும் பிசிர்பிசிராய்ச் சிதறி விழுவது போல் தோன்றியது. நிலைக்குத்திய பார்வையோடு காவேரியைப் பார்த்துக் கொண்டே இருந்தாள்.

சிமினி விளக்கிலிருந்த எண்ணெயெல்லாம் தீர்ந்து போய்த் திரி எரிய ஆரம்பித்தது. ஒளியின் மஞ்சள் நிறம் மங்கிக் கொண்டே வந்து மாற்றமடைந்தது.

"நம்பளோட காசு மரத்துக்குப் பக்கத்துலே இந்த மாம்பழத்தோட கொட்டையையும் நட்டு வச்சிடம்மா!"– அவ்வளவுதான்; கடைசியாக

முணு முணுத்துக்கொண்டே காவேரி தன்னுடைய கரத்திலிருந்த மாம்பழத்தை நழுவவிட்டாள்

விளக்கு அணைந்தது.

காவேரியின் தேகத்தைப் பிடிவாதமாகத் தன்னுடைய கொல்லை-யிலே புதைத்துக் கொண்டாள் நாகம்மாள். அதனுடன் அந்த மாங்-கொட்டையும் புதைகுழியின் மேல் ஊன்றி வைக்கப்பட்டது.

நாகம்மாள் வார்த்துவந்த தண்ணீரினால்தானோ அல்லது அவள் தினந்தோறும் பெருக்கிவந்த கண்ணீரினால்தானோ தெரியவில்லை; எப்படியோ அந்த மாங்கொட்டை மாத்திரம் முளைத்து ஓர் இளங்கன்றாக வளர்ந்து விட்டது.

அந்த மாங்கன்றிற்குத்தான் காவேரியென்று நாகம்மாள் பெயர் வைத்திருந்தாள். அதுதான் காசுமரம்.

மூலம் : நூல் : சக்திவேல்


* * * * * *

## ☐ சொற்பொருள் குறிப்பு – அகர வரிசைப்படி (Note on Vocabulary)

அக்கரைப் பிரதேசம் – கடலுக்கு அப்பால் உள்ள நாடு; வெளிநாடு ; the land which is on the other shore of the sea ; foreign country

அக்கறை (n) – interest (in a field or in a person)

அகலத் திற – open widely

அடிவயிறு (n) – abdomen

அடுப்பங்கரை மூலை – corner of the kitchen

அடையாளம் (n) – a mark

அணா (n) – an anna, a coin of value equal to a sixteenth of a rupee (see காலணா)

அந்தரங்க ஆவல் (n) – secret (great) desire

அப்படியும் இப்படியுமாக – in this way or that way

அரைவயிற்றைக் கழுவ – apease the appetite not fully; subsist; eke out (merge existence)

அலங்கோலமாய் – in a disorderly state

அழுகையோடு அழுகையாய் – weeping; along with weeping
அனுதாபம் (n) – mercy, compassion
ஆச்சரியம் (n) – wonderful
ஆயிரம் சுக்கலாய் – into thousands of pieces
இரவோடு இரவாய் – at night
இளங்கன்று (n) – young sapling
இறுகக்கட்டிக்கொள் – hug tightly
உச்சி மோந்தாள் – (she) showed her affection to her child by smelling the crown of head
உடுப்பு (n) – dress
உற்றுநோக்கு (v) – look intently or keenly
ஊதா (n) – violet, purple
ஊர்ந்துசெல் (v) – move slowly, lit: to crawl
ஊன்று (v) – fix firmly; here, plant the seed
எடுபிடி வேலை (n) – petty household works
எரிந்துவிழு (v) – talk angrily
ஏறக்குறைய – approximately
ஒருகாணி நிலம் – land of one kaani, (kaani - $1\frac{1}{3}$ acres approximately)
ஒரு பைசாவாவது – atleast one paise
ஒன்பது மாத சிசு – child of nine months old
ஓட்டமும் நடையுமாய் – running intermittent by walking
ஓடிப்போ (v) – run away; leave away
கட்டி வரவில்லை – not sufficient (for livelyhood)
கண்சிமிட்டும் நேரம் – flickering
கதறு (v) – scream loudly
கருக்கிருட்டு (n) – the time before dawn; dusk
கலயம் (n) – small pot
கலவரம் (n) – fear; confusion; being upset; disturbance; clash
களிம்பு (n) – copper rust

காசு (விளைகிற) மரம் – the tree which can yeild money

காலணா (n) – quarter anna; anna - 12 paise; (before nayapaise was introduced to Indian coinage system the practice of counting rupees in terms of annas (1 rupee - 16 annas) was in vogue at the time when the author wrote this short story)

காலந்தள்ளு (v) – live, lit: to pass the time

கிழிசல் சமுக்காளம் – carpet which is torn.

கிளறிப்பார் (v) – see after poking or digging up

கிளைக்குக்கிளை – branch to branch

கிறுகிறுப்பு – giddiness

குசுகுசுவென்று – speak with each other in low voice; murmuring

குடியானவர் – farmer

குடியிரு – reside

குபேர போகம் (n) – the pleasure of the richman

குறுக்கும் நெடுக்குமாய் – up and down; here and there

கொஞ்சலாக – talking sweetly / softly and lovingly

கொத்துக் கொத்தாய் – in bunches

கொல்லை (n) – backyard

கோலமிடு (v) – decorate the floor with ornamental figures

சகிக்காமல் – unbearably; intolerately

சம்பளப்பணம் (n) – salary; wages

சிசு (n) – foetus

சிமினி விளக்கு (n) – chimney, a type of kerosene lamp

சிரத்தை (n) – care

சிரமம் (n) – difficulty; botheration

சிறிதேனும் – atleast a small amount / quantity

சீற்றம் (n) – fury

செல்லப்பெயர் – pet name

செலவுசெய் (v) – spend

சேலை முனை – முந்தானை; border of a saree

சோகம் (n) – sorrow

| | | |
|---|---|---|
| சோகம் கலந்த பார்வை | – | sorrowful look |
| தட்டுமுட்டுச் சாமான்கள் | – | house-hold articles |
| தந்திரமாக | – | intelligently, (lit: cunningly) |
| தம்படிக்காசு, | – | சல்லிக்காசு ; a pie equal to one twelth of an anna, under the old coinage |
| தலைவிரிகோலம் (n) | – | appearance with disorderly hair |
| தளிரும் விடாமல் | – | without sprouting |
| தன்மட்டில் | – | within oneself |
| தனிமை (n) | – | loneliness; seclusion; solitude |
| திகில் (n) | – | fright ; sensational |
| திரி (n) | – | wick of the lamp |
| திரும்பிப்போ (v) | – | go back |
| தினந்தினம் | – | daily |
| துவண்டுபோ (v) | – | get depressed; get disheartened |
| தெருமூலை (n) | – | corner of the street |
| தெளிவுப்படுத்திக்கொள் (v) | – | make clear |
| தேம்பு (v) | – | sob |
| தொண்டைக்கும் நெஞ்சுக்கும் | – | between throat and chest |
| நச்சுப்படுத்து (v) | – | get (oneself) poisoned |
| நம்பிக்கை (n) | – | belief |
| நன்செய்நிலம் (n) | – | wet land |
| நிம்மதியடை (v) | – | feel peace of mind |
| நிலபுலம் | – | lands |
| நிலைக்குத்திய பார்வை (n) | – | the sight (of eyes) be fixed (at the time of death) |
| நிவர்த்திசெய்துகொள் (v) | – | get cleared |
| நிழலில் | – | in the shadow |
| நுழை (v) | – | enter |
| நெஞ்சு (n) | – | mind, heart |
| நோட்டு (n) | – | (one rupee) note |
| பஞ்சம் (n) | – | famine |
| பணக்காரவீடு (n) | – | the wealthy house (family) |
| பணம் பணமாய் | – | with abundant money |
| பரக்கப்பரக்க | – | hurriedly |

| | | |
|---|---|---|
| பழைய கறி | – | old (vegetables) curry |
| பாசி (n) | – | moss |
| பாசிபிடி (v) | – | get moss |
| பாத்திரம் பண்டம் | – | utensils |
| பாதிப்பொழுது | – | half of the time |
| பாவம் செய்த கட்டை | – | the body which did sinful deeds |
| பிசிர்–பிசிராய் | – | into small particles, lit: fibres |
| பிரபு (n) | – | lord, man of wealth |
| பிராம்மணக் குழந்தை | – | Brahmin child |
| புதைகுழி (n) | – | burial place |
| புலப்படு (v) | – | become conspicuous |
| புழுதி (n) | – | dry dust like mud |
| பூலோகம் (n) | – | earth |
| பெருமூச்சு (n) | – | 1. sigh (of relief, worry, etc)<br>2. deep breath (when one is asleep) |
| பெருமூச்சு விடு (v) | – | breath deeply, to sigh |
| பெருமைக்குரிய | – | esteemed |
| பைசா | – | a pie |
| பொருமு (v) | – | sob |
| பொறுக்கமுடியாத | – | unbearable, intolerable |
| போராட்டம் (n) | – | struggle |
| மஞ்சள் நிறம் | – | yellow colour |
| மஞ்சள் மஞ்சளாய் | – | yellow; yellowly |
| மண்கலயம் | – | (small) earthen pot; mud pot |
| மலிந்து | – | plentiful |
| மாங்கன்று | – | sapling of mango plant |
| மாத்திரம் | – | alone; only |
| மாதுளங்கொட்டை | – | nut of pomegranate fruit |
| மாதுள மரம் | – | pomegranate tree |
| மானசிகமாக (மானசிகம்) | – | that which is or which is done in the mind |
| மிட்டாய் | – | sweetmeat; made of treacle; confectionery |
| மிட்டாய்க்காரன் | – | sweetmeat seller |

| | | |
|---|---|---|
| மினுக் மினுக்கென்று | – | with glimmering, flickering |
| மீதம் பிடி (v) | – | save |
| முளை கிளம்பு (v) | – | sprout |
| முன்னைவிட | – | better than before |
| மெழுகு | – | smear to clean (the floor) with cowdung and water |
| மேல்வரும்படி (n) | – | extra income |
| ரூபா | – | rupee |
| வம்பு பண்ணு (v) | – | give unnecessary trouble |
| வயிற்றைக் கழுவு (v) | – | subsist; eke out (meagre existence) |
| வர்க்கம் (n) | – | social class |
| வரும்படி (n) | – | income |
| வழக்கம் (n) | – | that which is usual; customary |
| வறண்டு | – | having dried up |
| வார்த்து | – | having poured |
| வானம் | – | sky |
| விடைபெறு (v) | – | take leave |
| விதவிதமான | – | different / variety of |
| விம்மச்செய் (v) | – | make (a person) sob |
| விரக்தி (n) | – | bitterness (caused by frustration); lack of involvement or enthusiasm |
| விளக்கிக்கொடு | – | giving (it) after cleaning |
| விளக்கு வைக்கிற நேரம் | – | dusk, (literally, the time of lighting a lamp] |
| வீட்டைக் கூட்டு (v) | – | sweep the house |
| வீட்டுக் கொல்லை (n) | – | backyard of the house |
| வெடுவெடுப்பாய் பேசு (v) | – | speak with rage |
| வெப்பம் கலந்த பெருமூச்சு (n) | – | deep breath with some hotness |
| (வெளிப்பக்கத்துத்) திண்ணை | – | raised platform, (situated outside the house) |
| வேரும் விடாமல் | – | without even sprouting root |

## ❑ பயிற்சி (Exercise)

I. *எழுத்துத் தமிழ் வடிவங்களைத் (written forms) தருக.*

1. மாத்திரம்
2. வரும்படி
3. நேரமாச்சு
4. என்னத்துக்கம்மா அழுகிறே
5. ஒண்ணுமில்லேடி
6. இனிமே
7. வேறே
8. கிளம்புறாங்க
9. சுருக்க (வீட்டுக்கு) வந்திடறேன்
10. நாளைக்கின்னே
11. சொல்ற
12. மரமா முளைக்குது
13. ரொம்ப
14. கோவிச்சுக்கவே
15. தெரிய மாட்டேங்கறதே
16. முழுங்கிவிட்டேண்டி
17. முழுங்கிட்டேன்
18. வயத்திலேயிருந்து
19. காசையா முழுங்கினே
20. காசு முழுங்கினா காசுமரம் முளைக்கும்
21. எத்தனை பணம் பூலோகத்தில் இருக்கோ அத்தனையும்
22. உசிரோடே
23. வர்றபோதே
24. செத்துப் போயிடுவே
25. உசிரைக் காப்பாத்த
26. இன்னிக்கு
27. வாங்கிட்டு
28. முழுங்கிருக்கேன்
29. நம்பளோட
30. நட்டு வச்சிடம்மா
31. நெனை

II. *இணைச் சொற்கள் (Synonyms) தருக.*

1. மலிந்துகிட
2. வேங்கை
3. சோகம்
4. நோக்கு
5. சிற்றம்
6. சிசு
7. இரவு
8. விதவிதமான
9. பண்டங்கள்
10. தகப்பன்
11. அக்கரைப் பிரதேசம்
12. தின் (தின்னப் போகிறாள்)
13. ரொம்ப
14. பணம்
15. சந்தேகம்
16. அடுப்பங்கரை
17. செத்துப்போ
18. தேகம்
19. புதைகுழி
20. கொல்லை
21. உடுப்பு
22. நெஞ்சு
23. போராட்டம்
24. வெப்பம்

III. பொருத்தமான ஒன்றைத் தேர்ந்தெடுத்து கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. காவேரிக்கு வயது வளர்ந்து கொண்டு ———— தாயின் மேல் அளவுக்கு மீறிய பாசமும் வளர்ந்து கொண்டு வந்தது.
2. மற்ற ———— தானே ஏதாவது மிட்டாய் வாங்கித் தின்னப் போகிறாள் ? என்று நினைத்தாள்.
3. தான் வேலை பார்த்து வரும் வீட்டிலுள்ள பிராம்மணக் குழந்தைகளைப் போலவே தன்னுடைய குழந்தையையும் ———— வேண்டும் என்பது அவளது மனத்தில் இருந்த அந்தரங்க ஆவல்.
4. தன்னுடைய கற்பனைக்கு ———— மானசிகமாக ஒரு காசு மரத்தை உற்பத்தி செய்து கொண்டு அதன் கிளைகளில் நிற்கும் காசுகளை மனக்கண்ணால் கண்டு அனுபவித்துக் கொண்டிருந்தாள்.
5. குழந்தை ———— இருக்கப்போறான்னு நெனச்சுத்தானே அவளுக்கு ஒரு மாம்பழம் வாங்கிட்டு வந்தேன்.
6. 'உயிரை விடுவோமா வேண்டாமா?' என்ற நிலையில் ________ மினுக்மினுக்கென்று கண் சிமிட்டிக் கொண்டிருந்தது.
7. தாயின் நெஞ்சு ஆயிரம் சுக்கலாய் வெடித்து நாலு பக்கமும் பிசிர் பிசிராய்ச் சிதறி ________ தோன்றியது.

Cues: [தகுந்தாற்போல், வந்தது போலவே, எப்போதும் போல், விழுவது போல், இருப்பது போல், வளர்ந்து வர, பிள்ளைகளைப் போல].

IV. அடைப்புக்குள் உள்ள சொற்களைப் பொருத்தமான வினையடைகளாக (adverb) மாற்றிக் கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. சம்பளப் பணமும், அவர்கள் தினந்தினம் கொடுத்து வந்த பழைய கறி, சாதம், குழம்பு முதலிய பொருள்களும் நாகம்மாளின் அரை வயிற்றைக் கழுவப் ______ இருந்தன (போதியன)
2. உள்ள வருமானத்தைக் கொண்டு அப்படியும் _ காவேரியுடன் பொழுதை ஓட்டி வந்தாள். (இப்படியும்).
3. கோபம் சற்றுத் தணிந்தவுடன் தாயின் மேல் இருந்த வெறுப்பு முழுவதும் காவேரிக்கு ________ மாறிவந்தது. (அனுதாபம்).
4. மண்ணைக் கிளறிப் பார்த்த போது எல்லாக் காசுகளும் வேரும் விடாமல், தளிரும் விடாமல் முன்னைவிட ________ பாசி பிடித்துப் போய் கிடந்தன. (கறுப்பு)
5. ஆகையால் வெகு ________ கண்ணம்மாவிடம் பேசினாள். (தந்திரம்).

V. அ. எ.கா.வில் உள்ளது போல் வேற்றுமை உருபு ஏற்ற வடிவமாக (case inflected) மாற்றிக் கோடிட்ட இடத்தை நிரப்புக.

எ.கா. கண்டியிலிருந்து கொண்டு வந்த பணத்தை நன்செய் நிலத்தில் போட்டுவிட்டு, அதன் வரும்படியால் சிரமமில்லாமல் காலந்–தள்ளினார்கள். (கண்டி + obli. form ).

1. மேஸ்திரியின் ______ சம்பளந்தான் ஐந்து ரூபாய் கிடைத்து வந்ததே தவிர வேறுவிதமான மேல்வரும்படி ஒன்றையும் நாகம்மாளால் எதிர்பார்க்க முடியவில்லை. (வீடு + obli. form).

2. காவேரி தன்னுடைய ______________ சில காசுகளை எடுத்துக் கொல்லையில் ஊன்றி வைத்தாள். (கலயம் + obli. form).

3. நிச்சயம் அந்தப் பயலோட ___________ ஆரஞ்சு மரம் முளைக்கப் போறது என்று தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள். (வயறு + obli. form).

ஆ. எ.கா. வில் உள்ளது போல் வினையெச்ச வடிவங்களாக (verbalparticiple) மாற்றிக் கோடிட்ட இடத்தை நிரப்புக.

எ.கா. நாகம்மாள் தன் பெயரில் இருந்த ஒரு காணி நிலத்தையும் ______ அதைக் கொண்டு _______ வந்தாள். (வில், காலம் தள்ளு)

நாகம்மாள் தன்பெயரில் இருந்த ஒரு காணி நிலத்தையும் விற்று, அதைக்கொண்டு காலம் தள்ளி வந்தாள்.

1. வானம் மழை பெய்யாததால் நில புலங்களெல்லாம் ——— ——————— கிடந்தன. (வறண்டு போ, புழுதி படி).

2. அதிகாலையில் ________________ கணக்குப்பிள்ளை ராஜமையரின் வீட்டைக் __________ __________ __________ பாத்திர பண்டங்களை ___________ மற்ற எடுபிடி வேலைகளையும் செய்து வந்தாள். (எழுந்து செல், கூட்டு, மெழுகு, கோலமிடு, விளக்கிக்கொடு).

இ. எ.கா. வில் உள்ளது போல் presentperfect/pastperfect/continuous வடிவமாக மாற்றி கோடிட்ட இடத்தை நிரப்புக.

எ.கா. இரண்டு ஆண்டுகளுக்கு முன்புதான் அவளுடைய கணவன் கண்டிச்சீமைக்கு ஓடிப்போயிருந்தான். (ஓடிப்போயிரு).

1. அவளுடைய கணவன் சொந்த ஊருக்கு திரும்பி ________ (வந்திரு).

2. நாகம்மாளும் அவள் கணவனும் எத்தனையோ முறை தங்கள் வீட்டுக் கொல்லையில் தனிமையாக உட்கார்ந்து பேசி ——————— (கொண்டிரு).

3. வீட்டின் வெளிப்பக்கத்துத் திண்ணையில் நாகம்மாள் அழுது– கொண்டு ——————— (உட்கார்ந்திரு).

4. காவேரி சற்றுநேரம் கவலையோடு தாயையே ——————— (பார்த்துக் கொண்டிரு) .

5. கவலையெல்லாம் மறக்கறதுக்காக கடவுள் எனக்குக் காவேரியை ——————— (கொடுத்திரு); அது ஒண்ணே போதும் என்று நினைத்தாள் நாகம்மாள்.

6. அதன் மேலெல்லாம் நாகம்மாள் நெல் உமியை எடுத்துத் தூவி ——————— (வைத்திரு).

7. நான் இன்னிக்கு நிறையக் காசு ——————— (முழுங்கியிரு) என்று சொல்லி முடித்தாள் காவேரி.

*ச. எ.கா. வில் உள்ளது போல் சொல்லிணைகளைப் பயன்படுத்திச் சொந்த வாக்கியங்கள் எழுதுக.*

*எகா.: மண்ணைக் கிளறிப் பார்த்தபோது எல்லாக் காசுகளும் வேரும் விடாமல் தளிரும் விடாமல் கறுப்பாகப் பாசிபிடித்து போய்க் கிடந்தன. (வேர்விடு – தளிர்விடு)*

1. பூ விடு – காய் விடு
2. கால் முளை – வால் முளை
3. சோறு கிடை – நீரு கிடை
4. ஊர் தெரி – பேர் தெரி

*உ. எ.கா.வில் உள்ளது போல் குறிப்புச்சொல்லைப் (cue) பயன்படுத்திச் சொந்த வாக்கியங்கள் எழுதுக.*

*எ.கா. காசு மாத்திரமா காய்க்கும் ? ரூபா, அணா, பைசா, நோட்டு அத்தனையும் கொத்துக் கொத்தாய்க் காய்க்கும்.*

1. பூ மாத்திரமா பூக்கும் ? ;– (cues : அரும்பு, மொட்டு, கொத்து )
2. எழுத்து மாத்திரமா எழுதுவான் ? (cues : சொல், தொடர், வாக்கியம் )

*ஊ. எ.கா. வில் உள்ளது போல் ஒவ்வொரு சொல்லையும் பெயராகவும் வினையாகவும் பயன்படுத்தி எழுதுக.*

i. *எ.கா. பூ பூக்கும், காய் காய்க்கும் (பூ ; காய்).*

விதை, குத்து, மலர், கனி, அணி

ii. *எ.கா.தன்னால் எவ்வளவு எண்ணங்களை எண்ணிப்பார்க்க முடியுமோ அவ்வளவு எண்ணங்களையும் எண்ணிக் கொண்டே அவன் பள்ளிக் கூடத்தை நோக்கிச் சென்றான் (எண்ணம் ; எண்).*

1. பார்வை ; பார் 2. கல்வி ; கல்

VI. *எ.கா.வில் உள்ளது போல் வாக்கியம் ஒவ்வொன்றையும் பொருள் சிதைவு இன்றி (wityout any loss of meaning) வெவ்வேறு முறைகளில் மாற்றி எழுதுக.*

*எ.கா.இனிமே உனக்கு ரொம்பப் பணம் கிடைக்கும் அம்மா*

*a. உனக்கு இனிமே ரொம்பப் பணம் கிடைக்கும் அம்மா.*
*b. உனக்கு ரொம்பப் பணம் இனிமே கிடைக்கும் அம்மா.*
*c. உனக்கு ரொம்பப் பணம் கிடைக்கும் இனிமே அம்மா.*
*d. ரொம்பப்பணம் கிடைக்கும் அம்மா இனிமே உனக்கு.*

1. நாகம்மாளுக்கு இப்போது ஏறக்குறைய நாற்பது வயதாகிறது.
2. 'மண்ணைக் கிளறிப் பார்த்தபோது எல்லாக் காசுகளும் வேரும் விடாமல் தளிரும் விடாமல் முன்னைவிடக் கறுப்பாகப் பாசிபிடித்துப் போய்க் கிடந்தன'.
3. அன்றைக்கு ஒரு பையன் ஆரஞ்சுப் பழவிதை ஒன்றை அப்படியே விழுங்கிவிட்டுப் பள்ளிக்கூடம் வந்திருந்தானாம்.
4. எப்படியாவது இன்றைக்கு அம்மாவிடமிருந்து காசுவாங்கிவிட வேண்டும்.

VII. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக. (Explain with reference to context).*

1. 'ஊகூம்! எதுக்காகன்னு சொன்னாத்தான் உன்னை விடுவேன்'
2. 'அப்படியானால் உன் வயத்திலேயிருந்து கட்டாயம் ஒரு மாதுள மரம் முளைக்கும்'
3. 'அந்த சமயத்தில் நான் உசிரோடே இருப்பேனா?'
4. உசிரைக் காப்பாத்த கடவுளாலேதான் முடியும்.

VIII. *ஒவ்வொன்றையும் சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

அ. 1. தட்டுமுட்டுச்சாமான்கள்
2. வர்க்கம்
3. கருக்கிருட்டு வேளை
4. கிளைக்குக் கிளை

5. மினுக்கு மினுக்கென்று
6. வெப்பம் கலந்த பெருமூச்சு
7. எடுபிடி வேலை
8. வெடுவெடுப்பாக
9. பரக்க பரக்க
10. குசுகுசுவென்று
11. ஓட்டமும் நடையுமாய்
12. கொத்துக் கொத்தாய்
13. இரவோடு இரவாய்
14. அழுகையோடு அழுகையாய்
15. மஞ்சள் மஞ்சளாய்
16. பணம் பணமாய்
17. ஆயிரஞ்சுக்கலாய்
18. பிசிர் பிசிராய்
19. கோபம் கோபமாய்
20. குறுக்கும் நெடுக்குமாய்
21. சுவரோடு சுவராய்

ஆ. 1. சோகம் கலந்த பார்வை
2. அரைவயிற்றைக் கழுவு
3. அப்படியும் இப்படியுமாக
4. தெளிவுபடுத்திக்கொள்
5. வாடித் துவண்டு போ

IX. *இரண்டு அல்லது மூன்று வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. கணவன் அக்கரைப் பிரதேசம் சென்ற பிறகு நாகம்மாள் எவ்வாறு வாழ்க்கை நடத்தினாள்?
2. "நம்மவீட்டில் காசுமரமா முளைக்குது !" என்று நாகம்மாள் தன் குழந்தையின் மீது எரிந்துவிழக் காரணம் என்ன?
3. தாயின் வருத்தத்தைப் போக்கக் காவேரி செய்த யோசனை யாது?
4. நாகம்மாளின் நெஞ்சு ஆயிரம் சுக்கலாய் வெடித்து, நாலுபக்கமும் பிசிர் பிசிராய்ச் சிதறிவிழுவதுபோல் தோன்றியதற்குக் காரணம் என்ன?
5. காசுமரம் எது ? அதற்கு என்ன பெயர் வைத்தாள் நாகம்மாள் ?

X. *'காசுமரம்' – சிறுகதையின் சுருக்கத்தைச் சுமார் 200 சொற்களில் எழுதுக.*

## ❑ இலக்கணக் குறிப்பு (Note on Grammar)

1.0 N + ஒடு N + ஆய் : extended time or accompaniment.

The construction N+ஒட N+ஆய் is used here as a temporal construction. That is, the N is a 'time expression', the meaning indicates extended time, as in:

*இரவோடு இரவாய்* : All through the night, night after night
night in and night out

1.1 However with 'non-time expressions' the meaning along with 'X' or 'accompanying X' is expressed.

ஒட்டமும் நடையுமாய், குறுக்கும் நெடுக்குமாய்,
அழுகையோடு அழுகையாய்

1.2 Note that only mass nouns can be used in this non-temporal type of construction when the noun denotes a single unit, accompaniment is expressed with ஒட only as in : நம்பளோட

2.0. Post position 'ஆக' occuring with the dative to give the meaning for the sake of, on behalf of

சம்பாதிப்பதற்காக 'for earning'

2.1 Post position 'ஆக' occuring with nouns and function as adverb

கொஞ்சலாக, கறுப்பாக, தந்திரமாக

2.2 Post positions occuring with another adverb

அப்படியும் இப்படியுமாக

3.0 போல் and போல : like

Sentence + போல் (v)

Post position (meaning 'like' போல் / போல ) usually follows the accusative case.

4.0 Reduplication அடுக்குத்தொடர்

கொத்துக் கொத்தாய், பணம் பணமாய், பிசிர் பிசிராய்,
மஞ்சள் மஞ்சளாய், வெடு வெடுப்பாய்

5.0 Usage of present and past continuous forms.

பேசிக்கொண்டிருக்கிறான்; பேசிக்கொண்டிருந்தான்
எழுதிக்கொண்டிருக்கிறான்; எழுதிக்கொண்டிருந்தான்

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

அன்றாட வாழ்க்கையில் காணும் பேச்சுத்தமிழையும் எழுத்து வடிவத்தில் பயன்படுத்தி இயல்பாக வெளிப்படுத்தும் தன்மையைக் கொண்டது அகிலனின் மொழிநடை. குடும்பச்சூழ்நிலைகளின் பின்னணியில் உள்ள சாதாரண பாத்தி-ரங்களை (characters) கையாளும்போது அவற்றிற்கு ஏற்ற சொற்களையும் (lexical items) தொடர்களையும் மற்றும் பேச்சுவழக்கு மேற்கோள்களுடன் (spoken quotings) பொருத்தமாகத் தேர்ந்தெடுத்து நாவல், சிறுகதை போன்ற தொடர்நிகழ்ச்சிகளை விளக்குவதாக அமைகிற இவருடைய மொழி நடையை 'விவரிப்பு நடை' (narrative style) என்று கூறுவர் நடையியலார்.

# 4. குடிமக்கள் காப்பியம்

## தெ. பொ. மீனாட்சி சுந்தரன்

[சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் 8.1.1901 இல் பிறந்த தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் ஆங்கிலம், மலையாளம், கன்னடம், தெலுங்கு, இந்தி, சமஸ்கிருதம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மொழிகளை அறிந்தவர். பிறந்தது எப்படியோ (கட்டுரை) 1951 ; தமிழா நினைத்துப்பார் (சமுதாயம்) 1954; சமணத் தமிழ் இலக்கிய வரலாறு (வரலாறு) 1961; திருவெம்பாவை, திருப்பாவை (பண்பாடு) 1961; கவி இரவீந்திர நாத் தாகூர் (வாழ்க்கை) 1961 -- போன்ற தமிழ் நூல்களையும், Mullaippaattu-collected papers, History of Tamil literature போன்ற ஆங்கில நூல்களையும், கால்டுவெல், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் போன்ற மொழி பெயர்ப்பு நூல்களையும் ஆக்கியுள்ளார். தமிழகத்தில் 'மொழியியல் கல்வி' வளரக் காரணமாக இருந்த இவர் மதுரை பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகவும் நீண்ட காலம் பணியாற்றியுள்ளார்.]

உலகம் தோன்றியதிலிருந்து உலகம் முழுதும் கதை என்றால் முடிமக்கள் கதைதான். வடமொழியில் ஆதிகாவியம் என்று புகழப்-பெறுவது வால்மீகியின் இராமாயணமே. கிரேக்கர்கள் பழங்காப்பியம் எனப் பாராட்டுவது ஹோமர் பாடிய இலியட் என்பதேயாம். மெனலஸ் என்ற அரசர் பெருமானின் அழகிய மனைவியாம் ஹெலன் பெருமாட்டியை பாரில் என்ற இலிய நாட்டு இளவரசன் சிறை எடுத்ததால் மூண்ட போரினையே பாடுகிறது அந்தப் பழங்காப்பியம். வர்ஜில் என்ற பாவாணர் பாடிய ஈலிட் என்பதே இலத்தீன் மொழியின் பழங்காப்பியமாகும். ரோமப் பேரரசினைத் தோற்றுவித்த ஈனியஸ் என்ற அரசர் பெருமானது வரலாற்றினைக் கூறவே அக்காப்பியம் எழுந்தது. இவ்வாறு எந்த நாட்டுப் பழங்காப்பியத்தினை ஆராய்ந்தாலும் அரசர் வீரரது வரலாற்றினையே பாடிப் புகழக் காண்கிறோம்.

முடியரசர்கள் காலம் ஏறக்குறைய முடிந்துவிட்டது என்றே சொல்லிவிடலாம். இது குடியரசுக் காலம். அது மட்டுமா? முதலாளி என்று புகழ்வதெல்லாம் மலையேறிப் போய்விட்டதன்றோ? பாட்டாளி என்ற சொல்லே பாட்டைப் போல இனிக்கின்ற காலம் இது. இத்தகைய நாளில் முடிமக்களைப் பற்றிப் பாடிய நூல்களின் வாழ்வுக்கும் முற்றுப்புள்ளி வைக்க முயல்வது வியப்பு அன்று. அண்மையில் தமிழிலக்கியத்தினை

ஆராய எண்ணிய இளைய அறிஞர் " முதலாளி இலக்கியமும் முடிமக்கள் இலக்கியமும் அன்றிக் குடிமக்கள் இலக்கியம் என ஏதேனும் உண்டா?" என்று நெஞ்சம் குமுறுகிறார். குறம்பாடினாலும் மீனாட்சி குறமாக முடிகிறது. குறவஞ்சி பாடினாலும் சரபேந்திரர் குறவஞ்சியாக நீண்டு ஓடுகிறது. ஆனால் "பெரியோர்ப் புகழ்தலும் இலமே சிறியோர் இகழ்தல் அதனினும் இலமே" என்று பழந்தமிழன் பாடியுள்ளது நினைவிற்கு வருகிறது. இப்பழந்தமிழன் வாய்ப்பந்தல் போடுகிறானா? உண்மையைத்-தான் கூறுகிறானா? எண்ணித்தான் பார்ப்போமே! தமிழில் ஆதிகாவியம் எது? பாரதமா? அது பின்னாளில் எழுந்தது. இராமாயணமா? அது கம்பனால் சீர்பெற்றது. தமிழிலக்கிய வரலாற்றில் முதல் முதலாகக் காப்பியம் எனச் சிறப்புறத் தோன்றியது சிலப்பதிகாரமே. ஆம். அது யாருடைய கதை? சோழன் கரிகாலன் வருகிறான். ஆனால் அவனுடைய கதை அன்று. பாண்டியன் நெடுஞ்செழியன் அரசு கட்டிலில் வீற்றிருக்கின்றான். கண்ணகி எதிரே உயிர் விடுகின்றான். ஆனால் அவன் கதையும் அன்று. சேரன் செங்குட்டுவன் வடநாட்டில் போர் புரிகின்றான். கண்ணகிக்குக் கோயில் கட்ட இமயத்திலிருந்து கல் எடுத்து வருகின்றான். ஆனால் அவன் கதையும் அன்று. முரசு முழங்குதானை மூவரும் கதையில் வந்தும் அந்த முடிமக்கள் கதையாகச் சிலப்பதிகாரம் விளங்கவில்லை. குடிமக்களில் ஒருவர் கதை; அதிலும் ஒரு பெண்ணின் கதை. கண்ணகியின் கதையன்றோ சிலப்பதிகாரம். கோவலன் குடி மக்களுள் ஒருவன். மாதவி பரத்தையரில் ஒருத்தி. இவர்களுடைய சிக்கல் வாழ்க்கையே சிலப்பதிகாரச் சித்திரம்.

இது நாம் வேறு எங்கும் காணாத ஒரு வியப்பு. முடிமக்கள் வரலாறே ஆதி காப்பியமாகப் பிறநாடுகளில் எல்லாம் அமைந்து விளங்க, குடிமக்கள் வரலாறே ஆதிகாப்பியமாகத் தமிழ்நாட்டில் அமைந்து இலங்குகிறது. குடியரசு உலகிலும் இந்தக் காப்பியத்தைப் பாராட்ட இடம் உண்டு. பாட்டாளி யுலகமும் இதனைப் பரிவுடன் வரவேற்கும். ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை, வேட்டுவவரி என்று பாட்டாளிகளைப் பாடுவதில் சிலப்பதிகாரம் பாடிய இளங்கோ-வடிகளுக்கு எவ்வளவு மகிழ்ச்சி! எவ்வளவு களிப்பு! முரசு முழங்குதானை முடிமக்கள் மூவரும் தமிழ் நாட்டில் ஒருமைப்பாட்டினைச் சிதைத்து வந்தனர். குடிமக்கள் வழியாகவே தமிழ் நாட்டின் ஒருமை ஓங்கிவளரக் காண்கிறார் இளங்கோவடிகள். சோழ நாட்டில் பிறக்கிறாள் கண்ணகி; பாண்டி நாட்டில் கணவனை இழக்கின்றாள்; சேர நாட்டில் தெய்வ-மாகின்றாள். மூவரசர் பேராசையால் முப்பெருந்துண்டாய் வெட்டுண்டு

கிடக்கும் தமிழன்னை கண்ணகியின் வாழ்க்கை வழியே ஓருருவாய் உயிர் பெற்று விளங்குகிறாள்.

என் வாழ்நாளுக்குள்ளேயே ஒரு புரட்சியைக் காண்கிறேன். முடிமக்களைப் பற்றியே கதையைக் கேட்டும் எழுதியும் வந்த நானே இப்போது குடிமக்கள் கதையைக் கேட்டும் எழுதியும் வருகிறேன். என் இளமை நாட்களில் இதனை நான் நம்பி இருக்கமுடியாது. ஆனால் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இதனை நம்பினார் இளங்கோவடிகள். அரசர் குடியிற் பிறந்து, அரச செல்வத்தில் வாழ்ந்தவர் நம்பினார். நம்பியது மட்டுமா? நம்பியபடி குடிமக்கள் கதையினைக் காப்பியமாக எழுதினார்! எழுதியது மட்டுமா, தாம் எழுதியபடி தமிழ்நாடும் அந்தக் காப்பியத்தை அன்று முதல் இன்றுவரை பாராட்டும்படியும் செய்துவிட்டார்.

இளங்கோவடிகள் செய்த புரட்சி பெரிதன்றோ? சங்க காலமே ஒரு புரட்சிக் காலம். அந்த நாளைய புலவர்கள் பழைமைக்கு அடிமையாகாது வெற்றி பெற முயன்றார்கள். அவர்கள் கூறியிருக்கும் உவமைகளைக் கண்டால் இந்த உண்மை விளங்கும். தாங்கள் நேரில் கண்ட போர்களையும் ஊர்களையுமே உவமை கூறுகின்ற புதுமையை அங்குக் காணலாம். "வஞ்சி மாநகர் போல அழகிய தலைவி ; வெண்ணிப்போர் ஆரவாரம் போலப் பழிச் சொல் அம்பலத்தில் ஆரவாரமாகிறது" என்றெல்லாம் பாடுகிற ஒரு புது மரபினைச் சங்கப் புலவர்கள் நிலைநாட்டிவிட்டதனை என்ன என்பது ! இந்தப் புரட்சியின் பயனாக விளையும் புரட்சிகள் பல. முடிமக்கள் வாழ்வில் காணும் சிறப்புகள் எல்லாம் குடிமக்கள் வாழ்விலும் கண்டால் அன்றோ காப்பியம் இனிக்கும்? காதலும் அழுகையும் வீரமும் காப்பியப் பெருஞ்சுவைகள். மாதவியும் கோவலனும் ஒருயிரும் ஈருடலுமாக வாழ்கின்ற காதல் வாழ்வே சிலப்பதிகாரப் புகார்க்காண்டம். கணவனையும் இழந்த கண்ணகியே அவலச்சுவையின் ஆழத்தைக் காட்டுகிறாள். அந்தக் கதை தான் மதுரைக்காண்டம். கண்ணகிக்காக எடுத்த கல்லினை வடவரசர் தலைமீது ஏற்றிவந்த செங்குட்டுவன் வீரத்தைப் பாடுவதே வஞ்சிக்காண்டம். அரசனிடம் வீரம் கண்டால் குடிமக்கள் காப்பியம் எழுதற்கு இடம் இல்லை. கோவலனிடமும் வீரம் காண்கிறார் இளங்கோவடிகள். இன்று உலகம் போற்றும் வீரம் – காந்தியடிகள் காட்டிய வீரம் – இதனை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் காண்கிறார் இளங்கோவடிகள். யானையைக் கொல்லாமலே யானைக் காலிலிருந்து முதியவனைக் காப்பாற்றுகின்றான் கோவலன். கருணை மறவனாகக் காட்சியளிக்கின்றான்.

கண்ணகி வீட்டை விட்டு வெளிவராத பெண் – வெளி நாட்டில் பாண்டியனை வெல்கிறாள்; கடவுளாக மாறுகிறாள். ஈதொரு புதுமை. பரத்தையரைப் பழிப்பதே அன்றும் இன்றும் வழக்கம். பரத்தையர் குடிப்பெண்ணான மாதவி கற்பரசியாக ஒங்குகிறாள். துறவறத்தின் முடிமணியாகச் சிறக்கின்றாள். அவள் மகள் உலக குருவாக விளங்குவதனை மணிமேகலை பாடுகின்றது. குடிமக்கள் சிறப்பினை இதற்கு மேலும் எவ்வாறு கூறுவது! திருவள்ளுவர் தமது பொருட்பாலில் குடிகளது சிறப்பினைக் கடைசி 13 அதிகாரத்தில் கூறுவதன் நுட்பம் இப்போது விளங்குகிறது அன்றோ? குடிமக்கள் சிறப்பினை இடைக்காலத்தில் தமிழ்நாடு மறந்ததும் உண்டு. அப்போது திருவள்ளுவர் கூறிய குடியியலின் நுட்பத்தினை உணரமாட்டாது அந்த அதிகாரங்களை ஒழிபியல் என்று ஒதுக்கி வைத்தது புதுமையோ? ஒழிபியல் என்பது அனாமத்துக் கணக்கு. நாட்டின் உயிர்நிலையாய்ப் பொருட்பாலின் முடிமணியாக விளங்குவது ஒழிபியலாக ஒதுக்கப்படுவது காலத்தின் கோளாறன்றோ? இன்று குடிமக்கட் காப்பியத்தின் பெருமையை உணர்ந்து வருகிறோம். குடியரசில் அன்றோ வாழ்கிறோம் ! பழைய நூல்களைப் புதிய கண்கொண்டு உண்மை உணர இனி வழியேற்படும்.

மூலம் : நூல் : குடிமக்கள் காப்பியம்
(முதல் கட்டுரை)
வெளியீடு : மீனாட்சி புத்தக நிலையம், மதுரை – 1


* * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – அகர வரிசைப்படி (Note on Vocabulary)

அண்மையில் – சமீபத்தில்; recently
அரசுகட்டில் (n) – அரியணை; throne
அரசர்பெருமான் – பெருமதிப்பிற்குரிய மன்னன்; highly respected king; lord
அன்று (n) – அந்தநாள்; that day
அன்று (adv) – குறிப்பிட்ட அந்த நாளில் ; on the (specified) day
அன்று (n) – ஒன்றை மறுப்பதற்குப் பயன்படும் எதிர்மறைச் சொல் ; அல்ல (not this)

அனாமத்துக் கணக்கு (n) – கணக்கில் வராதது ; கணக்குக்காட்ட முடியாதது; not properly accounted for

ஆய்ச்சியர் – ஆயர் குலப் பெண்கள்; women of cowherd community who look after cattle.

ஆய்ச்சியர் குரவை (n) – a kind of folk song sung with dance by the cowherd women (aaychiar)

ஆரவாரம் (n) – பலர் கூடியிருக்கும் இடத்திலிருந்து வரும் பெரிய சத்தம்; din and bustle

ஆராய்(v) – analyse

இகழ் (v) – ஏளனம் செய் ; insult

இமயம் (n) – the Himalayas

இலமே (இலம்+ஏ) – இல்லையே

(இளங்கோவடிகள் செய்த) புரட்சி பெரிதன்றோ ? – Is it not a big revolution (created by Ilango adigal)?

ஈதொரு (இது + ஒரு புதுமை) – இது ஒரு புதுமை; it is a novelty

உயிர்நிலை (n) – உயிர் இருக்கும் இடம், உயிர்நாடி

உவமை (n) – simile

எண்(ணு) (v) – நினை; to think over

எண்ணித்தான் பார்ப்போமே!– நினைத்துத்தான் பார்ப்போமே! (let's) think over

என் வாழ்நாளுக்குள்ளேயே – with in my life time (life span)

என்ன என்பது ! – என்ன என்று சொல்வது ! ; what to say!

ஏதேனும் (adv.) – ஏதாவது

ஏதேனும் உண்டா? – is there anything (available)?

ஏறக்குறைய – சுமார்; more or less

ஒதுக்கிவை – தள்ளிவை; exclude; keep aside

ஒருமைப்பாடு – integration (of a nation)

ஒழிபியல் (ஒழிபு + இயல்) – விட்டுப் போனவைகளைப் பற்றிக் கூறும் இயல் (miscellaneous)

ஓருயிரும் ஈருடலுமாக (ஓர் + உயிர் + உம் + ஈர் + உடல் + உம் + ஆக) – உயிர் ஒன்றாகவும் உடல் இரண்டாகவும் இருப்பது ; single soul with two bodies

ஒருருவாய் – ஒரே உருவமாக

கதையன்றோ சிலப்பதிகாரம் ! (கதை + அன்று + ஓ) – is cilappatikaram not a story!

கருணைமறவன் – உயிர்களுக்கு இரங்கும் பண்புடைய வீரன்; brave man who has sympathy on people

களிப்பு (n) – மகிழ்ச்சி ; joy
கற்பரசி (n) – queen of chastity ; (of married women) unswerving fidelity
காண்டம் (n) – பெரும் பிரிவு; major division
காப்பியப் பெருஞ்சுவைகள் – major rasas / enjoyments of literature
(புகார்க்) காண்டம் – chapter (on Puhar - capital city of the Chola kings)
(மதுரைக்) காண்டம் – chapter (on Madurai - capital city of the Pandiya kings)
(வஞ்சிக்) காண்டம் – chapter (on Vanji - capital city of the Chera kings)
குடியரசு (n) – democracy
குடியியல் – a chapter of 'Tirukkural' which deals with the social life
குறம் (n) – 'குறவஞ்சி' என்பதன் குறுகிய வடிவம் ; a shorter form of 'kuravanchi' literature of the later period
(மீனாட்சி)குறம் – 'kuravanchi' (that speaks of Goddess Meenakshi)
குறவஞ்சி – தலைவன் உலாவரும்போது அவன் மீது காதல் கொண்டு தவிக்கும் ஒரு பெண்ணுக்குக் குறத்தி அவளது எதிர் காலத்தைப் பற்றிக் குறிசொல்வதாக அமைத்துப் பாடப்படும் ஒரு சிற்றிலக்கிய வகை
குன்றக்குரவை (n) – folk dance of hill tribe, one of sub sections of the epic cilappatikaaram
கோளாறு (n) – தவறு; mistake
சிக்கல் (n) – problem
சிறை எடு (v) – take into custody
சீர் பெறு (v) – get alright; get into fame
தோன்று (v) – appear
நிலைநாட்டிவிடு
நிலைநாட்டு (v) + விடு (aux) – establish (rights, etc.)
நீண்டு ஓடுகிறது – runs at length
நுட்பம் (n) – fineness; minuteness
பரத்தை (n) – விலைமகள்; prostitute; here, it is harlot
பரிவுடன் – with sympathy and consideration
பழங்காப்பியம் – old epic

| | | |
|---|---|---|
| பழைய நூல்களை புதியகண்கொண்டு உண்மையுணர இனி வழியேற்படும் | – | an eye opener to understand truth by looking at the old works with new ideas ; உண்மையை அனுபவித்து அறிய இனிமேல் வழி ஏற்படும் |
| பழிப்பு(n), பழி(v) | – | the act of abusing; abuse |
| பாராட்டுவது; பாராட்டு | – | talk sigh of |
| பாவாணர் | – | பாவலர்; கவிஞர்; poet |
| பாட்டாளி | – | உழைப்பாளி; worker |
| பாட்டைப் போல இனிக்கின்றகாலம் | – | the time which tastes like a poetry |
| புகழ் பெறுதல், (n) | – | the act of getting fame; become glorious (getting glory) |
| புரட்சி (n) | – | revolution |
| புதுமரபு (n) | – | new tradition |
| பேராசை (n) | – | அளவு கடந்த ஆசை |
| போர் | – | யுத்தம்; war |
| போர்புரி (v) | – | wage a war |
| முடிமக்கள் | – | crowned kings |
| முப்பெருந்துண்டாய் வெட்டுண்டு கிடக்கும் (தமிழன்னை) | – | personified : Tamil mother lying down after getting cut into three big pieces - this metaphorical statement refers to the Tamil land which was splited into three kingdoms viz., Chola, Pandiya and Chera |
| முழங்குதானை | – | roaring / rumbling army |
| மூள்(v)(மூண்டு (vp) | – | (தீ) பற்றுதல்; catching of fire ; break out |
| மேலும் எவ்வாறு எடுத்துக் கூறுவது | – | How to explain beyond this |
| வடநாடு | – | Country located in the northern part of India |
| வடமொழி | – | Sanskrit (northern language) |
| வாய்ப்பந்தல் போடு (v) | – | (செயல்படுத்துவதைப்பற்றிக்கவலைப் படாமல்) ஆடம்பரமாகப்பேசு ; empty rhetoric |
| வியப்பு (n) | – | ஆச்சரியம் ; wonder |
| விளங்கவில்லை | – | புரியவில்லை; not being understood |
| வீற்றிரு (v) | – | அமர்ந்திரு; occupy an exalted position |
| வெண்ணிப் போர் | – | a war which took place at the place called Venni |

வெல்(v)(வெல்ல, வென்று) – வெற்றி அடை; conquer ( in battle); triumph; win

வேட்டுவ வரி – one of the varieties of poeticform incorporated in the epic cilappatikaaram.

## ❑ பயிற்சி (Exercise)

*I. பிரித்து எழுதுக.*

1. அவலச்சுவை
2. காந்தியடிகள்
3. அரசுகட்டில்
4. பழிச்சொல்
5. ஒருயிர்
6. இரண்டாயிரம்
7. சேரநாடு
8. கற்பரசி
9. ஈருடல்
10. புரட்சிக் காலம்

*IIஅ. பொருத்தமான இணைச் சொல்லைத் தேர்ந்தெடுத்து எழுதுக.*

1. குடிமக்கள் –
2. வியப்பு –
3. புகழ்தல் –
4. இகழ்தல் –
5. வீற்றிரு –
6. வாய்ப்பந்தல் –
7. சிக்கல் –
8. ஒருமைப்பாடு –
9. குமுறுதல் –
10. ஒருருவாய் –
11. பழிச்சொல் –
12. அவலம் –

*Cues :*

a. ஆடம்பர வார்த்தை
b. அமர்ந்திரு
c. தூற்றுதல்
d. குழப்பம்
e. ஒற்றுமை
f. ஆச்சரியம்
g. பாராட்டுதல்
h. நாட்டுமக்கள்
i. ஆத்திரமடைதல்
j. இரண்டற்றதாய்
k. வருத்தம்
l. தீய சொல்

ஆ. இணையான பொருளை உணர்த்தும் சொல் (அ) சொற்றொடரை வலப்பக்கமிருந்து தேர்ந்தெடுத்துப் பொருத்துக.

| | | | |
|---|---|---|---|
| 1. மலையேறிப்போய்விட்டது | – | அ. | தொடர்கிறது |
| 2. முற்றுப்புள்ளிவை | – | ஆ. | கணக்கில் வராதது |
| 3. (குறவஞ்சியாக) நீண்டு ஓடுகிறது | – | இ. | முடித்துவிடு |
| 4. அனாமத்துக் கணக்கு | – | ஈ. | காலம் கடந்துவிட்டது |

இ. இணையான பொருளை உணர்த்தும் சொல் (அ) சொற்றொடரை வலப்பக்கமிருந்து தேர்ந்தெடுத்துப் பொருத்துக.

| | | | |
|---|---|---|---|
| கணவனையிழந்தவள் | – | அ. | இணைந்து |
| காந்தியடிகள் காட்டிய வீரம் | – | ஆ. | அமைதி வழி |
| ஓருயிரும் ஈருடலுமாக | – | இ. | அடிப்படை |
| அம்பலத்தில் ஆரவாரமாகிறது | – | ஈ. | பரவுகிறது |
| நாட்டின் உயிர் நிலை | – | உ. | விதவை |
| குழந்தையே பெறாதவள் | – | ஊ. | மலடி |

III. சரியான சொற்களைப் பாடப்பகுதியிலிருந்து நினைவு கூர்ந்து கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. தமிழிலக்கிய வரலாற்றில் முதன்முதலாகக் காப்பியம் என சிறப்பாகத்தோன்றியது சிலப்பதிகாரமே. அதில் சோழன் ———— வருகிறான். ஆனால் அவனுடைய கதை அன்று. பாண்டியன் ———— அரசு கட்டிலில் வீற்றிருக்கின்றான். கண்ணகி எதிரே உயிர் விடுகின்றான். ஆனால் அவன் கதையும் அன்று. சேரன் ———— வடநாட்டில் போர் புரிகின்றான். கண்ணகிக்குக் கோயில் கட்ட கல்லெடுத்து வருகின்றான். ஆனால் அவன் கதையும் அன்று.

2. முரசு முழங்குதானை மூவரும் கதையில் வந்தும் அந்த முடிமக்கள் கதையாக சிலப்பதிகாரம் விளங்கவில்லை. குடிமக்களில் ஒருவர் கதை. அதிலும் ஒரு பெண்ணின் கதை. ————யின் கதையன்றோ சிலப்பதிகாரம். ———— குடிமக்களுள் ஒருவன். ———— பரத்தையருள் ஒருத்தி. இவர்களுடைய ———— வாழ்க்கையே சிலப்பதிகாரம்.

3. ———— நாட்டில் பிறக்கிறாள் கண்ணகி. ———— நாட்டில் கணவனை இழக்கின்றாள். ———— நாட்டில் தெய்வமாகின்றாள்.

4. மாதவியும் கோவலனும் ஓரியிரும் ஈருடலுமாக வாழ்கின்ற காதல் வாழ்வே சிலப்பதிகாரப் ———— காண்டம். கணவனையும்யிழந்த கண்ணகியே அவலச் சுவையின் ஆழத்தைக் காட்டுகிறாள். அந்தக் கதைதான் ———— காண்டம். கண்ணகிக்காக எடுத்த கல்லினை

வடவரசர் தலைமீது ஏற்றிவந்த செங்குட்டுவன் வீரத்தைப் பாடுவதே ———— காண்டம்.

5. அரசனிடம் வீரம் கண்டால் ———— காப்பியம் எழுதற்கு இடமில்லை.
6. பரத்தையர் குடிப்பெண்ணான மாதவி ———— யாக ஓங்குகிறாள்.
7. குடிமக்கள் வழியாகவே தமிழ்நாட்டில் ஒருமை ஓங்கி வளரக் காண்கிறார் ————.

IV. *பாடப்பகுதி உணர்த்தும் செய்திகளை உமது சொந்த வாக்கியங்களில் வெளிப்படுத்துக.*

1. முடிமக்கள் காலம் ஏறக்குறைய முடிந்து விட்டது என்றே சொல்லிவிடலாம். இது குடியரசுக் காலம். அது மட்டுமா ? முதலாளி என்று புகழ்வதெல்லாம் மலையேறிப் போய்விட்டதன்றோ ? பாட்டாளி என்ற சொல்லே பாட்டைப் போல் இனிக்கின்ற காலம் இது.
2. தமிழில் ஆதிகாவியம் எது ? பாரதமா ? அது பின்னாளில் எழுந்தது. இராமாயணமா ? அது கம்பனால் சீர்பெற்றது. தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல்முதலாகக் காப்பியம் எனச் சிறப்புறத் தோன்றியது சிலப்பதிகாரமே.

V. *அடிக்கோடிட்ட பகுதிகளைப் பயன்படுத்திச் சொந்த வாக்கியங்கள் எழுதுக.*

1. பாட்டாளி என்ற சொல்லே பாட்டைப் போல இனிக்கின்ற காலம் இது.
2. கண்ணகி, கோவலன், மாதவி – இவர்களுடைய சிக்கல் வாழ்க்கையே சிலப்பதிகாரச் சித்திரம்.
3. குறம்பாடினாலும் மீனாட்சி குறமாக முடிகிறது. குறவஞ்சி பாடினாலும் சரபேந்திரர் குறவஞ்சியாக நீள்கிறது.
4. மூவரசர் பேராசையால் முப்பெருந்துண்டாய் வெட்டுண்டு கிடக்கும் தமிழன்னை கண்ணகியின் வாழ்க்கை வழியே ஒருருவாய் உயிர் பெற்று விளங்குகிறாள்.
5. மாதவியும் கோவலனும் ஒருயிரும் ஈருடலுமாக வாழ்கின்ற காதல் வாழ்வே சிலப்பதிகாரப் புகார் காண்டம்.
6. முடிமக்கள் வாழ்வில் காணும் சிறப்புகள் எல்லாம் குடிமக்கள் வாழ்விலும் கண்டால் அன்றோ காப்பியம் இனிக்கும்?

VI. *சொந்தவாக்கியத்தில் அமைத்து எழுதுக. (ஏதேனும் பத்து மட்டும்)*

இனிக்கின்ற
குடியரசு
முற்றுப்புள்ளி
வேட்டுவ வரி
வாய்ப்பந்தல்
முடிமக்கள்
வாழ்நாள்
அரசச்செல்வம்
பெருஞ்சுவைகள்
ஒருமைப்பாடு
உயிர் நிலை
அன்றுமுதல் இன்றுவரை
பழைய நூல்களைப் புதிய கண்கொண்டு
துறவறம்

VII. *இரண்டு அல்லது மூன்று வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. பிற நாடுகளில் தோன்றிய ஆதிகாப்பியங்களுக்கும் தமிழ் நாட்டில் தோன்றிய ஆதிகாப்பியத்துக்கும் உள்ள வேறுபாடு என்ன?
2. மூவரசர் பேராசையால் முப்பெருந்துண்டாய் கிடக்கும் தமிழன்னை (தமிழ்நாடு) கண்ணகியின் வாழ்க்கை வழியே எங்ஙனம் ஓர் உருவாய் உயிர்பெற்று விளங்குகிறாள்?
3. இளங்கோவடிகள் பற்றிய பின்னணிச் செய்திகளைக் கூறுக.
4. காதல், அழுகை, வீரம் ஆகிய காப்பியப்பெருஞ்சுவைகள் சிலப்பதிகாரக்காண்டங்களில் எவ்வாறு காணப்படுகின்றன.
5. 'குடிமக்கள் சிறப்பினை இதற்குமேலும் எவ்வாறு கூறுவது?' எனக் கட்டுரையாசிரியர் குறிப்பிடுவதற்குக் காரணமாக அமைந்த செய்திகள் யாவை ?

VIII. *சிறு குறிப்பு எழுதுக. (சுமார் 5 வாக்கியங்களில்)*

1. இளங்கோவடிகளின் புரட்சி
2. கற்புக்கரசி கண்ணகி
3. கருணை மறவன் கோவலன்
4. முரசு முழங்கு தானை மூவேந்தர்

## ❑ பொதுக் குறிப்பு (Note on General Information)

1. மலையேறிப் போய் விட்டதன்றோ ? –
   'கடந்துவிட்டது', 'மாறிவிட்டது' என்ற பொருளில் பயன்படுத்தப்–பட்டுள்ளது

2. முற்றுப்புள்ளி வைக்க முயல்வது –
   முடித்துவிட / அழித்துவிட முயற்சி செய்வது

3. நெஞ்சம் குமுறுதல் –
   வேதனைப்படுதல், ஆத்திரப் படுதல்

4. "பெரியோர்ப் புகழ்தலும் இலமே
   சிறியோர் இகழ்தல் அதனினும் இலமே" – பிறமொழி

5. பழந்தமிழன் வாய்ப்பந்தல் போடுகிறானா ? –
   'பழந்தமிழன் வீண் பெருமை பேசுகிறானா' என்னும் பொருளில் வந்துள்ளது

6. சிலப்பதிகாரம் –
   தமிழில் கிடைத்துள்ள பழமையான ஐந்து பெருங்காப்பியங்களுள் ஒன்று. இளங்கோவடிகளால் எழுதப்பட்டது.

7. ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, வேட்டுவவரி –
   சிலப்பதிகாரக் காப்பியத்தில் உள்ள சிறுசிறு கூத்துப் பகுதிகள். குரவை, வரி என்பன பாடலமைப்பின் பெயர்கள்.

8. முப்பெருந்துண்டாய் வெட்டுண்டு கிடக்கும் தமிழன்னை –
   தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதைக் குறிக்கிறது. [*metaphorical usage*]

9. இளங்கோவடிகள் –
   அரசர் குடியில் பிறந்து அரச செல்வத்தில் வாழ்ந்தவர். சேரன் செங்குட்டுவன் என்ற அரசனின் தம்பி. இளமையில் துறவு பூண்டதால் 'அடிகள்' என்ற பின்னொட்டு வந்தது.

10. சங்ககாலம் –
    சங்கம் வைத்துத் தமிழை வளர்த்த பழங்காலம். சுமார் கி.மு. 2 ஆவது நூற்றாண்டிலிருந்து கி.பி. 2 ஆவது நூற்றாண்டு வரை உள்ள காலகட்டம் என்பர்.

11. வஞ்சி மாநகர் போல அழகிய தலைவி –
வஞ்சி மாநகரம் உவமையாகக் காட்டப்படும் அளவுக்கு மிக அழகாக இருந்தது என்பது அறியப்படுகிறது. [*உவமை வாக்கியம்*].

12. வெண்ணிப்போர் அரவாரம் போலப் பழிச்சொல் அம்பலத்தில் ஆரவாரமாகிறது. –
'வெண்ணிப்போரின் விளைவால் ஏற்பட்ட துயரங்கள் எல்லாத்திசைகளிலும் உடனுக்குடன் பரவுவது போல ஒருவரைப்பற்றிய பழிச்சொல் உடனுக்குடன் எல்லோரிடமும் பரவுகிறது ' என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது.

13. அவலச்சுவை –
இலக்கியங்களில் கூறப்படும் ஒன்பது சுவைகளுள் ஒன்று.

14. வடவரசர் தலைமீது ஏற்றிவந்த கல் –
கண்ணகிக்குச் சிலை வைப்பதற்காக, சேரன் செங்குட்டுவன் என்ற சேரமன்னன் தன்னிடம் தோற்றுப்போன வடநாட்டு அரசன் தலையில் வைத்துக் கொண்டுவந்த கல்.

15. யானையைக் கொல்லாமலே யானைக்காலிலிருந்து முதியவனைக் காப்–பாற்றுகிறான் கோவலன் –
சிலப்பதிகாரக் காப்பியத்தில் வரும் கிளைக் கதையைக் காண்க.

16. பரத்தையர் குடிப்பெண் மாதவி –
மாதவி பரத்தையர் (விலைமாதர்) குலத்தில் தோன்றியவள் என்ற பின்னணி விளக்கப்படுகிறது.

17. மணிமேகலை கோவலன் மாதவி ஆகியோரின் மகள் –
சிலப்பதிகாரக் கதையின் தொடர்ச்சியாக எழுந்துள்ள இன்னொரு காப்பியத்துக்கு மணிமேகலையே காப்பியத் தலைவி. அதனால் அக்காப்பியத்துக்கு 'மணிமேகலை' என்று பெயர். சிலப்பதிகாரம், மணிமேகலை இரண்டையும் சேர்த்து 'இரட்டைக்காப்பியம்' எனக் கூறுவர். காப்பியத்தலைவியாகிய மணிமேகலை துறவியாக உலக குருவாக விளங்குவதை மணிமேகலைக் காப்பியம் விளக்குகிறது.

18. திருவள்ளுவர் பொருட்பாலில் காணும் குடிகளது சிறப்பு –
திருக்குறளில் உள்ள 133 அதிகாரங்களில் 13 அதிகாரங்கள் குடிமக்களது சிறப்பைக் கூறுவதாக அமைந்துள்ளன. அவை 'பொருட்பால்' என்னும் பெரும்பிரிவின் கடைசியில் 'ஒழிபியல்' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

இலக்கியச்சொற்கள் மற்றும் இலக்கிய மேற்கோள்களை எதுகை மோனை நயமுடன் பல்வேறு அளவிலான தொடர்க்கட்டு மற்றும் வாக்கிய வகைகளை (simple, compound and complex sentences) உள்ளடக்கியதாக அமைகிறது தெ.பொ. மீ. யின் மொழிநடை. ஒரு குறிப்பிட்ட இலக்கியப் பின்னணியை / நிகழ்ச்சியை ஓரளவு விரித்தல் உத்திகளுடனும் இலக்கிய நயமுடனும் விளக்குவதாகவுள்ள இவரது மொழிநடையை விளக்கநடை (descriptive style) என்று கூறுவர் நடையியலார். ஆயினும் விவரிப்பு நடை (narrative style) மற்றும் கவிதை நடைக் (poetic style) கூறுகளையும் ஆங்காங்கே உள்ளடக்கியிருப்பதை ஓரளவு காணமுடிகிறது.

# 5. வேடிக்கைக் கதைகள்

## தொகுத்தவர்: கு. அழகிரிசாமி

[இவர் தமிழில் உள்ள சிறந்த சிறுகதை எழுத்தாளர்களில் அழகிரிசாமியும் (1923–70) ஒருவர். 'அழகிரிசாமி கதைகள்', 'சிரிக்கவில்லை', 'தவப்பயன்' 'அன்பளிப்பு' போன்ற இவரது சிறுகதைத் தொகுதிகள் பல வெளி வந்திருக்கின்றன. 'அன்பளிப்பு' என்ற சிறுகதைத் தொகுப்பு நூலிற்கு இவரது மறைவிற்குப் பின்னர் சாகித்திய அகாடமிப் பரிசு கிடைத்துள்ளது. இவரது சிறுகதைகள் ஆங்கிலம் போன்ற மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. மலாயாவில் சில ஆண்டுகள் தங்கிய இவர், அங்கு 'தமிழ்நேசன்' போன்ற பத்திரிகைகளில் ஆசிரியராக இருந்திருக்கிறார். பல நாடுகளிலும் வழங்கி வருகின்ற நாடோடிக் கதைகளைத் தொகுத்துள்ள இவர் அவ்வப்போது அவற்றைத் ' தீபம் ' என்ற மாத இதழின் மூலம் தமிழில் எழுதி வெளியிட்டிருக்கிறார்.]

### கோதாம் புத்திசாலிகள்

1. பாலாடைக்கட்டிகளைத் தேடிய கதை
2. மீனை மூழ்கடித்துத் தண்டித்த கதை

[இந்த வேடிக்கையான குட்டிக் கதைகள் இங்கிலாந்தில் கோதாம் நகரில் வாழ்ந்த அப்பாவிகளைப் பற்றியவையாகும். அப்பாவித்தனத்தைப் பற்றிய வேடிக்கைக் கதைகள் உலகெங்கும் உண்டு. இப்படிப்பட்ட பைத்தியக்காரர்களைத் தமிழ் நாட்டில் 'கொங்கணையர்கள் ' என்று சொல்லுவார்கள். இங்கே காண்பவை இங்கிலாந்தின் கொங்கணையர்களைப் பற்றிய குட்டிக்கதைகள். 'கோதாம் வாசி ' என்றாலே அப்பாவி என்று பொருள் படும்படியாக ஆங்கிலத்தில் வழங்குகிறார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. ]

### ஷில்டா கிராம புத்திசாலிகள்

பூனை

[பிரிட்டிஷ் நாடோடிக்கதைகளில் வரும் கோதாம் வாசிகளைப் போன்ற அப்பாவிகள், ஜெர்மனியைச் சேர்ந்த இந்த ஷில்டா கிராமப் புத்திசாலிகள் ! இவர்களுடைய பைத்தியக்காரத்தனங்களை விவரிக்கும் பல நாடோடிக் கதைகள் நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பே சேகரிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. ]

## 1. பாலாடைக்கட்டிகளைத் தேடிய கதை

கோதாமைச் சேர்ந்த ஒருவன் தன்னிடம் இருந்த பாலாடைக் கட்டிகளை விற்பதற்காக நாட்டிங்உறாம் நகரச் சந்தைக்குச் சென்றான். நகரப் பாலத்தை நோக்கி ஒரு குன்றின்மீது ஏறி இறங்கும் சமயத்தில் ஒரு பாலாடைக் கட்டி அவன் மூட்டையில் இருந்து நழுவிக் கீழே விழுந்து வேகமாக உருண்டு ஓடிவிட்டது. இதைப் பார்த்த அவன், "நீ மட்டும் சந்தைக்குத் தனியாக ஓடுவதா? மற்ற கட்டிகளையும் உன்னைத் தொடர்ந்து ஓடி வரச் செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு, மூட்டையில் இருந்த அத்தனை கட்டிகளையும் குன்றில் உருட்டி விட்டான். கட்டிகள் எல்லாம் ஆங்காங்கே முளைத்திருந்த புல் புதர்களில் போய்ச் சிக்கி மறைந்துவிட்டன.

"பாலாடைக் கட்டிகளே! என்னைச் சந்தைப் பேட்டையில் சந்தியுங்கள்" என்று சொல்லிவிட்டு அவன் நேரே சந்தைப் பேட்டைக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே சந்தை கலையும் வரை காத்திருந்தும் பாலாடைக் கட்டிகள் அவனைச் சந்திக்க வரவில்லை. எனவே சந்தைக்கு வந்திருந்த அத்தனை பேரையும் பார்த்து "பாலாடைக் கட்டிகளை நீங்கள் பார்த்தீர்களா?" என்று கேட்டான்.

"யார் கொண்டு வந்தார்கள்?" என்று ஒவ்வொருவரும் கேட்டார்கள்.

"ஒருவரும் கொண்டுவரத் தேவையில்லை. அவற்றிற்கு வழி தெரியும். தாமாகவே இங்கே அவை ஓடி வந்தன" என்றான் கோதாம் ஆள்.

"நாங்கள் பார்க்கவில்லை" என்று எல்லோரும் சொல்லிவிட்டார்கள்.

"அப்படியா? சரிதான். எனக்கு அப்போதே சந்தேகம். அவை உருண்டு ஓடிய வேகத்தைப் பார்த்தபோது, சந்தையோடு அவை நிற்காது, அதைத் தாண்டியும் அப்பால் ஓடப் போகின்றன என்று எனக்குத் தோன்றியது. நான் நினைத்தது சரியாகவே ஆகிவிட்டது. அவை இப்போது யார்க் நகர மார்க்கெட்டுக்குப் போயிருக்கும். அங்கே போய் பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து புறப்பட்டான் கோதாம் ஆள்.

இன்று வரையில் அவன் ஒவ்வொரு ஊராகத் தேடிக் கொண்டு இருக்கிறான். பாலாடைக்கட்டிகளைச் சந்திக்கவே முடியவில்லை.

## 2. மீனை மூழ்கடித்துத் தண்டித்த கதை

ஒரு சமயம் கோதாம் வாசிகள் ஒன்று சேர்ந்து ஒரு யோசனை செய்தார்கள். தங்கள் வசம் மிஞ்சி இருக்கும் கருவாடுகளை ஊருக்கு நடுவில் உள்ள குளத்தில் போட்டு விடுவது என்றும் அடுத்த வருஷம் இதே சமயத்தில் அவை ஏராளமாகக் குஞ்சு பொரித்து பெருங்கூட்டமாக இருக்கும்போது வலை வீசிப் பிடித்துக் கொள்வது என்றும் அவர்கள் முடிவு செய்தார்கள். ஒன்றைப் பத்தாகப் பெருக்கி லாபம் பெற அவர்கள் தங்களிடம் உள்ள கருவாடுகளை எல்லாம் குளத்தில் கொண்டு போய்ப் போட்டார்கள்.

அடுத்த வருஷம் அந்த மாதத்தில் மீன் பிடிப்பதற்காக எல்லோரும் குளத்திற்குப் போனார்கள். வலைகளை வீசினார்கள். ஒரே ஒரு பெரிய சுறா மீன் மட்டுமே அகப்பட்டது.

"பார்த்தீர்களா? இந்தப் படுபாவிச் சுறாமீன் அத்தனைக் கருவாடு-களையும் தின்று விட்டது. இதை விடக்கூடாது" என்று எல்லோரும் ஆத்திரம் கொண்டு கத்தினார்கள்.

"இதை என்ன செய்யலாம்?" என்று கேட்டான் ஒருவன்.

"கொல்ல வேண்டும்" என்றான் வேறு ஒருவன்.

"துண்டு துண்டாக வெட்ட வேண்டும்" என்று மற்ற ஒருவன் சொன்னான்.

"அதெல்லாம் சிரமமான வேலை. இதைத் தண்ணீரில் மூழ்கடித்துக் கொன்று விடலாம்" என்று ஒருவன் சொன்னான். அதுதான் சரியான யோசனை என்று எல்லோரும் அந்தச் சுறா மீனைத் தூக்கிப் பக்கத்தில் உள்ள ஒரு குளத்தில் கொண்டுபோய்ப் போட்டார்கள். "இங்கேயே கிட. நீ எவ்வளவுதான் கதறி அழுதாலும் நாங்கள் உனக்கு உதவி செய்ய வரப்-போவதில்லை" என்று சொல்லிவிட்டு வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

### பூனை

ஷில்டா கிராமத்தில் எலிகள் பெருத்து விட்டன. ஆட்களைக் கண்டும் பயப்படாமல் அவை கூட்டம் கூட்டமாக ஒவ்வொரு வீட்டிலும் ஓடின. எல்லாப் பண்டங்களையும் அவை தின்று தீர்த்துக் கொண்டிருந்தன. அவற்றை எப்படி ஒழிப்பது என்று தெரியாமல் கிராமவாசிகள்

தொல்லைக்குள்ளாகியிருந்த சமயத்தில் வெளியூர்க்காரன் ஒருவன் வந்தான். அவனிடம் ஒரு பூனையும் இருந்தது. " இது என்ன பிராணி?" என்று கிராம வாசிகள் கேட்டார்கள். அவர்கள் இதற்கு முன் பூனையைப் பார்த்ததே இல்லை. வெளியூர்க்காரனுக்கு இது ஆச்சரியமாக இருந்தது.

"இது பூனை என்ற பிராணி" என்றான் வெளியூர்க்காரன்.

"அப்படியா? இது என்ன செய்யும்?"

"இது எலிகளைப் பிடித்துத் தின்னும்".

"அப்படியா! எங்கே, இதைக் கீழே விட்டு எலிகளைப் பிடிக்கச் சொல்லுங்கள், பார்ப்போம்!" என்று சொன்னார்கள் கிராமவாசிகள்.

வெளியூர்க்காரனும் பூனையைக் கீழே விட்டான். அது பக்கத்தில் உள்ள ஒரு வீட்டில் புகுந்து கொஞ்ச நேரத்திற்குள் இருபது எலிகளுக்கு மேல் கொன்று இரண்டொன்றைத் தின்றும் விட்டது. கிராமவாசிகள் உடனே அதை விலைக்குக் கொடுக்கும்படி கேட்டார்கள்.

"என் உயிர் போனாலும் என் பூனையை விட்டு நான் பிரிய மாட்டேன். இருந்தாலும் எலி உபத்திரவம் தாங்காமல் கஷ்டப்படும் நீங்கள் கேட்கிறீர்கள். அதனால்தான் நானும் என் பூனையை விற்கச் சம்மதிக்கிறேன். ஆயிரம் ரூபாய் கொடுத்துவிட்டு இந்தப் பூனையை வைத்துக் கொள்ளுங்கள்" என்றான் வெளியூர்க்காரன்.

உடனே கிராமவாசிகள் ஆளுக்குக் கொஞ்சம் பணம் போட்டு ஆயிரம் ரூபாய் சேர்த்து அவனுக்குக் கொடுத்துப் பூனையை வாங்கிக் கொண்டார்கள். பணத்தோடு அவன் போய்விட்டான். கிராமவாசிகள் பூனையைக் கொண்டுபோய் எலிகள் நிறைந்த ஒரு தானியக் களஞ்சியத்திற்குள் போட்டார்கள். அது உள்ளே போய் வேட்டையாடிக் கொண்டிருக்கும் சமயத்தில் ஒருவனுக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. " இந்தப் பூனை என்ன என்ன சாப்பிடும்? இதற்கு எது சாப்பாடு? " என்று கேட்டான். "தெரியவில்லையே! விற்றவனையே போய்க் கேட்டுவிட்டு வரவேண்டியதுதான்" என்று சொல்லி ஒருவனை அனுப்பி வைத்தார்கள். அவனும் வெளியூர்க்காரனைப் பார்த்து ஒரே ஓட்டமாக ஓடினான். காட்டுப்பாதை வழியாகப் போய்க் கொண்டிருந்த ஒரு வெளியூர்க்காரனைக் கூவி அழைத்து கொடுத்த பூனைக்கு எது ஆகாரம்? எதைச் சாப்பிடும்?" என்று கேட்டான். எலிகளைப் பிடித்துத் தின்று கொண்டிருக்கும் பூனைக்கு வேறு ஆகாரம் எதற்கு என்பது கூட

தெரியாமல் பைத்தியக்காரத்தனமாகக் கேட்கிறானே என்று நினைத்து வெளியூர்க்காரன், "பூனை எதையும் சாப்பிடும். ஆட்டைச் சாப்பிடும், மாட்டைச் சாப்பிடும், ஆளையும் சாப்பிடும்" என்று வேடிக்கையாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டான். ஷில்டா கிராமத்துக்காரன் பயந்து போய்த் தலை தெறிக்க ஊருக்கு ஒடி வந்தான். "பூனையைத் தெரியாத்-தனமாக விலைக்கு வாங்கிவிட்டோம். அது எலிகளைச் சாப்பிட்டு முடித்தபின் ஆடுகளைச் சாப்பிடுமாம்; ஆடுகள் தீர்ந்த பிறகு மாடுகளைச் சாப்பிடுமாம்; மாடுகள் தீர்ந்துவிட்டால் ஆட்களையே அடித்துச் சாப்பிடுமாம்" என்றான். இதைக் கேட்டதும் ஊர்க்காரர்கள் எல்லோருமே பயந்து, உடனடியாக அந்தக் களஞ்சியத்தை நெருப்பு வைத்துக் கொளுத்தி-னார்கள். அப்போது பூனை தப்பி வெளியே ஒடி வந்து ஒரு வீட்டின் கூரையில் ஏறிக்கொண்டது. அந்த வீட்டையும் நெருப்பு வைத்துக் கொளுத்தினார்கள். ஒருவன் ஒரு பெரிய தடியை எடுத்துப் பூனையை நோக்கி வீசினான். பூனை நாசூக்காகத் தப்பிவிட்டதோடு அந்தத் தடியையே ஏணியாகக் கொண்டு கீழே இறங்கியது. ஊர்க்காரர்கள் அத்தனை பேரும் குழந்தை குட்டிகளோடும் சட்டி பெட்டிகளோடும் ஊரை விட்டே ஒடிப் பக்கத்திலுள்ள காட்டில் போய்ப் பதுங்கிவிட்டார்கள். பூனைக்குப் பயந்து அவர்களில் யாரும் அந்த ஊருக்குத் திரும்பி வராமல் மற்ற ஊர்களில் போய்க் குடியேறி விட்டார்கள். ஷில்டா ஊரில் ஒரு வீடு பாக்கி இல்லாமல் அத்தனை வீடுகளும் எரிந்து சாம்பலாகிவிட்டன. கிராமவாசிகளைப் பற்றிய விவரங்கள் அடங்கிய தஸ்தாவேஜுகளும் தீக்கு இரையாகிவிட்டதால் அவர்களுடைய முழு வரலாறு இன்று வரையிலும் உலகத்திற்குத் தெரியாமல் இருக்கிறது.

மூலம் : கு. அழகிரிசாமியின் தொகுப்பிலிருந்து



* * * * * *

❑ சொற்பொருள் குறிப்பு – பாட வரிசைப்படி (Note on Vocabulary)

| | |
|---|---|
| அன்பளிப்பு | – gift |
| ஆங்கிலம் | – English |
| அப்பாவி(n) | – innocent |
| குட்டிக்கதை(n) | – Small story; smaller than short story |

குறிப்பிடத்தக்க (adj) – notable
கொங்கணையர்கள் (n) – தமிழ்நாட்டில் அப்பாவியாகக் கருதப்–படுபவர்கள்
கோதாம்வாசி – கோதாம் நகரத்தைச் சேர்ந்தவன், கோதாம் ஆள்
சேகரி(v) – collect
தவப்பயன்(n) – தவம் செய்து கிடைக்கப்பெற்ற பயன்
தமிழ்நேசன் (n) – name of a Tamil Magazine in Malaysia
தொகு (v) – compile
நாடோடிக்கதை – folk tale
நூற்றாண்டு – century (hundred years)
பத்திரிக்கை – இதழ் ; magazine
மாத இதழ் – monthly magazine
பைத்தியககாரத்தனம் (n) – foolishness
பொருள்படும்படி (adv) – in that meaning
புத்திசாலி – intelligent person
மொழி பெயர்ப்பு (n) – translation
மறைவு – demise, death
பரிசு(n) – prize
வேடிக்கைக்கதை(n) – humorous story
விவரி(v) – describe
வெளியிடு(v) – publish
வழங்கி வருகிற (adj) – habitually followed (sayings); being told
அப்பால் (adv) – beyond
அத்தனை கட்டிகளையும் (n) – all the cakes (here, cheese)
அதைத்தாண்டி (adv) – crossing that
உருள் (v) – role
குன்று (n) – hill; hillock
சந்தி (v) – meet
சரியாகவே ஆகிவிட்டது – became true / correct
சந்தேகம் (n) – doubt
சந்தை (n) – market
சிக்கு (v) – get into

| | | |
|---|---|---|
| தன்னிடம் | – | with him (reflexive pronoun) |
| நழுவு (v) | – | slip, escape |
| தாம் (pn) | – | reflexive pronoun (in plural) |
| பாலம் (n) | – | bridge |
| பாலாடை (n) | – | cheese |
| புதர் (n) | – | bush |
| மறை (v) | – | hide |
| மூட்டை | – | bundle |
| ஏராளம் (n) | – | so much, plenty |
| ஒரே ஒரு (adj) | – | only one |
| கதறி அழு (v) | – | scream loudly |
| கருவாடு (n) | – | dry fish |
| குஞ்சு பொரி (v) | – | hatch (egg) |
| குளம் (n) | – | pond |
| கொல் (v) | – | kill |
| சிரமம் (n) | – | difficult |
| சுறா (n) | – | shark |
| தங்கள் வசம் (adj) | – | under their custody |
| தங்கள் (pn) | – | reflexive form - their |
| துண்டு துண்டாக வெட்டு (v) | – | cut into pieces |
| படுபாவி (n) | – | serious sinner |
| மாதம் (n) | – | month |
| மிஞ்சு (v) | – | remain; be left over |
| மீன்பிடி (v) | – | catch fish |
| மூழ்கு (intr.v) | – | get (oneself) immersed |
| யோசனை (n) | – | idea |
| லாபம் (n) | – | profit |
| வலை வீசு (v) | – | cast the net |
| அழை (v) | – | call |
| இரண்டொன்று (n) | – | two or one (one or two) |
| எலிஉபத்ரவம் | – | எலித்தொல்லை, trouble caused by rats |
| ஒரே ஓட்டமாக ஓடி (v) | – | நிற்காமல் தொடர்ந்து ஓடி, having run continously |
| உடனடியாக (adv) | – | at once; immediately |

| | | |
|---|---|---|
| கஷ்டப்படு (v) | – | suffer |
| குழந்தை குட்டிகளோடு (n) | – | with (all their) child and siblings |
| கூரை (n) | – | roof |
| கொளுத்து (v) | – | எரி, burn |
| கேட்டு விட்டு (vp) | – | after getting enquired |
| சட்டி பெட்டிகளோடு (n) | – | with their belongings |
| சந்தேகம் (n) | – | doubt |
| தடி (n) | – | stick |
| தஸ்தாவேஜு (n) | – | documents |
| தானியக்களஞ்சியம் (n) | – | grainary |
| தீக்கு இரையாகி விடு(v) | – | become victim of fire |
| தெரியாத்தனமாக (adv) | – | unknowingly |
| தொல்லைக்குள்ளாகு (v) | – | get into trouble |
| நாசூக்காக (adv) | – | gently; cleverly |
| பண்டங்கள் (n) | – | eatables; things |
| பதுங்கி | – | by hiding |
| பாக்கி (n) | – | மீதி; the rest, remainder |
| பைத்தியகாரத்தனமாக (adv) | – | foolishly |
| வேட்டையாடு (v) | – | hunt |

## ❑ பயிற்சி (Exercise)

I அ. *எ.கா. இல் உள்ளது போல் மூல வினைச் சொற்களைக் கண்டுபிடித்து எழுதுக.*

*எ.கா.: சேகரிப்பு – சேகரி; தொகுப்பு – தொகு*

மொழி பெயர்ப்பு –
மறைவு –
விவரிப்பு –
வெளியீடு –
சிக்கல் –
நழுவுதல் –
(மீன்) பிடிப்பு –
அழைப்பு –
தடிப்பு –
பதுங்கல் –

ஆ. எ.கா. இல் உள்ளது போல், பின்னொட்டுகளைச் சேர்த்துப் புதிய சொற்களை உருவாக்குக.

எகா.: அப்பாவி + தனம் – அப்பாவித்தனம்
தெரியாது + தனம் – தெரியாத்தனம்

நகரம் + வாசி –
கோதாம் + வாசி –
தோட்டம் + காரன் –
பைத்தியம் + காரன் –

இ. எ.கா. இல் உள்ளது போல் தொகைச் சொற்களை எழுதுக.

எகா.: நகரத்தில் உள்ள பாலம் – நகரப்பாலம்
குடையின் கம்பி – குடைக்கம்பி.

1. அன்பின் அளிப்பு –
2. தவத்தினால் பெற்ற பயன் –
3. தமிழை நேசிப்பவன் –
4. குட்டியான கதைகள் –
5. நகரத்திலுள்ள சந்தை –
6. காட்டிலுள்ள பாதை –
7. கிராமத்தில் வசிப்பவன் –
8. தானியம் உள்ள களஞ்சியம் –
9. மீனின் குஞ்சு –
10. சிறிய கதை –
11. பாலாடையினால் ஆன கட்டி –

ஈ. அடைப்புக்குள் உள்ளதைப் பொருத்தமாக மாற்றிக் கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. பாலாடைக் கட்டிகள் எல்லாம் ஆங்காங்கே முளைத்திருந்த புல்புதர்களில் போய்ச் ———— விட்டன. (சிக்கி மறை)

2. அவை ஏராளமாகக் ———— பெருங்கூட்டமாக இருக்கும்போது வலைவீசிப் பிடித்துக்கொள்வது என்று முடிவு செய்தார்கள். (குஞ்சு பொரி)

3. ஷில்டா கிராமத்துக்காரன் ———— தலைதெறிக்க ஊருக்கு ஓடிவந்தான் (பயந்துபோ)

II. *ஒவ்வொன்றையும் அடியொற்றி நேரடிப்பேச்சு* (Direct Speech) *வாக்கியம் ஒன்றை சொந்தமாக அமைத்து எழுதுக.*

1. "பாலாடைக்கட்டிகளே! என்னைச் சந்தைப்பேட்டையில் சந்தியுங்கள்" என்று சொல்லிவிட்டு அவன் நேரே சந்தைப் பேட்டைக்குப் போய்ச் சேர்ந்தான்.

2. "இந்தப் படுபாவிச் சுறாமீன் அத்தனை கருவாடுகளையும் தின்று-விட்டது. இதை விடக்கூடாது" என்று எல்லோரும் ஆத்திரம் கொண்டு கத்தினார்கள்.

3. " நீ இங்கேயே கிட. நீ எவ்வளவுதான் கதறி அழுதாலும் நாங்கள் உனக்கு உதவி செய்ய வரப் போவதில்லை" என்று சொல்லிவிட்டு வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

4. " அப்படியா! எங்கே, இதைக் கீழே விட்டு எலிகளைப் பிடிக்கச் சொல்லுங்கள், பார்ப்போம்" என்று சொன்னார்கள் கிராமவாசிகள்.

III. *எ.கா. வில் உள்ளது போல், பெயர்த்தொடர் ஒவ்வொன்றிலும் பொருத்தமான வினைமுற்றினைப் பயன்படுத்தி நீண்ட வாக்கியம் உருவாக்குக.*

*எ-கா:* *போன ஆண்டு இது சிறிய தென்னை மரம்.*
*இப்போது இது பெரிய தென்னை மரம்.*
*போன ஆண்டு சிறிய தென்னை மரமாக இருந்தது.*
*இப்போது பெரிய தென்னைமரமாக ஆகிவிட்டது.*

1. பிற்பகல் 3 மணிக்குக் கடுமையான வெயில். 6 மணிக்கெல்லாம் இதமான காற்று.

2. தானியக் களஞ்சியம் உள்ள ஒரு வீடு. அங்கே ஏராளமான எலிகள். நடுவில் ஒரு பூனை.

3. கோதாம் என்று ஒரு நகரம். அருகில் சிறு குளம். அதில் ஏராளமான கருவாடுகள். ஓராண்டு கழித்து அவை அனைத்தும் ஒரு பெரிய சுறாமீன்.

4. பாலாடைக் கட்டிகள்!..... சந்தைப் பேட்டையிலா அல்லது யார்க் நகரமார்க்கெட்டிலா! கோதாம் வாசிக்கு மிகுந்த குழப்பம்!

5. இங்கிலாந்தில் கோதாம் வாசி. ஜெர்மனியில் ஷில்டா கிராம புத்தி-சாலிகள். தமிழ் நாட்டிலோ கொங்கணையர்கள்!

IV. எ.கா. வைப் பின்பற்றி (கட்டங்களுக்குள் உள்ள) சொற்களின் இருப்பிடங்களை பொருத்தமாக மாற்றி, ஏற்புடைய வாக்கியம் எழுதுக.

எ.கா: காக்கை குஞ்சு பொரித்தது.
தாய் குழந்தை ஈன்றாள்.

| | | |
|---|---|---|
| காக்கை<br>ஆடு<br>குருவி<br>யானை<br>குயில்<br>பெண்<br>மான்<br>வாத்து<br>பசு<br>தாய் | கன்று<br>குட்டி<br>குஞ்சு<br>குழந்தை | பொரி<br>போடு<br>ஈன் |

V. எ.கா.வில் உள்ளது போல், வாக்கியம் ஒவ்வொன்றையும் பொருள்சிதைவின்றி வெவ்வேறு முறைகளில் மாற்றி எழுதுக.

எ.கா: தேனருவி திரையெழும்பி வானின் வழி ஒழுகும்.

a. திரையெழும்பித் தேனருவி வானின் வழி ஒழுகும்.
b வானின் வழித் தேனருவி திரையெழும்பி ஒழுகும்.

1. கிராம வாசிகள் பூனையைக் கொண்டு போய் எலிகள் நிறைந்த ஒரு தானியக் களஞ்சியத்திற்குள் போட்டார்கள்.
2. அடுத்த வருஷம் இந்த மாதத்தில் மீன் பிடிப்பதற்காக எல்லோரும் குளத்திற்குப் போனார்கள்.
3. பூனைக்குப் பயந்து அவர்களில் யாரும் அந்த ஊருக்குத் திரும்பி வராமல் மற்ற ஊர்களில் போய்க் குடியேறிவிட்டார்கள்.
4. ஊர்க்காரர்கள் அத்தனை பேரும் குழந்தை குட்டிகளோடும் சட்டி பெட்டிகளோடும் ஊரை விட்டே ஓடிப் பக்கத்தில் உள்ள காட்டில் போய்ப் பதுங்கி விட்டார்கள்.

VI. எ.கா.வினை அடியொற்றி ஒவ்வொன்றுக்கும் தமிழாக்கம் தருக.

எ.கா *They knew the route. They themselves came here running.*

அவற்றிற்கு வழி தெரியும். தாமாகவே இங்கே அவை ஓடிவந்தன.

1. What I thought has become true. They might have gone to the York city market.
2. Till now he has been searching from village by village. He could never meet the cheese cakes.
3. (They) went to the pond. Threw their fishing nets. A shark only was caught.
4. The villagers have never seen a cat before.
5. (What!) you alone run to the market? I will see that other cakes also to follow you!
6. Those are all difficult job. we may kill it by sinking in water.

VII. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக.*

1. 'பாலாடைக்கட்டிகளே! என்னைச் சந்தைப்பேட்டையில் சந்தியுங்கள்'.
2. 'இங்கேயே கிட. நீ எவ்வளவுதான் கதறி அழுதாலும் நாங்கள் உனக்கு உதவி செய்ய வரப்போவதில்லை'.
3. 'பூனை எதையும் சாப்பிடும். ஆட்டைச்சாப்பிடும், மாட்டைச் சாப்பிடும், ஆளையும் சாப்பிடும்'.

VIII. *சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

பாலாடைக்கட்டி, மறை, சந்தி, சந்தேகம், ஒரேஓட்டமாக, ஏராளமாக, பண்டம், தொல்லைக்குள்ளாகு, கஷ்டப்படு, வேட்டையாடு, நழுவிக்கீழே-விழு, துண்டுதுண்டாகவெட்டு, வேட்டையாடிக் கொண்டிருக்கும் சமயத்தில், பைத்தியகாரத்தனமாக, தெரியாத்தனமாக.

IX. *ஓரிரு வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. கோதாம்வாசி ஏன் எல்லாப் பாலாடைக் கட்டிகளையும் குன்றில் உருட்டி விட்டான் ?
2. ஒன்றைப் பத்தாகப் பெருக்கி லாபம் அடையக் கோதாம்வாசிகள் கையாண்ட முறை என்ன?
3. கோதாம்வாசிகள் சுறாமீனை எவ்வாறு தண்டித்தார்கள்?
4. உஷில்டா கிராமவாசிகள் எதற்காகப் பூனையை விலைக்கு வாங்கினார்கள்? எவ்வளவு பணம் கொடுத்தார்கள்?
5. பூனை இருந்த களஞ்சியத்தை ஏன் நெருப்பு வைத்துக் கொளுத்தி-னார்கள்? அதன்பின் நடந்தது என்ன?
6. உங்கள் ஊரில் வழங்கிவரும் இதே மாதிரியான வேடிக்கைக் கதை ஒன்றை சுமார் 150 சொற்களில் எழுதுக.

## ❑ பொதுக் குறிப்பு (Note on General Information)

1. குழந்தைக்குட்டிகளோடும் சட்டி பெட்டிகளோடும் – என்பதில் எதுகைத் தொடரும் மோனைத் தொடரும் இணைந்து வந்துள்ளன.

2. i. நழுவிக், கீழே விழுந்து, வேகமாக உருண்டு ஓடிவிட்டது –
   ii. புதர்களில் போய்ச் சிக்கி மறைந்து விட்டன –
   iii. தண்ணீரில் மூழ்கடித்துக் கொன்றுவிடலாம் –
   iv. விற்றவனையே போய்க் கேட்டுவிட்டு வரவேண்டியதுதான் –
   v. மற்ற ஊர்களில் போய்க் குடியேறி விட்டார்கள்
   – இவையனைத்தும் வினையெச்சங்களைக் கொண்ட வாக்கியப்பகுதிகள்.

3. i. வேகமாக உருண்டு ஓடிவிட்டது.
   ii. பெருங்கூட்டமாக இருக்கும்போது வலை வீசிப்பிடித்துக் கொள்வது.
   iii. துண்டு துண்டாக வெட்ட வேண்டும்
   iv. ஒரே ஓட்டமாக ஓடினான்.
   v. வேடிக்கையாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டான்.
   vi. தெரியாத்தனமாக விலைக்கு வாங்கிவிட்டோம்.
   vii. உடனடியாக நெருப்புவைத்துக் கொளுத்தினார்கள்.
   viii. பூனை நாசூக்காகத் தப்பிவிட்டது.
   – இவையனைத்தும் வினையடைகளைக் கொண்ட வாக்கியப்பகுதிகள்.

4. i. "நீ மட்டும் சந்தைக்குத் தனியாக ஓடுவதா " என்று சொல்லி விட்டு.......
   ii. "பாலாடைக்கட்டிகளே என்னைச் சந்தைப்பேட்டையில் சந்தியுங்கள்" என்று சொல்லிவிட்டு...
   iii. "நாங்கள் பார்க்கவில்லை" என்று சொல்லிவிட்டார்கள்.
   iv. "யார்க் நகர மார்கெட்டுக்குப் போய்ப்பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டு...
   v. "பார்த்தீர்களா ? அத்தனை கருவாடுகளையும் தின்றுவிட்டது, இதை விடக்கூடாது" என்று கத்தினார்கள்.
   vi. "இதை என்ன செய்யலாம் ?" என்று கேட்டான் ஒருவன்.
   vii. "துண்டு துண்டாக வெட்ட வேண்டும்" என்று மற்ற ஒருவன்...
   viii. "தண்ணீரில் மூழ்கடித்துக் கொன்றுவிடலாம்" என்று
   ix. "இங்கேயே கிட.... நாங்கள் உனக்கு உதவிசெய்ய வரப்போவதில்லை" என்று சொல்லிவிட்டு...
   x. "...எலிகளைப் பிடிக்கச் சொல்லுங்கள், பார்ப்போம்" என்று சொன்னார்கள்.

– இவையனைத்தும் மேற்கோள் வாக்கியங்கள். நேரடிப் பேச்சுகளையும், உரையாடல்களையும் அப்படியே கூறிவிட்டு "என்று" என்ற வினையெச்சச் சொல்லின் (vp) மூலம் வாக்கியத்தைத் தொடர்வது மேற்கோள் வாக்கியங்களின் சிறப்பு அம்சமாகும்.

சில மேற்கோள் வாக்கியங்கள் "என்" வினையின் முற்றுச் சொல்லால் (finite verb) முடிவதையும் கீழேயுள்ள எடுத்துக்காட்டுகளில் காணலாம்..

xi. "தாமாகவே இங்கே அவை ஓடிவந்தன" என்றான் கோதாம்வாசி.
xi. "கொல்ல வேண்டும்" என்றான் வேறு ஒருவன்.
xiii. "இது பூனை என்ற பிராணி" என்றான் வெளியூர்க்காரன்.
xiv. "இந்தப் பூனையை வைத்துக் கொள்ளுங்கள்" என்றான்.
xv. "... மாடுகள் தீர்ந்துவிட்டால் ஆட்களையே அடித்துச் சாப்பிடுமாம்" என்றான்.

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style )

எளிமையான சிறுசிறு வாக்கியங்களுடனும் பழக்கமான சொற்களுட–னும் கூடிய நேரடிப் பேச்சுகளை / உரையாடல்களை மேற்கோள்கள் போன்று எழுத்து இலக்கிய வடிவில் எழுதுவது கு. அழகிரிசாமியின் நடை. தமிழாக்கம் செய்யப்பட்ட இவரது சிறுகதைகள் பலவற்றில் காணப்படும் இத்தகைய மொழிநடையை நடையியல் கண்ணோட்டத்தில், விவரிப்பு நடை (narrative style) எனக் குறிப்பிடலாம். ஆயினும் விளக்கநடைக் (descriptive style) கூறுகள் கலந்திருப்பதையும் ஆங்காங்கே காணலாம்.

## 6. இதயம் பேசுகிறது

*மணியன்*

### *பயணக்கட்டுரை*

*[இவர் 'ஆனந்தவிகடன்' வார இதழின் மூலம் தமிழ் மக்களிடையே பிரபலமானவர். ஆனந்தவிகடனின் துணை ஆசிரியர். உலகில் உள்ள பல நாடுகளுக்கும் சென்று திரும்பியவர். பல நாடுகளிலும் தனக்குக் கிடைத்த அனுபவத்தை, ஆனந்தவிகடனில் 'இதயம் பேசுகிறது' என்ற தொடர்கட்டுரையின் மூலம் தமிழ் வாசகர்களிடையே பகிர்ந்து கொண்டவர். 'இதயம் பேசுகிறது' என்னும் வாரபத்திரிகையின் ஆசிரியராகவும் இருந்தவர். 'கென்னடியின் சரிதை' என்ற நூலும், சில நாவல்களும் எழுதியுள்ளார். இக்கட்டுரை ஜப்பான் நாட்டைப் பற்றிய பயணக் கட்டுரைகளில் ஒன்று]*

"என் பெயர் மிஸ். எய்கோ. நான் இங்குள்ள கல்லூரியில் இறுதியாண்டில் படிக்கிறேன். வெல் கம் டு நாரா. உங்களுக்கு எங்கள் ஊரைச் சுற்றிக் காட்டுவதில் நான் பெருமை அடைகிறேன்..." என்று கூறிய வண்ணம், எங்களை 'நாரா' என்ற நகரத்தின் ஸ்டேஷனில் ஒரு பெண் வரவேற்றாள்.

ஜப்பானுக்கு செல்பவர்கள் கண்டிப்பாகப்பார்க்கும் சில ஊர்களில் நாராவும் ஒன்று. ஒரு காலத்தில் ஜப்பான் நாட்டின் தலைநகராக இருந்த இடம் இது.

ஒஸாகாவில் எக்ஸ்போவைப் பார்த்துவிட்டு, நாங்கள் நாரா நகருக்குப் பயணமானோம். நிப்பன் வேதாந்தா சொஸைட்டியைச் சேர்ந்த திருமதி தேவி, அந்தச் சங்கத்தின் மற்றொரு அங்கத்தினரான அஸானோ என்பவரை எங்களுடன் துணைக்கு அனுப்பியிருந்தார்.

"அஸானோவுக்கு ஆங்கிலம் தெரியும்; அவர் உங்களுக்கு உதவு-வார்" என்று சொல்லியிருந்தார் தேவி. ஆனால் அஸானோவின் ஆங்கிலத்தை புரிந்து கொள்ள எங்களால் முடியவில்லை.

அஸானோ ஒரு புகைப்படக்காரர். எனவே அவர் அடிக்கடி எங்களிடம் இரண்டு வார்த்தைகள் பேசுவார். அந்த இரண்டு வார்த்தைகளையும் வெகுநேரம் கழித்தே நாங்கள் புரிந்து கொண்டோம். எங்காவது புகைப்படம் எடுக்க வேண்டுமென்றால் "அஸானோ" என்பேன் நான். அவர் உடனே "பிராக் அண்ட் ஒய்ட் – கரர்?" என்று கேட்பார். 'பிளாக் அண்ட் ஒயிட் படமா, கலர் படமா?' என்ற கேள்வி-

தான் அது. 'ல' என்ற எழுத்து பல ஜப்பானியர்கள் வாயில் நுழைவ-தில்லை. 'ல' வை 'ர'வாகவே உச்சரிக்கிறார்கள். கலர் 'கரர்' ஆகிறது. 'பாலு', 'பாரு'ஆகிறார். அஸானோவைப் பொறுத்தவரை என் மனைவி லலிதா ரரிதாதான்!

ஜப்பான் நாட்டில் எங்களுக்கு இருந்த மகத்தான பிரச்சினை உணவுப் பிரச்சினைதான். சைவ உணவு கிடைப்பது மிகவும் சிரமமாக இருந்தது. டோக்கியோ போன்ற பெரிய நகரங்களில் தமிழர்கள் சிலர் வாழ்வதாலும், 'அஜந்தா','அசோகா'' நாயர் ' போன்ற சில ஓட்டல்கள் இருப்பதாலும் உணவுப் பிரச்சினையை சமாளித்து விட முடிந்தது. டோக்கியோவை விட்டு உள்ளே சென்றால், அதிலும் 'க்யோட்டா', 'நாரா' போன்ற நகரங்களுக்குப் போய் விட்டால் .... பட்டினிதான் ! ரொட்டி, ஜாம், பழம் கிடைக்கிறது. ஆனால் அதை எவ்வளவு நாள் சாப்பிடுவது? சென்ற முறையே எனக்கு இந்த அனுபவம் இருந்ததால், இந்த முறை முன் ஜாக்கிரதையாக பருப்புப் பொடி, ஊறுகாய் எல்லாம் கையோடு கொண்டு சென்றிருந்தோம்.

ஆனாலும் சில இடங்களில் சாப்பாட்டிற்கு மிகவும் கஷ்டப்-பட்டோம். ஒரு பெரிய ஓட்டலுக்குச் சென்று சாதம் மட்டும் கேட்டால், நம்மை மேலும் கீழும் ஒரு முறை பார்த்துவிட்டே கொஞ்சம் தருவார்கள். சாதத்தை மேஜையில் வைத்துக் கொண்டு, சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, யாரும் நம்மை கவனிக்கவில்லையே என்று உறுதிப்படுத்திக் கொண்டு, அவசர அவசரமாக காகிதப் பொட்டலத்தைப் பிரித்து பருப்புப் பொடியை சாதத்தில் போட்டுக் கொண்டு, மேஜையில் வைத்திருக்கும் சிறிய கண்ணாடி ஜாடியிலிருந்து கொஞ்சம் மஞ்சள் வெண்ணெயை எடுத்துப் போட்டுக் கொண்டு, கையால் பிசைந்து அவசர அவசரமாக, திருட்டுத் தனமாக சாப்பிடுவதற்குள் போதும் போதும் என்றாகிவிடும்.

'இது என்ன, எதோ மாவைப் போட்டுப் பிசைந்து சாப்பிடு-கிறார்கள். இவர்கள் !' என்று எங்களை வியப்புடன் பல ஜப்பானியர்கள் கவனித்திருக்கிறார்கள். கொஞ்சம் நாகரிகமாக 'போர்க்', 'ஸ்பூன்' பயன்படுத்தியும் சாப்பிட முடிவதில்லை. பருப்புப் பொடிச் சாதத்தை எப்படி 'போர்க்' (fork)கால் பிசைய முடியும்!

ஒரு பெரிய டிபார்ட்மெண்ட் ஸ்டோரில் அருமையான ஜவ்வரிசி வடாம் வைத்திருந்தார்கள். பிளாஸ்டிக் உறையில் இருந்த அதைக் கண்டதும், 'அப்பாடா! இன்றைக்கு வெறும் பருப்புப்பொடி சாதமாக இல்லாமல், தொட்டுக் கொள்ள வடாமும் கிடைத்துவிட்டது' என்ற

மகிழ்ச்சியுடன் அதை வாங்கி வைத்துக் கொண்டோம். வடாம் சாப்பிட்டு நாளாகி விட்டபடியால், ஒரே ஒரு துண்டை எடுத்துச் சாப்பிட்டேன். பிரமாதமாகத் தான் இருந்தது.

"ஜப்பான்காரன் ஜப்பான்காரன்தான். ஜவ்வரிசி வடாமைக் கூட எவ்வளவு நன்றாகச் செய்கிறான்" என்று ஒரு துண்டைச் சாப்பிட்டு விட்டு லலிதா சர்ட்டிபிகேட் கொடுத்தாள்.

கோமதி இரண்டு மூன்றை வாங்கிச் சாப்பிட்டு விட்டு 'வெல்டன்' என்றார். சாதத்துக்குத் தொட்டுக் கொள்ள என்று வாங்கியது, அப்போதே ஆகிவிட்டது. எனவே மீண்டும் அதைத் தேடி அலைந்தோம். அப்போது எங்களுடன் தமிழ் நண்பர் ஒருவர் இருந்தார். அவரிடம் சொன்னோம். அவருக்குப் புரியவில்லை. "ஜப்பானில் ஜவ்வரிசி வடாமா? வாட் ஈஸ் திஸ்" என்றார். "நான் காட்டுகிறேன்", என்று கூறி, அவரையும் கடைக்கு அழைத்துச் சென்று, கடைசியில் அது இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்தோம். நண்பர் அந்தப் பொட்டலத்தை ஆராய்ந்து பார்த்துவிட்டு "பேஷ்... இதுவா? வெரிகுட் ... சாப்பிட்டுப் பார்த்தீர்களா? எப்படி இருந்தது?" என்று கேட்டார்.

"ஃபஸ்ட் கிளாஸ்... எண்ணெய் குடிக்காமல் எப்படிப் பொரித்திருக்கிறார்கள் தெரியுமா?" என்று மீண்டும் சர்ட்டிபிகேட் கொடுத்தாள் லலிதா.

"வெரிகுட் நிறைய சாப்பிடுங்கள். பன்றி மாமிசம் உடம்புக்கு நல்லது. இது 'போர்க்'கில் செய்தது..." என்றாரே பார்க்கலாம்.

அங்கேயே "வயிற்றை என்னவோ செய்கிறதே ...." என்று கூறி எப்போதோ சாப்பிட்டதற்காக இப்போது கலங்க ஆரம்பித்துவிட்டாள் லலிதா.

"நான் காசி வழியாகத்தான் இந்தியாவுக்குத் திரும்பப் போகிறேன்" என்றார் கோமதி.

அதன் பிறகு வடாம் பக்கமே போவதில்லை நாங்கள். தமிழ்நாட்டிற்குத் திரும்பிய பிறகுகூட, ஜவ்வரிசி வடாமைக் கண்டால் பயமாகத்தான் இருக்கிறது.

இந்தச் சங்கடங்களையெல்லாம் திருமதி தேவியிடம் வர்ணித்தபோதுதான், அவர் "மிஸ்டர் அஸானோவைக் கூட அழைத்துப் போங்கள். அவர் எங்கும் மொழி பெயர்த்து உதவி செய்வார்" என்று கூறி, அஸானோவை உடன் அனுப்பினார்.

நாரா நகரை அடைந்தவுடன், மிஸ். எய்கோவின் துணையுடன் ஒரு கடைக்குச் சென்றோம். அங்கும் நிறைய 'ஜவ்வரிசி வடாம்', இருந்தது. "தைரியமாகச் சாப்பிடலாம், இது ஒரு கிழங்கில் தயார் செய்யப்பட்டது..." என்றார் எய்கோ. ஆனால் ... அது இருக்கும் பக்கம் கூட நாங்கள் போகவில்லை. நாராவிலும், க்யோட்டோவிலும் எங்கள் உணவு, பழம், பால்தான்! அதிலேயே இரண்டு நாளைக் கடத்தினோம்.

ஜப்பானியக் கல்லூரி மாணவ மா்ணவிகளில் சிலர் இப்படி 'கைடு' களாகப் பணியாற்றுகிறார்கள். தங்கள் ஊரின் பெருமையை வெளி–நாட்டார் நன்கு புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக, போட்டி போட்டுக் கொண்டு அவர்கள் இந்த வேலையில் ஈடுபடுகின்றனர். மிஸ். எய்கோ, புராதன நகரமான நாராவின் பெருமையை எங்களுக்குச் சிறப்பாக எடுத்துச் சொன்னார். நாங்கள் அங்கு சென்ற தினம், ஏதோ பெரிய திருவிழா நாள். எனவே, பஸ், டாக்ஸி எதுவும் கிடைக்கவில்லை. மிஸ்.எய்கோ மிகவும் சாமர்த்தியமாக பேச்சுக் கொடுத்துக்கொண்டே, நடத்தியே எங்களை எல்லா இடங்களுக்கும் அழைத்துச் சென்று விட்டார்.

உலகின் மிகப் பெரிய 'மரபுத்தர்' ஆலயத்தில் நுழைந்த பிறகு, அங்கிருந்த கடைகளுக்கு எங்களை அழைத்துச் சென்றார். அங்கே லலிதா வழக்கப்படி 'இயர் ரிங்' கடைகளுக்குச் சென்றாள். நான் மிஸ். எய்கோவிடம் பேச்சுக் கொடுத்தேன்.

"உங்கள் நாட்டில் எல்லா இடங்களிலும் பெண்களுக்குச் சம உரிமை வழங்கப் படுகிறதா"? என்று கேட்டேன்.

"பெண்கள் ஆண்களுக்கு அடிபணிந்து போக வேண்டியவர்கள் என்ற கருத்து முற்காலத்தில் இருந்தது. முன்பு கணவன் எங்கு சென்றுவிட்டு எப்போது வந்தாலும், அவனுக்காக விழித்துக் காத்திருந்து பணிவிடை செய்வாள் மனைவி. இப்போது நிலைமை வேறு. அவன் ஒரு 'நைட் கிளப்' பிற்குச் சென்றால், இவள் இன்னொரு 'கிளப்' பிற்குச் செல்வாள். சில இடங்களில் கணவன் வாங்கும் தினசரிப் பேப்–பரைக்கூட மனைவி வாங்குவது கிடையாது" என்றார் எய்கோ.

"எவ்வளவோ முன்னேற்றம் அடைந்தும், ஜப்பானில் பெண்–களுக்குச் சமத்துவம் கிடையாது. இப்போதும் ஒரு கேளிக்கை, விருந்து என்று செல்லும் போது பெரும்பாலான ஜப்பானிய ஆண்கள் தங்கள் மனைவியை உடன் அழைத்துச் செல்வதில்லை. அதிசயம், ஆனால் உண்மை. இருப்பினும் இளைஞர் சமுதாயத்தில் கொஞ்சம் மாற்றம்

ஏற்பட்டிருக்கிறது' என்று திருமதி நிர்மலா சந்தானம் ஒரு முறை என்னிடம் கூறியது எனக்கு அப்போது நினைவுக்கு வந்தது.

நாரா ஆலயத்தின் திருவிழாவைக் காணக் கூட்டம் கூட்டமாகக் குழந்தைகள் வந்திருந்தார்கள். ஆரோக்கியமான அந்தக் குழந்தைகளைக் கண்டாலே மன நிறைவு ஏற்படும்.

"குழந்தை வளர்ப்பில் ஜப்பானியர்களுக்கு ஈடு இணை கிடையாது. ஜப்பானியக் குழந்தை அழவே அழாது. குழந்தை அழும்படி அவர்கள் விடுவதில்லை. அதன் தேவையை அறிந்து, அதற்கு முன்பே அதைத் தீர்த்து விடுகின்றனர்...."என்றார்.

ஜப்பானில் உள்ள எல்லா டிபார்ட்மெண்ட் ஸ்டோர்களிலும், குழந்தைகளுக்காகவே ஒரு தளம் இருக்கிறது. குழந்தைகள் உடைகளிலிருந்து விளையாட்டுப் பொருள்கள் வரை அனைத்தும் அங்கே கிடைக்கும். விலை கொடுத்து வாங்காமலேயே அங்குள்ள விளையாட்டுப் பொருள்களுடன் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருப்பார்கள். கடைக்காரர் அதைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருப்பார்.

வியாபாரத்திற்குப்போன லலிதா வெகு நேரமாக வராததால், அவள் என்னதான் வாங்குகிறாள் என்று பார்க்க, அவள் நின்றிருந்த கடைக்குச் சென்றேன் நான்.

கடைக்காரர்களிடம் சர்வ சாதாரணமாகத் தமிழில் பேசிக் கொண்டிருந்தாள் லலிதா. அதைக் கேட்டதும், எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"லலிதா, நாம் ஜப்பானில் இருக்கிறோம்" என்றேன்.

"தெரியுமே..." என்றாள் அவள்.

"பிறகு தமிழில் பேசிக் கொண்டிருக்கிறாயே?" என்று கேட்டேன்.

"பேசினால் என்ன? இவர்களுக்கு இங்கிலீஷ் புரியவில்லை. எனக்கு ஜப்பானிய மொழி புரியவில்லை. இவர்களிடம் இங்கிலீஷில் பேசுவதும் ஒன்றுதான். தமிழில் பேசுவதும் ஒன்றுதான். எனவேதான் தமிழிலேயே அடித்துத் தள்ள ஆரம்பித்து விட்டேன். பாருங்களேன், நான் பேசுவதை அவர்கள் எப்படிப் புரிந்து கொள்ளுகிறார்கள் என்று ..." என்று கூறி

"இந்தாப்பா, அதோ அந்தக் கல் வைத்த பிரேஸ்லெட்டை எடு..." என்றாள். கடைக்காரர் அவள் சொல்வதைப் புரிந்து கொண்டு, அவள்

கேட்டதை எடுத்துக் கொடுத்தார். 'சைகை' க்குப் பாஷை கிடையாதே! அதன் பிறகு நானும் பல இடங்களில் தமிழிலேயே பேச ஆரம்பித்தேன்.

மிஸ். எய்கோவிடம் ஜப்பானின் கலாசாரத்தைப் பற்றியும், கல்வி முறை பற்றியும், மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பற்றியும், நான் பல கேள்விகள் கேட்டேன்.

"எங்கெங்கே என்னென்ன இமிடேஷன் நகைகள் கிடைக்கும்" என்று கேட்டாள் லலிதா.

"உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? நீ என்ன மதத்தைச் சேர்ந்-தவள்... எந்த ஊரைச் சேர்ந்தவள்?" என்று கேள்விக் கணைகளைத் தொடுத்தார் கோமதி.

"இந்த ஊரில் வானசாஸ்திரக்கூடம் ஏதாவது இருக்கிறதா? சில நுணுக்கமான கருவிகள் வேண்டுமானால் எங்கே கிடைக்கும்? " என்று கேட்டார் விசுவநாதன்.

(இவருக்கு ஆகாயத்துடன்தான் பொழுது போக்கு. சென்னையிலும் வீட்டிற்கு வந்துவிட்டால் சனியையும், புதனையும், சந்திரனையும் தேடிக் கொண்டிருப்பார் ! பூமியில் நடமாடும் ஸ்டார்களைப் பற்றி எதுவும் தெரிந்து கொள்ளாமல், ஆகாயத்தில் உள்ள 'ஸ்டார்'களுடன் உறவாடு-கிறீர்களே என்று நண்பர்கள் இவரைக் கேலி செய்வார்கள்.)

இதற்கிடையில் அஸானோவுக்கு ஏதோ சந்தேகம் ஏற்பட்டு விட்டது. ஜப்பான் மொழியில் அவர் எதை எதையோ கேட்டார்.

அவ்வளவுதான்!

மிஸ். எய்கோ கதி கலங்கிப் போய்விட்டார். இப்படி ஒரே சமயத்தில் பலர் பல கேள்விகளைக் கேட்டதும், அவருக்குத் தலை சுற்ற ஆரம்பித்து-'விட்டது போலும்!

"ஒவ்வொன்றாகக் கேளுங்களேன். ப்ளீஸ்... ஒன் பை ஒன்" என்று கூறி முகம் சிவக்க தலையை ஒரு முறை உலுக்கி விட்டுக் கொண்டார். காதோரங்கள் கூட சிவந்து விட்டன. இந்த சமகாலத் தாக்கிதை அவரால் தாங்க முடியவில்லை.

அவர் மட்டுமல்ல!

ஜப்பானில் எவராலுமே ஒரே சமயத்தில் பல விஷயங்களில் ஈடுபட முடியாது.

அஷ்டாவதானம் செய்கிறவர்கள் என்பார்களே, அப்படிப் பட்டவர்களை ஜப்பானில் காணவே முடியாது! ஜப்பானியரிடம் ஒரு சமயத்தில் ஒரு வேலையைக் கொடுத்தால், அதை அவர் சிறப்பாகச் செய்வார். அதை செய்து கொண்டிருக்கும்போது இன்னொன்றைச் சொன்னால் குழம்பிப் போய்விடுவார். "எக்ஸ்போ-70" இந்தியப் பெவிலியனை நிர்மாணித்த ஜப்பானிய வல்லுனரிடம், பெவிலியன் உருவாகிக் கொண்டிருக்கும்போது, சில மாற்றங்களைத் தெரிவித்தார்-களாம்! அந்த வல்லுனர், "என்னால் முடியாது, வேறு யாரையாவது வைத்துக் கொண்டு செய்யுங்கள்" என்று கூறிவிட்டாராம்!

இடையில் மாற்றம் என்பதோ, இடையில் இன்னொன்று என்பதோ ஜப்பானியருக்கு முடியாத ஒன்று.

சென்னையில் வாழும் ஒரு பிரமுகர். அவர் காலையில் ஆறு மணிக்கு எழுந்திருக்கிறார். எட்டாவது மணிக்குத் தனது பத்திரிகை ஆபீஸ் அறையில் காணப்படுவார். கேள்வி-பதில் எழுதிக் கொண்-டிருப்பார். திடீரென்று சினிமா விமரிசனம் 'ப்ரூஃப்' வரும். அதைப் பார்ப்பார். பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஒரு டெலிபோன். அவர் பணியாற்றும் கம்பெனியிலிருந்து 'லேபர் கேஸ்' விஷயமாக ஒரு விளக்கம் கோரப்படும். அந்த விளக்கத்தைக் கொடுத்துவிட்டு, மேஜை மேல் எல்லாவற்றையும் அப்படியே வைத்துவிட்டு அவசர அவசரமாய்க் காரில் புறப்பட்டு ஸ்டுடியோவுக்குப் போவார். அங்கு மூன்று மணி நேரம் படப்பிடிப்பில் நடிப்பு, மீண்டும் பத்திரிகை ஆபீஸ். இப்போது தலையங்கம் எழுத வேண்டியிருக்கும். அதை எழுதி முடித்துவிட்டு தன்னுடைய பிளாஸ்டிக் தொழிற்சாலை வரை சென்றுவிட்டுத் திரும்பி, மாலையில் நாடகக் கொட்டகைக்குச் சென்று நடிப்பார். மீண்டும் இரவு பத்திரிகை ஆபீசுக்கு வந்து தொடர்கதை எழுத ஆரம்பிப்பார்.

இவ்வளவையும் குழப்பிக்கொள்ளாமல் செய்யும் அந்த நபருக்கு பெயர் சோ!

ஆமாம், அஷ்டாவதானம் செய்யும் ஆற்றல் படைத்தவர் நண்பர் சோ! ஜப்பான் முழுவதும் சல்லடை போட்டுச் சலித்தாலும் ஒரு 'சோ' கிடைக்கமாட்டார்.

ஒரு சமயத்தில் ஒரு வேலைதான் அவர்களால் செய்ய முடியும். இது அவர்களுடைய பலவீனமா, இல்லை பலமா?

"ஒழுங்கும் கட்டுப்பாடும் மிக்கவர்கள் ஜப்பானியர்கள். கொடுத்த வேலையைச் சிறப்பாகச் செய்வார்கள். ஒரு எஞ்சினியர் தன்னிடம்

பணிபுரியும் ஒரு தொழிலாளியிடம் 'நாலு அங்குல போல்ட் அண்ட் நட் செய்' என்று சொன்னால், அவர் கூறியபடி செய்து கொடுப்பான்! 'இதை இப்படிச் செய்' என்று மேலதிகாரி சொன்னால், அதை அப்படியே செய்வான். 'ஏன் அப்படிச் செய்ய வேண்டும்' என்று கேட்கமாட்டான். நம்மில் சிலரிடம் ஒரு குணம் உண்டு. ஒன்றைச் சொன்னால், ஏன் சார், இதை இப்படிச் செய்தால் நன்றாக இருக்காதா? என்று கேட்பார்கள். இது நல்ல குணம் என்று சொல்வோரும் உண்டு. ஒரே போக்குதான். அவர்கள் ஒருவழிப்பாதை மூளை கொண்டவர்கள். சிங்கிள் டிராக் மைண்ட்"....... என்றார்.

இது பலமா, பலவீனமா? எனக்குப் புரியவில்லை.

மூலம் : ஆனந்த விகடன்
வார இதழில் வெளியான பயணக்கட்டுரை (தொடர்)


* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – அகர வரிசைப்படி (Note on Vocabulary)

| | | |
|---|---|---|
| அங்கத்தினர் | – | உறுப்பினர், member |
| அடிக்கடி | – | மீண்டும் மீண்டும், often |
| அடிப்பணிந்து (vp) | – | சொல்லுகிறபடி கேட்டு, by getting obliged |
| அதிசயம் (n) | – | wonder; astonishment |
| அவசர அவசரமாக | – | hurriedly |
| அனுபவம் (n) | – | பட்டறிவு, experience |
| ஆங்கிலம் | – | English |
| ஆராய்ந்துபார் (v) | – | explore, search for |
| ஆலயம் | – | கோவில், temple |
| ஆற்றல்படைத்தவர் | – | திறமையுள்ளவர் |
| இதயம் | – | உள்ளம், heart |
| இதற்கிடையில் | – | in the meanwhile |
| இறுதியாண்டு | – | கடைசி ஆண்டு / வருடம் |
| ஈடுஇணை | – | ஒப்புமை, comparison |
| ஈடுபடு (v) | – | involve |
| உச்சரி (v) | – | pronounce |

| | |
|---|---|
| உலுக்கிவிட்டுக் கொள் | – குலுக்கி விட்டுக்கொள், have the head shaken |
| உறவாடு (v) | – சொந்தம் கொண்டாடு, to claim relatedness |
| உறுதிப்படுத்து | – நிச்சயப்படுத்து |
| ஊறுகாய் (n) | – pickle |
| எங்கெங்கே | – wherever |
| எட்டாவது மணிக்கு | – eighth hour |
| எடுத்துச்சொல் | – விளக்கிச்சொல், explain |
| என்னென்ன | – whatever |
| ஏதோ பெரிய திருவிழா | – some big festival |
| ஒரு வழிப்பாதை (மூளை) | – single track (mind) |
| ஒரேபோக்கு | – single track (mind); in one direction at a time |
| ஒழுங்கு (n) | – order, discipline |
| கட்டுப்பாடு (n) | – discipline, restriction |
| கடை (n) | – அங்காடி, shop |
| கண்டிப்பாக (adv) | – தவறாமல், நிச்சயமாக |
| கதிகலங்கு (v) | – மனக்குழப்பம் அடை, get confused, be afraid |
| கலாச்சாரம் (n) | – பண்பாடு, culture |
| காணப்படுவார் | – தோற்றமளிப்பார் ; seen |
| காத்திருந்து | – having waited |
| கிழங்கு | – tuber |
| குழம்பிப் போய்விடு | – get confused |
| கூறிய வண்ணம் | – கூறியபடி, சொன்னபடி, as has been told |
| கேள்விக்கணைகள் | – தொடர்ச்சியாகக் கேட்கப்படும் கேள்விகள் ; questions |
| கேலி செய் (v) | – கிண்டல் பண்ணு, to mock |
| கேளிக்கை (n) | – மகிழ்வூட்டு நிகழ்ச்சிகள், entertainment |
| கையோடு | – along with |
| கையால் பிசைந்து (vp) | – mixing by hand |
| சங்கடங்கள் | – இடையூறுகள், தடைகள், கஷ்டம்; difficulties |
| சமகாலத் தாக்கீது | – simultaneous attack ( by a series of questions) |
| சமத்துவம் (n) | – equality |
| சமாளித்துவிடு | – manage |

சரிதை (n) – வரலாறு, கதை ; history
சல்லடை (n) – fine sieve; நெருக்கமான துளைகள் உடைய வலை போன்ற உபகரணம்
சல்லடை போட்டுச் சலித்தாலும் – எவ்வளவு தேடினாலும் (contextual)
சாதம் – அன்னம் ; cooked rice
சாதாரணமாக (adv) – இயல்பாக ; ordinarily; generally
சாமார்த்தியமாக (adv) – திறமையாக ; skillfully
சுற்றிக்காட்டு (v) – show around
சுற்றும் முற்றும் – all around ; நான்கு பக்கமும், சுற்றிலும்
சைகை (n) – gesture
தலைசுற்ற ஆரம்பி – சுற்றியுள்ள பொருள்கள் சுழல்வதைப் போன்ற உணர்வு ஏற்படு ; to feel giddiness
தலைநகர் – capital city
தலையங்கம் (n) – editorial
தளம் (n) – floor in a multistoried building
திடீரென்று (adv) – முன்னறிவிப்பு இன்றி, suddenly
திருட்டுத்தனமாக – stealthily
தீர்த்துவிடுகின்றனர் – நிறைவேற்றுகிறார்கள் ; fulfilled
துண்டு (n) – சிறுபகுதி ; piece
துணைக்கு – உதவிக்கு ; for help
தொட்டுக்கொள்ள – for using (it) as a side dish
தொடர்கட்டுரை – (வார, மாத இதழ்களில்) தொடர்ச்சியாக வெளிவரும் கட்டுரை
தொடர்கதை (n) – தொடர்ச்சியாக வெளிவரும் கதை; serial
தொழிற்சாலை – industry
நடத்து (tr. v) – to conduct
நடமாடும் – திரியும் ; to move around
நாடகக்கொட்டகை – drama theatre
நாளைக் கடத்து (v) – pass the days
நுணுக்கமான (adj) – minute, fine, sharp
பகிர்ந்துக்கொள் (v) – பங்கிட்டுக் கொள் ; to share
பட்டினி (n) – பசியுடன் இருத்தல் ; starvation; hunger
படப்பிடிப்பு (n) – film shooting

| | | |
|---|---|---|
| பணியாற்று (v) | – | பணிசெய் ; to do work |
| பணிவிடை (n) | – | தொண்டு ; service |
| பருப்புப்பொடி | – | (துவரம்)பருப்பின் பொடி ; powder of bengal gram |
| பலம் (n) | – | வலு, ஆற்றல் |
| பலவீனம் (n) | – | வலுவின்மை |
| பிளாஸ்டிக் உறை | – | Plastic cover |
| பிரமாதமாக | – | மிகவும் சிறப்பாக ; excellently |
| பிரமுகர் (n) | – | பெரிய மனிதர் (மதிக்கத்தக்கவர்), VIP |
| பிரயாணக்கட்டுரை | – | பயணக்கட்டுரை ; travellogue |
| புகைப்படம் | – | photo |
| புராதன நகரம் | – | ancient city |
| புரிந்துகொள் (v) | – | உணர்ந்து கொள், understand |
| பெரும்பாலான | – | most of |
| பெருமைஅடை (v) | – | சிறப்பு அடை; feel proud of |
| பேச்சுக்கொடு | – | பேசஆரம்பி ; to initiate a talk |
| பொட்டலம் | – | pack; parcel |
| பொழுது போக்கு (n) | | நேரத்தை (பயனுள்ள வகையில்) செலவு செய்தல் ; hobby; recreation |
| மகத்தான பிரச்சினை | – | great problem |
| மகிழ்ச்சி | – | உவப்பு, சந்தோஷம் ; happiness |
| மாமிசம் | – | இறைச்சி ; mutton; flesh |
| மாற்றங்கள் | – | changes |
| முன்னேற்றம் | – | வளர்ச்சி ; progress |
| மூளை (n) | – | brain |
| மேலதிகாரி | – | higher officer, superior officer |
| வடாம் (n) | – | a mixure of flour, herbs, spices, etc made into lumps or balls and dried in the sun |
| வயிறு | – | stomach |
| வர்ணித்தபோது | – | when narrated |
| வரவேற்றாள் | – | (she) welcomed |
| வல்லுனர் | – | நிபுணர்; expert |

| | | |
|---|---|---|
| வாயில் நுழைவதில்லை | – | not pronounceable, (in view of the sounds being unfamiliar) do not get into the mouth |
| வாழ்க்கைத் தரம் (n) | – | standard of life |
| வானசாஸ்திரக் கூடம் | – | astronomical lab |
| விடு (v) | – | let |
| விருந்து (n) | – | feast |
| விளக்கம் கோரப்படும் | – | explanation be sought |
| வெகுநேரம் (n) | – | **நீண்ட நேரம்** ; long time |
| ஜாக்கிரதையாக (adv) | – | **கவனமாக** ; carefully |
| ஜாடி | – | **கலம்** ; **கூஜா** ; jar; a vessel made up with a kind of special mud |

## ☐ பிறமொழிசொற் குறிப்பு (Note on Vocabulary from other Languages)

### 1. ஆங்கிலம்

| | | |
|---|---|---|
| நாவல் | Novel | புதினம் |
| வெல்கம் டு நாரா | Welcome to Nara | நாராவுக்கு வரவேற்கிறோம் ; நல்வரவாகுக |
| ஸ்டேஷன் | Station | நிலையம் |
| எக்ஸ்போ | Expo | கண்காட்சி |
| சொசைட்டி | Society | சமுதாயம் |
| பிளாக் அண்ட் ஒயிட் | Black and white | கறுப்பு மற்றும் வெள்ளை |
| கலர் | Colour | நிறம் |
| ஓட்டல் | Hotel | தங்குமிடம் |
| போர்க் | Pork | பன்றி மாமிசம் |
| ஸ்பூன் | Spoon | அகப்பை, கரண்டி |
| பிளாஸ்டிக் | Plastic | வார்ப்புப் பொருள் |
| டிபார்ட்மெண்ட்ஸ்டோர் | Departmental store | பலசரக்குக் கடை |
| சர்ட்டிபிகேட் | Certificate | சான்றிதழ் |
| வெல்டன் | Well done | நல்லது |
| வாட் ஈஸ் திஸ்? | What is this ? | என்ன இது? |
| வெரிகுட் | Very good | மிகவும் நல்லது |
| ஃபஸ்ட் கிளாஸ் | First class | முதல் வகுப்பு |

| | | |
|---|---|---|
| மிஸ்டர் | – Mister | – திருவாளர் |
| கைடு | – Guide | – உதவியாளர், வழிகாட்டி |
| பஸ் | – Bus | – பேருந்து |
| டாக்ஸி | – Taxi | – வாடகைக்கான மகிழ்வுந்து |
| இயர்ரிங் | – Ear-ring | – காதணி |
| நைட் கிளப் | – Night club | – (பொழுது போக்குக்கான) இரவு மன்றம் |
| பேப்பர் | – Paper | – தாள்;செய்தித்தாள். (நேரடிப்பொருள்) |
| இங்கிலீஷ் | – English | – ஆங்கிலம் |
| பிரெஸ்லெட் | – Bracelet | – ornamental chain for the wrist; கைவளை, காப்பு |
| இமிடேஷன் | – imitation | – போலித்தோற்றம், போலிப் பொருள் |
| ஸ்டார் | – Star | – விண்மீன் |
| ப்ளீஸ் ஒன் பை ஒன் | – Please one by one | – தயவு செய்து ... ஒன்றன்பின் ஒன்றாக |
| பெவிலியன் | – Pavilion | – கண்காட்சிக்காக அமைக்கப்படும் மேடை போன்ற அமைப்பு |
| ஆ,பிஸ் | – Office | – அலுவலகம் |
| ப்ரூஃப் | – Proof | – சான்று |
| சினிமா | – Cinema | – திரைப்படம் |
| லேபர் கேஸ் | – Labour case | – தொழிலாளர் தொடர்பான வழக்கு |
| டெலிபோன் | – Telephone | – தொலைபேசி |
| கம்பெனி | – Company | – கூட்டாக நடத்தப் பெறும் அலுவலகம் / கழகம் / தொழில் நிலையம் |
| கார் | – Car | – மகிழ்வுந்து |
| ஸ்டுடியோ | – Studio | – பல்வேறு வசதிகளுடன் கூடிய இட அமைப்பு திரைப்பட எடுப்பு அரங்-கம், வானொலி பரப்பு அரங்கம்) |
| எஞ்சினியர் | – Engineer | – பொறியியலாளர் |
| போல்ட் அண்ட் நட் | – Bolt and nut | – திருகாணியும் மரையும் (சுரை வட்டும்) |
| சிங்கிள் டிராக் மைண்ட் | – Single track mind | – ஒருவழிப் பாதை |

2. சமஸ்கிருதம்

ஆனந்த விகடன் – மகிழ்ச்சியூட்டுபவன் (நேரடிப் பொருள்); ஒரு தமிழ் வார இதழின் பெயர்
ஆரோக்கியம் – நலம், சுகம்
சரிதை – வரலாறு
பிரயாணி – பயணம் செய்பவர், பயணி
வாசகர் – படிப்பவர்
பிரயாணம் – பயணம்
சங்கம் – கூட்டமைப்பு, association, society
பிரச்சினை – சிக்கல்
கஷ்டம் – துன்பம்
அவசரம் – விரைவு
ஜாடி – கலன் (கொள்கலன்) ,jar like pot
பேஷ் – மகிழ்ச்சியைக் காட்டும் சொல்
சங்கடம் – தயக்கம் / uneasiness
வர்ணி – விவரி
சாமர்த்தியம் – திறமை
கேளிக்கை – பொழுது போக்கு நிகழ்ச்சி
சாதாரணம் – ஆடம்பரம் இல்லாத, simple
பாஷை – மொழி
சாஸ்திரம் – ஒழுக்க நெறிகள் கூறும் நூல்
அஷ்டாவதானம் – ஒரே நேரத்தில் பல்வேறு வேலைகளைச் செய்தல் (அஷ்டம்–எட்டு); cf. சதாவதானம்
பத்திரிகை – இதழ்; magazine
விமரிசனம் – மதிப்பீடு; critical review; assessment
விஷயம் – செய்தி
பலம் – ஆற்றல்; strength
பலவீனம் – குறைபாடு; weakness

## ❑ ஊர்ப் பெயர்கள் (Names of Places)

ஒஸாகா, நாரா, டோக்கியோ, காசி, க்யோட்டோ

## ❑ ஆட்களின் பெயர்கள் (Names of People)

எய்கோ, அஸாகோ, மணியன், விசுவநாதன், சோ ராமசாமி, ஜெயராமன், கோமதி, லலிதா, தேவி, நிர்மலா சந்தானம்

## ❑ பயிற்சி (Exercise)

*I அ. எ.கா.வில் உள்ளதுபோல், பெயர்ச் சொற்களாக மாற்றுக.*

*எ.கா.: அனுபவி – அனுபவம்; ஈடுபடு – ஈடுபாடு; செய் – செயல்; நடி – நடிப்பு; கேள் – கேள்வி; கருது – கருத்து.*

விளக்கு, முன்னேறு, கலங்கு, திரும்பு, மாற்று, கட்டுப்படு, ஏற்படு, சாப்பிடு, நெய், மொழியார், பொரி, முடி, வாழ், நுழை.

*ஆ. எ.கா.வில் உள்ளதுபோல் வினைச் சொற்களாக மாற்றுக.*

*எ–கா.: விளைவி – விளை; தவிப்பு – தவி; கூப்பாடு – கூப்பிடு; முறையீடு – முறையிடு; மறைவு – மறை*

கேள்வி, உச்சரிப்பு, சாப்பாடு, வெளியீடு, மாற்றம், சமாளிப்பு, வர்ணனை, நிறைவு.

*II அ. பொருத்தமான ஒன்றைத் தேர்ந்தெடுத்து கோடிட்ட இடத்தை நிரப்புக.*

1. ஒரு காலத்தில் ஜப்பான் நாட்டின் ———ஆக இருந்த இடம் நாரா.
[மாநகர், தலைநகர், புறநகர், மலைநகர்]
2. நிப்பன் வேதாந்தா சொசைட்டியைச் ——— திருமதி தேவி.
[சிறப்பிப்பவர், சீர்படுத்தியவர், சேர்ந்தவர், சிறிதாக்கியவர்]
3. உலகின் மிகப் பெரிய மரபுத்தர் ஆலயத்தில் நுழைந்தவுடன் லலிதா ——— படி 'இயர் ரிங்' கடைகளுக்குச் சென்றார்.
[வழக்கப்–, நோக்கப்–, நினைத்த–, நெளிந்த–]
4. ஜப்பானியர்கள் ———
[ஒழுங்கும் கட்டுப்பாடும் மிக்கவர்கள், அஷ்டாவதானம் செய்கிறவர்கள், இதை இப்படிச் செய்தால் நன்றாக இருக்காதா என்று எதிர்த்து கேட்கிறவர்கள், கொடுத்த வேலையில் மாற்றம் செய்கிறவர்கள்]
5. பூமியில் நடமாடும் ஸ்டார்களைப் பற்றி எதுவும் ——— கொள்ளாமல் ஆகாயத்தில் உள்ள ஸ்டார்களுடன் உறவாடுகிறவர் விஸ்வநாதன்.
[நடந்து, கடந்து, தெரிந்து, பறந்து]

ஆ. *பொருத்தமான வேற்றுமை உருபைத் தேர்ந்தெடுத்து கோடிட்ட இடத்தை நிரப்புக.*

1. அசோகா போன்ற சில ஓட்டல்கள் இருப்பதால் தான் உணவுப் பிரச்சினை + ——— சமாளித்து விட முடிந்தது. [ஐ , ஆல்]
2. வெண்ணெயை எடுத்துப் போட்டுக் கொண்டு கை + ——— பிசைந்து சாப்பிடுவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. [ஐ , ஆல்]
3. அங்குள்ள விளையாட்டுப் பொருள்கள் + ——— குழந்தைகள் விளையாடிக் கொண்டிருப்பார்கள். [இல், உடன்]
4. அங்கிருந்த கடைகள் + ——— எங்களை அழைத்துச் சென்றார். [உக்கு, இல்]
5. அவர் பணியாற்றும் கம்பெனி + ——— லேபர் கேஸ் விஷயமாக ஒரு விளக்கம் கோரப்படும். [இலிருந்து, இடமிருந்து]
6. ஒரு எஞ்சினியர் தொழிலாளி + ——— இதைச் செய் என்று சொன்னால் அவர் கூறியபடியே செய்து கொடுப்பான். [இடம், ஐ ]
7. பருப்புப் பொடி ஊறுகாய் எல்லாம் கை + ——— கொண்டு சென்றிருந்தோம். [ஒடு, ஆல்]

III. *வலப்பக்கத்திலிருந்து சரியான ஒன்றைத் தேர்ந்தெடுத்து வாக்கியத்தை முழுமையாக்குக.*

| | | |
|---|---|---|
| 1. சாதத்துக்குத் தொட்டுக் கொள்ளுவது | – | தேடுதல் |
| 2. காசி வழி திரும்புதல் | – | கறி |
| 3. சல்லடை போட்டுச் சலித்தல் | – | குமட்டுகிறது |
| 4. ஒரு வழிப் பாதை மூளை கொண்டவர்கள் | – | பாவத்தைப் போக்குதல் |
| 5. வயிற்றை என்னவோ செய்கிறது | – | ஒவ்வொன்றாக செய்பவர்கள் |

IV ஆ. *பொருள் சிதைவின்றி சிறுசிறு வாக்கியங்களாகப் பிரித்து எழுதுக.*

'சாதத்தை மேஜை மேல் வைத்துக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, யாரும் நம்மைக் கவனிக்கவில்லையே என்று உறுதிப்படுத்திக் கொண்டு, அவசர அவசரமாக காகிதப் பொட்டலத்தைப் பிரித்துப் பருப்புப் பொடியைச் சாதத்தில் போட்டுக் கொண்டு மேஜையில் வைத்திருக்கும் சிறிய கண்ணாடி ஜாடியிலிருந்து கொஞ்சம் மஞ்சள் வெண்ணெயை எடுத்துப் போட்டுக் கொண்டு கையால் பிசைந்து, அவசர அவசரமாக, திருட்டுத் தனமாக சாப்பிடுவதற்குள் போதும் போதும் என்றாகிவிடும்' என்கிறார் கட்டுரையாசிரியர்.

ஆ. *பொருள் சிதைவின்றி கூட்டுவாக்கியங்களாக மாற்றி எழுதுக.*

சென்னையில் வாழும் ஒரு பிரமுகர் காலையில் 6 மணிக்கு எழுந்திருக்கிறார். எட்டாவது மணிக்கு தனது பத்திரிகை ஆபீஸ் அறையில் காணப்படுவார். கேள்வி பதில் எழுதிக் கொண்டிருப்பார். திடீரென்று சினிமா விமரிசனம் ப்ரூப் வரும். அதைப் பார்ப்பார். பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஒரு டெலிபோன். அவர் பணியாற்றும் கம்பெனியிலிருந்து லேபர் கேஸ் விஷயமாக ஒரு விளக்கம் கோரப்படும். அந்த விளக்கத்தைக் கொடுத்துவிட்டு, மேஜை மேல் எல்லாவற்றையும் அப்படியே வைத்துவிட்டு அவசர அவசரமாய் காரில் புறப்பட்டு ஸ்டுடியோவுக்குப் போவார். அங்கு மூன்று மணிநேரம் படப்பிடிப்பில் நடிப்பு. மீண்டும் பத்திரிகை ஆபீஸ். இப்பொழுது தலையங்கம் எழுத வேண்டியிருக்கும். அதை எழுதி முடித்துவிட்டு தன்னுடைய பிளாஸ்டிக் தொழிற்சாலை வரை சென்று விட்டு திரும்பி மாலையில் நாடகக் கொட்டகைக்குச் சென்று நடிப்பார். மீண்டும் இரவு பத்திரிகை ஆபீஸுக்கு வந்து தொடர் கதை எழுத ஆரம்பிப்பார்.

V. *ஒவ்வொரு வாக்கிய அமைப்பையும் பின்பற்றி வேறு ஒரு சொந்த வாக்கியம் எழுதுக.*

1. 'அஸானோவுக்கு ஆங்கிலம் தெரியும்; அவர் உங்களுக்கு உதவுவார்' என்று சொல்லியிருந்தார் தேவி. ஆனால் அஸானோவின் ஆங்கிலத்தைப் புரிந்து கொள்ள எங்களால் முடியவில்லை.
2. ஜப்பான் நாட்டில் எங்களுக்கு இருந்த மகத்தான பிரச்சினை உணவு பிரச்சினைதான். சைவ உணவு கிடைப்பது மிகவும் சிரமமாக இருந்தது.
3. பெரிய நகரங்களில் தமிழர்கள் சிலர் வாழ்வதாலும், அஜந்தா அசோகா போன்ற ஓட்டல்கள் இருப்பதாலும் உணவுப் பிரச்—சினையைச் சமாளித்துவிட முடிந்தது.
4. 'அப்பாடா! இன்றைக்கு வெறும் பருப்புப் பொடி சாதமாக இல்லாமல், தொட்டுக் கொள்ள வடாமும் கிடைத்து விட்டது' என்ற மகிழ்ச்சியுடன் அதை வாங்கி வைத்துக் கொண்டோம்.
5. ஜப்பானில் எல்லா டிபார்ட்மெண்ட் ஸ்டோர்களிலும் குழந்தை—களுக்காகவே ஒரு தளம் இருக்கிறது. குழந்தைகள் உடைகளிலிருந்து விளையாட்டுப் பொருள்கள் வரை அனைத்தும் அங்கே கிடைக்கும்.
6. இவர்களுக்கு இங்கிலீஷ் புரியவில்லை. எனக்கு ஜப்பானிய மொழி புரியவில்லை. இவர்களிடம் இங்கிலீஷில் பேசுவதும் ஒன்றுதான். தமிழில் பேசுவதும் ஒன்றுதான். எனவேதான் தமிழிலேயே அடித்துத் தள்ள ஆரம்பித்துவிட்டேன்.

7. அஷ்டாவதானம் செய்யும் ஆற்றல் படைத்தவர் நண்பர் சோ! ஜப்பான் முழுவதும் சல்லடை 'போட்டுச் சலித்தாலும் ஒரு 'சோ' கிடைக்கமாட்டார்.

VI. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக.*

1. "பிராக் அண்ட் ஒய்ட் – கரர் ?"
2. "இந்த ஊரில் வானசாஸ்திரக் கூடம் ஏதாவது இருக்கிறதா?"
3. "ஜப்பானியக் குழந்தை அழவே அழாது"
4. "ஒவ்வொன்றாகக் கேளுங்களேன், பிளீஸ்... ஒன்பை ஒன்"
5. "என்னால் முடியாது வேறு யாரையாவது வைத்துக்கொண்டு செய்யுங்கள்"

VII. *சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.*

1. சுற்றிக்காட்டு
2. அவசரஅவசரமாக
3. முன்ஜாக்கிரதையாக
4. சமாளித்துவிடு
5. வர்ணித்தபோது
6. ஈடுஇணை கிடையாது
7. பெரும்பாலான
8. சமஉரிமை
9. மனநிறைவு
10. நுணுக்கமான

VIII. *ஓரிரு வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. பெரும்பாலான ஜப்பானியர்கள் 'ல' வை 'ர' வாகவே உச்சரிக்கிறார்கள் என்பதற்கு சில எடுத்துக்காட்டுகள் தருக.
2. ஜப்பானில் மாணவ மாணவிகளில் சிலர் ஏன் கைடுகளாகப் பணியாற்றுகிறார்கள்?
3. ஜப்பான் நாட்டில் பெண்களுக்கு அளிக்கப்படும் உரிமை யாது?
4. 'குழந்தை வளர்ப்பில் ஜப்பானியர்களுக்கு ஈடு இணை கிடையாது' என்று சொல்லப்படுவது ஏன் ?
5. 'ஜப்பானியர்கள் ஒருவழிப்பாதை மூளை கொண்டவர்கள்'என்று கூறப்படுவதேன்?

IX. *சிறு குறிப்பு வரைக. (சுமார் 5 வாக்கியங்களில்)*

1. வெளிநாட்டுப் பயணங்களின்போது பொதுவாக ஏற்படும் பிரச்சினைகள்
2. ஜப்பானின் சவ்வரிசி வடாம் தந்த அனுபவங்கள்

X. *கல்விச் சுற்றுலாவின்போது தமிழ் மாநிலத்தில் பெற்ற அனுபவங்களை ஒரு கட்டுரையாக எழுதுக. (ஒரு பக்க அளவில்).*

## ❑ பொதுக் குறிப்பு (Note on General Information)

*பாடப்பகுதியில் வந்துள்ள சில வாக்கியங்களுக்கான விளக்கம்*

1. 'ல' என்ற எழுத்து ஜப்பானியர்கள் வாயில் நுழைவதில்லை –
   'ல' என்ற ஒலியை ஜப்பானியர்களால் உச்சரிக்க முடிவதில்லை.

2. 'ஜப்பான்காரன் ஜப்பான்காரன்தான்' ஜவ்வரிசி வடாத்தைக் கூட எவ்வளவு நன்றாகச் செய்கிறான்' என்று ஒரு துண்டைச் சாப்பிட்டுவிட்டு லலிதா சர்ட்டிபிகேட் கொடுத்தாள் –
   ஜப்பானியர் 'எதையும் செம்மையாக செய்பவர்கள்' என்று பாராட்டுகிறாள்.

3. 'வயிற்றை என்னவோ செய்கிறதே!' என்று கூறி எப்போதோ சாப்பிட்ட–தற்காக இப்போது கலங்க ஆரம்பித்து விட்டாள் லலிதா –
   (வடாம் என நினைத்துச்) சாப்பிட்டது உண்மையான வடாம் அல்ல, பன்றி மாமிசம் என்று தெரிந்தவுடன் லலிதாவுக்கு வயிற்றைக் குமட்டுவது போன்ற உணர்வு ஏற்பட்டது.

4. 'நான் காசி வழியாகத்தான் இந்தியாவுக்குத் திரும்பப் போகிறேன்' என்றார் கோமதி –
   காசிக்குப் போவது பாவத்தைப் போக்குவதற்காகவே என்பது மரபு. அதனால் காசிக்குச் சென்று அசைவ உணவு சாப்பிட்ட பாவத்தைப் போக்கி விட்டுத்தான் ஊர் திரும்ப வேண்டும் என்றார் கோமதி.

5. ஜப்பான் முழுவதும் சல்லடை போட்டுச் சலித்தாலும் ஒரு 'சோ' கிடைக்க மாட்டார் –
   ஜப்பான் முழுவதும் எவ்வளவு தேடிப் பார்த்தாலும் ஒரே நேரத்தில் பல வேலைகளைச் செய்யும் 'சோ'வைப் போன்ற ஒரு மனிதர் கிடைக்க மாட்டார். ஏனெனில் ஜப்பானியர் ஒரு வழிப்பாதை மூளை கொண்டவர்கள்.

6. ஜப்பானியக் குழந்தை அழவே அழாது –
   குழந்தையின் தேவையை அறிந்து அதற்கு முன்பே அதைத் தீர்த்து விடுகின்றனர். அதனால் குழந்தைகள் அழவேண்டிய அவசியமில்லை.

7. இவர்களிடம் இங்கிலீஷில் பேசுவதும் ஒன்றுதான். தமிழில் பேசுவதும் ஒன்றுதான். எனவேதான் தமிழிலேயே அடித்துத் தள்ள ஆரம்பித்து விட்டேன் –
   அவர்களுக்கு ஆங்கிலமும் தெரியாது, தமிழும் தெரியாது. அதனால் எந்த மொழியில் பேசினால் என்ன என்று தமிழிலேயே சைகையுடன் பேசினார் லலிதா.

8. இங்குள்ள–
   'இங்கு' என்பது 'நாரா' என்ற நகரம்; அதாவது, நாராவிலுள்ள

9. அஸானோவைப் பொறுத்தவரை –
   As far as அஸானோ is concerned.

10. 'ரொட்டி, ஜாம், பழம் கிடைக்கிறது' –
    'ரொட்டியும் ஜாமும் பழமும் கிடைக்கின்றன' என்றும் எழுதலாம்.

11. பருப்புப் பொடி ஊறுகாய் எல்லாம் கையோடு எடுத்துச் சென்றிருந்தோம் – பருப்புப்பொடி, ஊறுகாய் உள்பட தேவையான எல்லாவற்றையும் எங்களுடன் எடுத்துச் சென்றிருந்தோம்.

12. சாப்பாட்டிற்கு –
    சாப்பாட்டுக்கு என்றும் பயன்படுத்தப்படுகிறது.

13. 'அதை எவ்வளவு நாள் சாப்பிடுவது?' –
    'சாப்பிடுவது என்பது' இங்கெ 'சாப்பிட முடியும்' என்ற பொருளில் வந்துள்ளது.

14. போதும் போதும் என்றாகிவிடும் –
    மிகவும் கஷ்டமாகிவிடும்.

## ❑ இலக்கணக் குறிப்பு (Note on Grammar)

பிறமொழித்தாக்கம்: தமிழிலுள்ள 'வ' என்பதை 'ப' என்றும் 'கை' என்பதைக் 'கொய்' என்றும் முறையே ஒரியா மொழியினரும் வங்காளி மொழியினரும் உச்சரிப்பதைப் போலவே, ஜப்பான்காரர்கள் 'ல' என்பதை 'ர' என்று உச்சரிக்கிறார்கள். இதனால் 'லலிதா' என்பது 'ரரிதா' ஆகிறது. இது அவர்களது தாய்மொழி தாக்கத்தினால் ஏற்படுவது.

| | |
|---|---|
| பார்த்துவிட்டு – | after having seen; derived from the verb பார் |
| | பார்த்துவிடு (v) |
| | பார்த்துவிட (inf) |
| | பார்த்துவிட்டு (v.p) |
| | பார் + த்து + விடு. |
| | v > vp + aux. |
| வேண்டுமென்றால் – | If (he) needs, (conditional) |
| | வேண்டும் + என்றால் |
| | வேண்டும் + என் + ற் + ஆல் |
| | def.v + v + past tense marker + conditional marker |

Emphatic reduplication consists of infinitive and finite verb

| | |
|---|---|
| (போக) மாட்டவே மாட்டேன் – | (I) would never (go) |
| முடியவே முடியாது – | (It) would never be possible. |
| இருக்கவே இருக்கு – | (It is) always there (to use) |

*Distributive reduplication*

Reduplication of pronouns has a distributive function, i.e., It specifies different kinds of things, or links different things in a certain relationship, (or) distributes qualities among various members of a set of things.

என்ன + என்ன – என்னென்ன
What are all (the things that are available?)
என்னென்ன பழம் வாங்கணும்?
What are all the fruits that (I) should buy ?
எங்கே + எங்கே – எங்கெங்கே
Where are all (the places you have gone?)
எங்கெங்கே போயிருக்கிறீங்க?
Where are all the places you have gone ?
அவங்க + அவங்க – அவங்கவங்க
அவங்கவங்க மனைவி அவங்கவங்களுக்கு அழகாத்தான் தெரியும்
(It is not a surprise as) one's wife will always look beautiful to himself.

*Reduplication - positive negative*

A reduplicated verb where the 1st verb is in the form of the *positive past participle* plus 'உம்' followed by the verb stem in the form of the *negative past participle* means even before the action is taking place as expressed by the verb.

| | | |
|---|---|---|
| வந்தும் வராம | – | அரை குறையாக ; even before coming |
| எந்திரிச்சும் எந்திரிக்காம | – | half sitting; |
| தெரிஞ்சும் தெரியாம | – | half knowing |
| குளிச்சும் குளிக்காமலும் | – | half bathing |

*Echo word*

| | | |
|---|---|---|
| புலிகிலி | – | tigers and other beasts. |
| பரத்தே கிரத்தே | – | nasty words, as persons, etc |
| காப்பி கீப்பி | – | coffee and so on |
| போய்ட்டு கீய்ட்டு | – | going and doing other activities |
| பாம்பு, கீம்பு | – | snakes and other reptiles |
| மரம், கிரம் | – | Trees and things |

*Onomatopoeic expressions*

| | | |
|---|---|---|
| திடீர்னு | புஸ்குன்னு | சுருக்குனு |
| டகார்னு | படார்னு | ஜல்லுனு |
| உம்முன்னு | மடார்னு | |

*Reduplicative expressions.*

| | | |
|---|---|---|
| சடக்சடக்னு | வளவளன்னு | சலசலன்னு |
| டமார் டமார்ன்னு | மடமடன்னு | கடகடன்னு |
| சடசடன்னு | கிடுகிடுன்னு | சொடசொடன்னு |

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

இன்றைய பேச்சு வழக்கில் பயன்படுத்துவதைப் போன்றே படைப்பிலக்கியங்களிலும் ஆங்கிலம் போன்ற பிறமொழிச் சொற்கள் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன. நடுத்தரக்குடும்பத்தைச் சார்ந்த பாத்திரப் படைப்புகளிலுள்ள உரையாடல் பெரும்பாலும் இத்தகைய நடையிலேயே காணப்படுகின்றன. இதற்குப் பொருத்தமான எடுத்துக்காட்டாக அமைகிறது மணியனின் பயணக்கட்டுரை. இவ்வாறு பிறமொழிச் சொற்களுடன் கூடிய பேச்சு மொழிவழக்கு எழுத்திலக்கிய வடிவம் பெறும்போது அதனைப் பெயர்ப்புநடை (code switching style) எனக்குறிப்பர் நடையியலார். மணியனின் நடையில் பெரும்பாலும் எளிமையான வாக்கிய அமைப்புகளே காணப்படுகின்றன.

# 7. கொடிநாள்

## மு. கருணாநிதி

[திரு. முத்துவேலர்–திருமதி அஞ்சுகம் ஆகியோரின் மகனாகிய மு.கருணாநிதி தஞ்சை மாவட்டத்திலுள்ள திருக்குவளை என்ற ஊரில் 3.6.1924 அன்று பிறந்தவர். தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோரின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டுத் திராவிட இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டவர். இவர் நான்கு முறை தமிழகத்தின் முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரது சொல்வன்மை, எழுத்தாற்றல், கவிதைத் திறன், கலை ஆர்வம், அரசியல் உணர்வு, சமூகச் சீர்திருத்த நெறி, சிந்தனை ஆற்றல், ஆட்சித்திறன் போன்ற பல்வேறு பண்புநலன்கள் அனைவராலும் வியந்து பாராட்டப்பட்டுள்ளன. குறளோவியம், சங்கத்தமிழ், பொன்னர்–சங்கர், வெள்ளிக்கிழமை, ரோமாபுரிப்பாண்டியன், தென்பாண்டிச்சிங்கம், புதையல், ஒரே ரத்தம் போன்ற பல சிறந்த நூல்களை இயற்றியுள்ளார். இவரது தென்பாண்டிச் சிங்கம் என்ற நூல் தஞ்சைத்தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் 'இராசராசன் விருது' பெற்றுள்ளது. இவரது திரைப்படக் கதை வசனங்கள் அனைவரையும் ஈர்ப்பதாகவுள்ளன.]

கொடி நாள் கொண்டாடுகிறோம் இன்று (டிசம்பர், 7)! இந்நாளில் உங்கள் நினைவுக்குச் சிலவற்றைக் கொணரல் என் கடமை.

கொடும்பனியும் கொடிய குளிரும் தாக்கும் பகுதிகள், கோடையின் வெப்பம் கொல்லும் இடங்கள், குண்டு மழை பொழியும் களங்கள் – உயிரைத் திரணமாக மதித்த வீர மறவர்கள் உலா வந்த புனித பூமி இவைகள்.

கண்ணைக் காப்பதிலும் அதிகக் கவலை அந்த மாவீரர்களுக்கு மண்ணைக் காப்பதிலே உண்டு. 'அன்னியர் ஆதிக்கம், அங்குலமளவும், அன்னை பூமியில் தோன்றிட விடோம்!' எனச் சூளுரைத்தனர்; சுடர் முகம் தூக்கினர்; சுழலும் வாளைக் கையில் ஏந்தினர்; சுற்றமும் சுகமும் அறவே மறந்தனர்; சுதந்தர மண்ணைக் காத்திட துடித்தனர்.

'களம் சென்று வந்திடடா கண்ணே! என்
உளம் வெந்து போவதற்கு முன்னே!'

என்று தாய் தழுவிக்கொண்டாள், அவன் தன்தோள் தட்டிப் புறப்பட்ட போது! மழலை பொழியும் குழந்தையின் மாம்பழக் கன்னத்தில் முத்தமீந்து புறப்பட்டான் மறவன் கடும்பயணம்!

சாவின் வாய்க்குள்ளே போவதற்கு அவனுக்குத்தான் எத்துணைத் துணிச்சல்! அதிலே எத்தனை மகிழ்ச்சி ! 'எந்த நேரத்தில், எந்தப் பக்கமிருந்து எதிரியின் குண்டு பாயுமோ! விமானம் தாக்குமோ! டாங்கிப் படை மோதுமோ!' என்றெல்லாம் கவலைப்படாமல், நாடு காக்கும் வீரர் களம் நோக்கி நடந்தனர், இரத்தக் கடலில் பயங்கர மூச்சு விட்டுக்-கொண்டு மிதந்து செல்லும் வீரர்களின் மண்டையோடுகளை முத்தமிட்டபடி.

'முன்னேறு நீ ! முன்னேறு நீ !' என்று முரசொலித்து, எஞ்சிய வீரர்களை நெஞ்சுரம் கொள்ளச் செய்து, 'சாவு முகட்டிலே நொடிகளைக் கணக்குப்பார்ப்பது வீரர்களுக்கு அழகன்று,' என்ற போர்க்களத்து அரிச்சுவடியைத் தவறியும் மறந்துவிடாமல், 'மரணம், மாவீரனுக்குத் தரப்படும் மலர்ச்செண்டு,' என்ற மனோபலத்தோடு, படையில் அணி-வகுத்துச்செல்வதைப் பிறந்தபொன்னாட்டிற்குச் செய்யும் கடமையாக அந்த வீரர்கள் கருதினார்கள்.

அவர்களுள் எதிரியின் தாக்குதலால் எழில் இழந்தோர் எத்தனையோ பேர்! எலும்பு முறிந்தோர் கணக்கில் அடங்கார்! கரம் இழந்தோர், கண்ணற்றோர், கால் ஒடிந்தோர் – இந்தத் தாயகப் பாதுகாப்பிற்குக் காணிக்கை தந்த – தங்கங்கள் அல்லவா?

அந்த வீரர் தம் உணர்ச்சியைப் புகழ்வதும், போற்றுவதும் நமக்குப் பெருமை தரும் செய்திகள் அல்லவா?

இந்திய மண்ணின் வீரம், என்றைக்கும் விலை போனதில்லை. தமிழ் மண்ணின் வீரமும் தனிச் சிறப்பு வாய்ந்தது. வீரருக்கு வணக்கம் செலுத்துவதும் வாழ்த்துரைப்பதும் நமது பண்பாடு. வீரமறவரைப் போற்றுவதற்கென்றே பாடப்பட்ட பாடல்களைப் புறநானூறு காட்டும். பெண்டு பிள்ளை, பெற்ற தாய் தந்தையர் அனைவரையும் பிரிவதற்குத் துணிந்து,

'உயிர் வெல்லமன்று !
உன்மத்தர் ஆட்சிக்கு இஃது இடமும் அன்று !'என சூளுரைத்து,
'திரும்புகிறேனோ இல்லையோ !
திரும்பாவிடில்,
மறவனைப் பெற்ற மகிழ்ச்சியைப்
பெற்றோர் பெறுக !
மாவீரனை மணந்த மகிழ்ச்சியை
மனைவி பெறுக !'

என விடைபெற்றுச் சென்ற காளையர் நாடுகாக்கும் போரிலே எத்தனையெத்தனை பேர் ! அவருக்கெல்லாம் நன்றி சொல்லுவது நம் கடமையன்றோ?

அந்தக் கடமையினை நிறைவேற்றும் நாள்தான், கொடிநாள்; சாவுக்– கஞ்சா வீரர்கள், சரித்திர முகட்டில் ஏற்றி வைத்த வெற்றிக்கொடி நாள்.

வீணரை முறியடித்து, வெறியரைத் திணறடித்து, 'வெற்றி! வெற்றி!' என்று முழங்கிய நம் சகோதரருக்கு நம் அன்பைக் காட்டும் நாள்.

இந்நாளில், கொடியேற்றி, நாம் வழங்கும் காணிக்கை, குன்றின் மேலிட்ட விளக்காகும்.

நமது வாழ்வு, நமது மகிழ்ச்சி, நமது சுதந்தரம், நமது நாட்டுரிமை, பாதுகாப்பு, அனைத்துக்கும் அந்த வீரர் அல்லரோ பொறுப்பேற்றனர் ! நம் குடிகாக்கப் போரிட்டவருக்கு இந்தக் கொடி நாளில் நன்றி செலுத்துதலே முறை.

எல்லை காத்தனர்; தொல்லை தவிர்த்தனர். ஆனால் அவர் வாழ்வில், துன்பத்திற்கோர் எல்லையில்லை; தொல்லைக்கோர் அளவில்லை !

அந்தத் துயர் துடைக்கும் பணியில் நாமெல்லாம் ஈடுபடுதல் ஒன்றே– அவருக்கு மட்டுமன்றி, நாட்டிற்கே நாம் செலுத்தும் பெருமையுடைய காணிக்கையாம்.

கொடிய போர்க்களத்தில் தாம் இருந்தாலும் தம்மை நம்பியிருக்கும் குடும்பத்தைக் காப்பாற்ற நாடு இருக்கிறது, நாமெல்லாம் இருக்கிறோம் என்ற நம்பிக்கையில்தானே போர்க்களம் நோக்கிப் புறப்பட்டனர், புலி நிகர் வீரர்?

அவர்தம் நம்பிக்கையை நாசமாக்கலாமா? மாசுமருவற்ற அந்த மாணிக்கங்களின் குடும்பத்தில் வறுமை எனும் தூசு படரலாமா?

சிந்திப்பீர், செயல்படுவீர்;
களம் கண்ட வீரர்தம் குடும்பம்
களிப்புடன் வாழ்ந்திடக் காணிக்கை தந்திடுவீர்.
கொடிநாள்,
குமுறும் எரிமலையாய்க் கனன்றெழுந்து
கொடியவர்களை மாய்த்த வீரர்களை நினைக்கும் நாள் !
அவர்தம் வாழ்வு சிறக்க,

அவருள் பலர் விட்டுப் பிரிந்த குடும்பங்களில் விளக்கு எரிய, அவரை நம்பியிருந்த குழந்தை குட்டிகளின் எதிர்காலம் பொன் மயமாக உதவிடுவீர்; இந்நாளில்.

'நிதி மிகுந்தவர், பொற்குவை தாரீர் ;
நிதி குறைந்தவர், காசுகள் தாரீர்;
விதியினை எதிர்த்து வீரம் விளைத்த
தீரர்தம் குடும்பம், கதியில்லையெனக்
கதறி அழவிடாது கைகொடுப் பீரே!'

மூலம் : தமிழ்பாடநூல் – பத்தாம் வகுப்பு (ஆ), 1971
[புதியபாடத்திட்டத்தின்படி] உரைநடைப்பகுதி, எண் : 6
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்


* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – பாடவரிசைப் படி (Note on Vocabulary)

| | | |
|---|---|---|
| கொடிநாள் (n) | – | flag day |
| கொண்டாடு (v) | – | to celebrate (a festival, birthday, etc) |
| கொணரல் (n) | – | கொண்டு வருதல் |
| நினைவு (n) | – | ஞாபகம் ; remembrance. |
| கொடும்பனி (n) | – | (கொடிய குளிர் தரும்) கடுமையான பனி; snow- giving / terrible chillness |
| கொடிய குளிர் | – | கொடிய (உயிருக்கு ஆபத்தை விளைவிக்கக் கூடிய) குளிர் terrible cold; unbearable chill |
| திரணமாக | – | ஒரு பொருட்டாக (contextual) |
| தாக்கு (v) | – | assault; attack (with weapons) |
| குண்டு மழை (n) | – | (warfields with) raining bullets (metaphorical) |
| பொழி ; பொழியும் களங்கள் | – | pour down or fall heavily / shower on: (of rain, snow etc.); shed (light) (of moon) |
| (போர்க்)களம் | – | (war) field |
| உலா (n) | – | ஊர்வலம், பவனி; procession |
| புனித (பூமி) | – | holy (land) |
| மண் | – | earth; soil |

| | | |
|---|---|---|
| அன்னியர் ஆதிக்கம் | – | dominance of foreigners. |
| ஆதிக்கம் (n) | – | அதிகாரம் மேலோங்கிய நிலை; dominance, power |
| அங்குலமளவும் | – | ஓர் அங்குலம் அளவு கூட; even an inch of measurement |
| அன்னை(பூமி) | – | தாய்நாடு ; motherland |
| தோன்றிட விடோம் | – | தோன்றுவதற்கு விட மாட்டோம் ; (we) don't allow it to occur. |
| சூளுரை (n) | – | சபதம் ; தீர்மானமான முடிவு; oath; vow |
| சுடர் முகம் தூக்கினர் | – | ஒளி மிகுந்த முகத்தை உயர்த்தினர் |
| சுழலும் வாளை ஏந்தினர் | – | சுழலும் தன்மையுடைய போர் வாளை உயர்த்திய நிலையில் தாங்கி நின்றனர் |
| சுற்றமும் சுகமும் மறந்தனர் | – | தங்கள் உறவினர்களையும் சுகத்தையும் மறந்து இருந்தனர் |
| சுதந்திர மண்ணைக் காத்திட துடித்தனர் | – | (they were) anxious to protect the land of freedom |
| களம் சென்று (vp) | – | poetic usage of களத்துக்குச் சென்று ; having gone to the war field |
| உளம் வெந்து (vp) உள்ளம் வெந்து (vp) | – | by getting the mind boiled |
| தழுவிக்கொள் (v) (தழுவிக் கொள்கிறாள்) | – | (she) embrace |
| தோள் தட்டி (vp) | – | beat the shoulder in order to express the anger or proud |
| மாம்பழக்கன்னம் (simile) | – | mango like cheek (here, sweet cheek) |
| முத்தம் ஈந்து (vp) | – | (உதட்டை பதித்து) முத்தம் கொடுத்து ; by giving kiss. |
| மறவன் | – | வீரன் ; brave man; soldier |
| கடும்(பயணம்) | – | அளவுக்கு அதிகமான / வேதனை மிகுதியான (பயணம்) ; difficult & tiresome (journey) |
| சாவின் வாய்க்குள்ளே | – | in the death trap |
| எத்துணை | – | எவ்வளவு |
| துணிச்சல் | – | எதிர்கொள்ளும் தன்மை ; தைரியம் ; brave; how much boldness / guts |
| மகிழ்ச்சி | – | களிப்பு / சந்தோஷம் ; joy / happiness |

குண்டு பாயுமோ! – (will the) bullets pierce!

விமானம் தாக்குமோ ! – (will the) planes attack!

டாங்கிப்படை மோதுமோ! – (will the warfare) tanks hit / dash!

மண்டையோடு (n) – உறுதியான எலும்புகளுடைய தலைப் பகுதி; the hardest part of the head, skull

முத்தம் இடு – kiss

முன்னேறு (v) – go ahead; claim up

முரசு (n) – பெரிதாக இருக்கும் ஒரு தோல் கருவி ; a kind of drum used for royal proclamation

முரசொலி (n) – the sound of the (royal) drum

நெஞ்சுரம் (நெஞ்சு + உரம்) – எதற்கும் கலங்காத மனவலிமை ; strong will

சாவு முகடு (n) – peak of death (lit.); verge of death

நொடிகள் – minutes

அழகன்று (அழகு + அன்று) – அழகு அல்ல

போர்க்களத்து அரிச்சுவடி – basics / fundamentals of war field

மரணம் (n) – சாவு; இறப்பு ; death

மாவீரன் – அதிக வீரமுள்ளவன்; soldier with more bravery

மலர்ச் செண்டு – (கட்டப்பட்ட) மலர்க் கொத்து ; bauquet of flowers

மனோபலம் – மனவலிமை, ஆற்றல், சக்தி ; mental strength.

படை (n) – பயிற்சி பெற்ற வீரர்களின் தொகுதி ; army, force

அணிவகு (cv) – (திட்டத்தின் அல்லது கொள்கையின் அடிப்படையில் ஒன்றுபடும்) குழுவினை வகு; குழுவினை உருவாக்கு; line up (on certain strategy)

பிறந்த பொன்னாடு – the golden country (where) one was born

எதிரியின் தாக்குதல் – the attack of enemies

எழில் இழந்தோர் – அழகு இழந்தோர் ; those who lost their charm

எத்தனையோ பேர் – many persons

எலும்பு முறிந்தோர் – those who got their bones dismembered

கணக்கில் அடங்கார் (poetic) (கணக்கில் அடங்காதவர்கள்) – innumerable (persons); those who are unaccountable

கண்ணற்றோர் (n) – பார்வையை இழந்தவர்கள்; those who lost their eyes

| | | |
|---|---|---|
| கால் ஒடிந்தோர் | – | கால் இழந்தவர்கள்; those whose leg has broken or fractured |
| பாதுகாப்பு (n) | – | தீங்கு நேராமல் தடுக்கும் காவல், கண்காணிப்பு; protection ; security |
| காணிக்கை (n) | – | பக்தி அல்லது மரியாதையின் அடையாள–மாக செலுத்தும் பணம் அல்லது பொருள் ; offering (in cash or kind to a deity) |
| வீரம் | – | heroism ; bravery |
| வீரன் | – | braveman, soldier |
| வணக்கம் செலுத்துவது | – | மரியாதை காட்டுவது; the act of paying respect |
| விலை போனதில்லை | – | have not salable (literal); not went useless |
| வாழ்த்துரைப்பது | – | the act of giving felicitations / congratulations / blessings |
| வீரமறவர் (n) | – | soldier with bravery |
| பெண்டு பிள்ளை (n) | – | (பொதுவாக செய்யுள்களில்) பெண்களும் குழந்தைகளும் ; (usually in poetry) women and children |
| பெற்ற தாய் (n) | – | (பிள்ளைகளைப்) பெற்ற தாய் |
| துணிந்து (vp) | – | (தயக்கமில்லாமல் செய்ய) தைரியம் கொண்டு ; having dared (to do) |
| வெல்லம் (n) | – | (கரும்புச் சாற்றினால் தயாரிக்கப்படும் கட்டியான) இனிப்புப் பொருள் ; jaggery |
| உன்மத்தர் (n) | – | வெறிபிடித்தவர்கள். (உன்மத்தம் – உணர்ச்சியின் உக்கிரநிலை; வெறி ; frenzy); வெறியர்கள். |
| சூளுரைத்து (vp) | – | சபதம் செய்து ; taking a vow |
| மாவீரனை மணந்த மகிழ்ச்சி | – | happiness of having married a hero / braveman |
| விடைபெறு (v) | – | (பிரிந்து செல்லும் ஒருவர்) 'போய் வருகி–றேன்' எனக்கூறுதல் ; taking leave of some one) |
| காளையர் | – | ஆடவர்; இளைஞர்; வாலிபர் ; youth (metaphoric) |
| கடமையன்றோ! (கடமை + அன்று + ஓ !) | – | அடிப்படையாக ஆற்ற வேண்டிய பொருப்பு அல்லவோ!; is it not the duty ! |
| சாவுக்கஞ்சா | – | சாவு+க்கு+அஞ்சா(த) ; இறப்பதற்கு அஞ்சாத; not afraid of death |
| சரித்திரமுகடு (n) | – | சரித்திரம் + முகடு ; the peak of history; [(மலை) முகடு ; உச்சி ; peak, top (of mountain)] |

| | | |
|---|---|---|
| ஏற்றி வைத்த (வெற்றிக் கொடிநாள்) | – | the day of hoisting (the victory flag) |
| வீணரை முறியடி | – | உபயோகம் இல்லாதவரை தோல்வி அடையச் செய் ; defeat the useless chap (here, enemies) |
| வெறியரைத் திணரடி (n) | – | மூர்க்கமாகச் செயல்படுபவரைத் தவிக்கவிடு/ திண்டாடவிடு ; make the mad fellows to suffer |
| முழங்கிய (நம் சகோதரர்) | – | பேரொலி எழுப்பிய (நம் சகோதரர்கள்); (brothers who) roared; rumbled |
| குன்றின் மேலிட்ட விளக்கு | – | (சிறிய) மலை உச்சியின் மேல் வைத்த விளக்கு ; the lamp / light kept on the top of a hill |
| (வீரர்) அல்லரோ | – | (வீரர்)அல்லர்+ஓ ; (வீரர்) அல்லர் – உயர்திணையில் (தன்மையிலும் படர்க்கையிலும்) ஆண்பால் எழுவாய்க்கு உரிய எதிர்மறை முற்று ; a negative verb concord to the human masculine (first or third person) subject |
| குடி காக்க | – | குடி + கா + (inf.); to protect the citizens |
| முறை(n) | – | இப்படி, (இந்தத் தன்மையில்) இருக்க வேண்டும் என்ற ஒழுங்கு ; the manner (in which we have to act); proper way. |
| எல்லைகாத்தனர் | – | கா(v) – பாதுகாத்தல் ; (they) protected the boundary or border |
| தொல்லை தவிர்த்தனர் | – | தொந்தரவு / துன்பம் நிகழாதவாறு பார்த்துக் கொண்டனர் ; devoid the difficulties |
| ஈடுபடுதல் (n) | – | (ஒரு செயலில்) முனைதல் ; getting involved |
| புலிநிகர்(வீரர்) | – | புலி + நிகர் (வீரர்); புலிக்கு இணையான (வீரர்) ; tiger like (soldiers) |
| நாசமாக்கலாமா? (நாசம் + ஆக்கலாமா ?) | – | பேரழிவு ஏற்படுத்தலாமா ? ; can it be destroyed ? |
| மாசு மரு | – | அழுக்கு; குறைபாடு |
| மாசுமருவற்ற அந்த மாணிக்கங்கள் (metaphorical) | – | (நடத்தையில்) எந்தவித களங்கமும் இல்லாத (விலையுயர்ந்த) சிவப்புக்கற்களாய் இருப்பவர்கள் |
| வறுமை எனும் தூசு (metaphorical) | – | ஏழ்மையாகிய புழுதி ; poverty is shown as a dust |
| படரலாமா? | – | சூழலாமா? ; can sorround ? |
| குமுறும் எரிமலை | – | rumbling / roaring volcano |

| | | |
|---|---|---|
| கனன்றெழு (கனன்று + எழு) | – | to get up with angry (usually by warriors on hearing the wardrum at the battle field) |
| மாய்த்தல் | – | உயிரைப் போக்குதல்; the act of destroying; killing |
| நினைக்கும் நாள் | – | the day of rememberance |
| மாய்த்த (வீரர்) | – | மாய் + (past); (soldiers who) destroyed (enemies) |
| குழந்தை குட்டிகள் | – | 'குழந்தை' என்பதோடு இணைந்து வரும் சொல் 'குட்டிகள்' ; children (idiomatic usage) |
| பொன்மயம் (n) | – | embodiment of gold |
| நிதி மிகுந்தவர் | – | செல்வம் / பணம் நிறைந்தவர் ; wealthy / monied people |
| பொற்குவை (n) (தாரீர்) (lit.) | – | பொற்காசுகளின் குவியல் (தாருங்கள்); (give) generous gift |
| காசு (கள்) | – | சில்லறை நாணயங்கள்; coins |
| விதி (n) | – | நியதி, ஊழ் ; destiny, fate |
| தீரர் / தீரம் (n) | – | தீரர் – பயப்படாமல் எதையும் துணிந்து செய்யும் மனவலிமையுடையவர்; one who is valiant; தீரம் – பயமில்லாமல் எதையும் செய்யும் மனவலிமை; bravery; courage |
| கதியில்லை என | – | (வாழ்க்கையில் ஒருவர் அடையும்) நிலைமை இல்லை என்று |
| கதறி அழவிடாது | – | சப்தமிட்டு அழும்படியான நிலைமைக்கு ஆளாக்காது |
| கைகொடுப்பீரே ! (கை கொடுப்பீர் + ஏ!) | – | உதவியாக இருங்கள் ; துணையாக இருங்கள்; extend (your) helping hands |

## ❑ பயிற்சி (Exercise)

*I அ. சரியான இணைச்சொல்லோடு பொருத்துக.*

| | | | |
|---|---|---|---|
| 1. | தூளுரை | அ. | குவியல் |
| 2. | குவை | ஆ. | சிகரம் |
| 3. | முகடு | இ. | மனவலிமை |
| 4. | திரணம் | ஈ. | சபதம்செய் |
| 5. | மனோபலம் | உ. | சிகரம் |

ஆ. இணைச் சொல் தருக.

| | | | |
|---|---|---|---|
| அறவே | – | கருது | – |
| வாள் | – | மறவன் | – |
| மரணம் | – | சுற்றம் | – |
| எழில் | – | உன்மத்தர் | – |
| பெண்டு | – | மணம் | – |

II. பெயர்ச் சொற்களாக மாற்றுக.

எ.கா. பார் – பார்வை
வீங்கு – வீக்கம்
கேள் – கேள்வி

| வினைச் சொல் | | பெயர்ச் சொல் |
|---|---|---|
| துணி | – | |
| தாக்கு | – | |
| ஈடுபடு | – | |
| தழுவு | – | |
| படி | – | |

III. பிரித்தெழுதுக.

அங்குலமளவும்; வாழ்த்துரைப்பதும்; போற்றுவதற்கென்றே;
மனோபலம்; நெஞ்சுரம்;

IV அ. ஒவ்வொரு மோனைத் தொடரையும் பின்பற்றி வேறு ஒன்றைச் சொந்தமாக எழுதுக.

சுடர் முகம் தூக்கினர் ;
சுழலும் வாளைக் கையில் ஏந்தினர் ;
சுற்றமும் சுகமும் அறவே மறந்தனர் ;
சுதந்திர மண்ணைக் காத்திடத் துடித்தனர்.

ஆ. ஒவ்வொரு எதுகைத் தொடரையும் பின்பற்றி, வேறு ஒன்றைச் சொந்தமாக எழுதுக.

1. எல்லை காத்தனர்; தொல்லை தவிர்த்தனர்.
2. எஞ்சிய வீரர்களை நெஞ்சுரம் கொள்ளச் செய்தனர்.
3. கண்ணைக் காப்பதிலும் அதிகக் கவலை
மண்ணைக் காப்பதிலே உண்டு அந்த மாவீரர்களுக்கு.

4. நிதிமிகுந்தவர் பொற்குவை தாரீர் ;
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர் ;
விதியினை எதிர்த்து வீரம் விளைத்த தீரர் தம் குடும்பம்,
கதியில்லை யெனக் கதறி யழவிடாது
கைகொடுப்பீரே !

V. *அடைப்புக்குள் உள்ளவற்றைப் பொருத்தமாக மாற்றிக் கோடிட்ட இடங்களை நிரப்புக.*

1. நமது வாழ்வு, நமது மகிழ்ச்சி, நமது சுதந்திரம், நமது நாட்டுரிமை, பாதுகாப்பு ———— அந்த வீரர் அல்லரோ ———— ! (அனைத்து, பொறுப்பு ஏல்)

2. கொடிய போர்க்களத்தில் தாம் இருந்தாலும் தம்மை நம்பியிருக்கும் குடும்பத்தைக் காப்பாற்ற நாடு இருக்கிறது, நாமெல்லாம் இருக்கிறோம் என்ற நம்பிக்கையில்தானே போர்க்களம் நோக்கிப் ———— புலிநிகர் ———— ? (வீரர், புறப்படு).

VI. *ஒவ்வொரு பாடப்பகுதியும் உணர்த்தும் கருத்தைச் சுருக்கமாகச் சொந்த வாக்கியத்தில் எழுதுக.*

1. கண்ணைக் காப்பதிலும் அதிகக்கவலை அந்த மாவீரர்களுக்கு மண்ணைக் காப்பதிலே உண்டு.

2. 'களம் சென்று வந்திடடா கண்ணே! என்
உளம் வெந்து போவதற்கு முன்னே!'
என்று தாய் தழுவிக் கொண்டாள், அவன் தன்தோள் தட்டிப் புறப்பட்ட போது; மழலை பொழியும் குழந்தையின் மாம்பழக் கன்னத்தில் முத்தமீந்து புறப்பட்டான் மறவன் கடும்பயணம்!.

3. 'எந்த நேரத்தில், எந்தப் பக்கமிருந்து எதிரியின் குண்டு பாயுமோ! விமானம் தாக்குமோ ! டாங்கிப் படை மோதுமோ !' என்றெல்லாம் கவலைப்படாமல், நாடு காக்கும் வீரர் களம் நோக்கி நடந்தனர், இரத்தக் கடலில் பயங்கர மூச்சு விட்டுக்கொண்டு மிதந்து செல்லும் வீரர்களின் மண்டையோடுகளை முத்தமிட்டபடி.

4. 'முன்னேறு நீ ! முன்னேறு நீ !' என்று முரசொலித்து, எஞ்சிய வீரர்களை நெஞ்சுரம் கொள்ளச் செய்து, 'சாவு முகட்டிலே நொடிகளைக் கணக்குப் பார்ப்பது வீரர்களுக்கு அழகன்று,' என்ற போர்க்களத்து அரிச்சுவடியைத் தவறியும் மறந்துவிடாமல், 'மரணம், மாவீரனுக்குத் தரப்படும் மலர்ச்செண்டு,' என்ற மனோபலத்தோடு,

படையில் அணிவகுத்துச் செல்வதைப் பிறந்த பொன்னாட்டிற்குச் செய்யும் கடமையாக அந்த வீரர்கள் கருதினார்கள்.

VII. *சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

*சுற்றமும் சுகமும்*
*தாய்தந்தையர்*
*பெண்டு பிள்ளை*
*குண்டு மழை*
*சுடர்முகம்*

VIII. *இரண்டு அல்லது மூன்று வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. ஏன் கொடி நாளைக் கொண்டாடுகிறோம்?
2. நாடுகாக்கும் வீரர்களின் வீரம் எப்படிப்பட்டது?
3. தமிழ்மண்ணின் வீரம் குறித்து புறநானூறு குறிப்பிடுவது யாது?

## ❑ இலக்கணக் குறிப்பு (Note on Grammar)

1.0 Rhymes and alliterations:

Rhymes and alliterations are widely used in this passage. The author is known for using such a style in his writing. This kind of usage is quite common in emotional speeches and writings.

1.1 எ.கா. 'வீணரை முறியடித்து, வெறியரைத் திணரடித்து, வெற்றி ! வெற்றி!!'
என்று முழங்கிய நம் சகோதரருக்கு நம் அன்பைக் காட்டும் நாள்.

It may be seen that the first sound that occurs in each word i.e., **வீணர், வெறியர்** and **வெற்றி** are causing a rhythem. Occurrences of such rhythms in words are called as **மோனை** 'monai' in Tamil.

1.2 எ.கா. 'களம் சென்று வந்திடடா கண்ணே ! –என்
உளம் வெந்து போவதற்கு முன்னே !'

Sometimes such a rhythm is caused by the second letter of each word viz., **ள** in **களம், உளம்,** etc. Such words are called ' **எதுகை**'. 'ethukai' in Tamil.

2.0 The doubt Marker /-oo/

The clitic /-oo/ can be added to any noun form occurring in a sentence to indicate the uncertainty or doubtfulness about the circumstances or the events being talked about.

எ.கா. : எத்தனையோ ! ; கண்ணகியோ ! ; மாதவியோ !

2.1 The clitic /-oo/ can also be seen as added to two consecutively occuring verbs in a sentence to indicate the doubtfulness about the happening irrespective of it being positive or negative.

எ.கா. எந்த நேரத்தில் எந்தப் பக்கமிருந்து எதிரியின் குண்டு பாயுமோ! விமானம் தாக்குமோ! டாங்கிப்படை மோதுமோ!

எ.கா. 'திரும்புகிறேனோ! இல்லையோ!' என்று விடைபெற்றுச் சென்ற காளையர் எத்தனைபேர்?

2.2 When it occurs with personal pronominal termination the fact being conveyed gets fully established.

எ.கா. நமது வாழ்வு ... பாதுகாப்பு அனைத்துக்கும் அந்த வீரர் அல்லரோ பொறுப்போற்றனர்!

3.0 Emphatic /-ee/ and /-taan/

There are two emphatic particles in Tamil, /-ee/ and /-taan/. Both are giving the same meaning as 'only', 'itself', 'just' etc. /-ee/ is mostly found used in comparable contexts whereas /-taan/ is in absolute contexts i.e. no comparision.

3.1 எ.கா. வீரமறவரைப் போற்றுவதற்கென்றே பாடப்பட்ட பாடல்களைப் புறநானூறு காட்டும்.

அவருக்கு மட்டுமின்றி நாட்டிற்கே நாம் செலுத்தும் பெருமையுடைய காணிக்கையாம். அந்த கடமையினை நிறைவேற்றும் நாள்தான் கொடிநாள்.

3.2 Sometimes both of them are found as used in a combined form which is meant to give more emphasis on information being conveyed.

எ.கா. நாமெல்லாம் இருக்கிறோம் என்ற நம்பிக்கையில் தானே (தான் +ஏ) போர்க்களம் நோக்கிப் புறப்பட்டனர்.

4.0 Optative form of verbs like வருக ; பெறுக, etc., are used to express wish, desire, command, etc. (எழுவாய்க்குத் தகுந்தபடி மாற்றம் பெறாத வினைமுற்று வகை)

எ.கா. மாவீரனை மணந்த மகிழ்ச்சியை மனைவி பெறுக!.

5.0 'itu' இடு.

5.1. When added to some nouns, it serves as a verbalizer in the sense of 'make' or 'do'.

எ.கா. ஓலமிடு ! முறையிடு!

5.2. When added to main verb it indicates an elevated style.

எ.கா. வந்திடுவீர் ; தந்திடுவீர் ;
தம்பீ! வீறு கொண்டு எழுந்திடு !
களம் கண்ட வீரர் தம் குடும்பம் களிப்புடன் வாழ்ந்திட
காணிக்கை தந்திடுவீர்.
விட்டுப் பிரிந்தோரின் வீட்டில் விளக்கெரிய உதவிடுவீர்.

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note onLanguage Style)

தனிநிலை, கூட்டுநிலை, மற்றும் கலவை வாக்கியங்கள் அனைத்தும் கலந்து, இலக்கிய நயத்துக்கான எதுகைமோனையுடனும் கட்டுப்பாடற்ற சொல்வரிசையுடனும் (free word order) காணப்படுவது மு. கருணாநிதியின் மொழிநடை. நடையியலார் கண்ணோட்டத்தில் இந்நடை கவிதை நடை (poetic style) என்று குறிக்கப்படுகிறது. விளியாகப் பயன்படுத்தும் வினைமுற்றுச் சொற்களுடன் 'இடு' விகுதி சேர்த்து 'தந்திடுவீர் !' 'உதவிடுவீர் !' என முடிப்பது இவரது நடையின் இன்னொரு சிறப்புக் கூறாகும். இதை உயர்நடை (elevatedstyle)என்று கூறுவர். ஒவ்வொரு தொடரையும் தனித்தனியே பிரித்தெழுதி அதன் மூலம் ஒருவகையான விளைவினை ஏற்படுத்தும் சித்திர நடை (graphic style) கூறுகளையும் இவருடைய நடையில் ஆங்காங்கே காணலாம்.

# 8. அந்த மாணவர்களுக்கு மட்டும்

### த. ஜெயகாந்தன்

[2.5.34 அன்று கடலூரில் பிறந்த ஜெயகாந்தன் ஒரு சிறந்த எழுத்தாளர், கட்டுரை ஆசிரியர். எதையும் புரட்சிகரமாகப் படைக்கக் கூடிய இவர் 'உதயம்' (1954), 'ஒரு பிடி சோறு' (1958), 'இனிப்பும் கரிப்பும்' (1960) போன்ற சிறுகதைகளையும் மற்றும் 'வாழ்க்கை அழைக்கிறது' (1957) போன்ற நாவல்களையும் எழுதியுள்ளார். 'உன்னைப் போல் ஒருவன்' (குடியரசுத் தலைவரின் விருது பெற்றது), 'யாருக்காக அழுதான்' ஆகிய திரைப்படங்களையும் இவர் எடுத்துள்ளார் ]

நான் ஒரு கல்லூரிக்கு, மாணவர்கள் ஏற்பாடு செய்த விழாவொன்றில் கலந்து கொள்ளச் சென்றிருந்தேன். ஒரு கல்லூரிச் சூழ்நிலைக்குப் புறம்பான, தகாத நறுமணம் ஒன்று அங்கு வீச நுகர்ந்தேன். எனது அதிர்ச்சியை அங்கு நான் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அது குறித்து நான் ஏதும் அங்கே பேசவில்லை; அப்படிப் பேசுவது அவர்களது ரகசியத்தை வெளிக்கொணர்ந்த அநாகரிகமாகும். தவறு செய்து கொண்டிருப்பவனிடம் உபதேசம் செய்து கொண்டிருக்கலாகாது. எப்படியேனும் அந்தத் தவறிலிருந்து– அவனை விடுவிக்க வேண்டும். அல்லது அதனைச் சகித்துக்கொள்ள வேண்டும். அப்படிச் சகித்துக்கொள்வது அதை அனுமதிக்கிற போக்கு ஆகி விடக் கூடாது. அந்தக் கல்லூரியின் பெயரையோ நான் கலந்து கொண்ட குறிப்பிட்ட நிகழ்ச்சியையோ இப்போதும் கூடக் காட்டிக் கொடுக்கும் உத்தேசம் எனக்கு இல்லை.

சரி. 'மாணவர்களே குடிக்காதீர்கள்' என்று குடிக்கிற, குடித்துவிட்டு வந்திருக்கிற இளைஞர்களிடம் சொல்வது மிகவும் கீழ்த்தனமான பேச்சு. அதற்குப் பலன் இராது. எவ்வளவு விளம்பர நிர்பந்தங்கள் செய்தாலும் எல்லா மாணவர்களையும் குடிக்க வைத்து விடவும் முடியாது. 'குடிக்காதீர்கள்' என்ற புத்திமதியைக் குடிக்கிற மாணவர்கள் நிறையவே கேட்டிருக்கிறார்கள். அதற்காக அவர்களைத் தண்டிப்பதோ, கல்வி நிறுவனங்களைவிட்டு விலக்குவதோ, கடுமையான நடவடிக்கை எடுப்பதோ மிகவும் சரியான காரியமேயாகும். ஆனால் அதை செய்ய இங்கு எவருக்கும் சக்தியில்லை, தகுதியும் இல்லை. அதன் விளைவுகள்

இன்னும் கடுமையானதாக இருக்கும் என்று நமது கோழைத்தனமான கல்வி அமைப்பு முறையே தொடை நடுங்கும்.

நான் அந்த மாணவர்களிடமும் எல்லா மாணவர்களுக்கும் சொல்ல விரும்பியதை இங்கே சொல்லுகிறேன்.

எனக்கும் மதுவோடு பழக்கம் உண்டு. ஆனால், இது மாணவர்கள் நடத்துகிற விழா. இந்த விழாவுக்குப் போய்விட்டு வந்தபின்னர் நான் மது அருந்தலாம் என்று எண்ணி உங்கள் மத்தியில் பேச வந்திருக்கிறேன். நீங்கள் எப்பொழுதுமில்லாமல் இப்பொழுது மட்டும் மது அருந்திவிட்டு வருகிறீர்களே!

நான் எனது கடமைகளைச் செய்யும்பொழுது மது அருந்துவ-தில்லை. நீங்கள் கல்வி பயில்கின்ற இடத்தில் மதுஅருந்தி வரலாமா? மதுவில் இருக்கின்ற நல்ல அம்சமும் தீய அம்சமும் அதன் மயக்கமே! மயக்கத்தில் படிக்கிற பாடம் மார்க்கு கூட வாங்கித் தராது. உழைத்தவன் ஓய்வு பெறுகிறபொழுது கொஞ்சம் மதுவருந்திச் சுகம் பெறுவது பாபமோ, குற்றமோ அல்ல, சமூகம் அங்கீகரிக்குமெனில்.

மதுவை நமது சமூகம் அங்கீகரித்து இருக்கிறது. இதை ஏதோ அரசுமீது சுமத்துகிற குற்றமாக ஓர் அரசியல்வாதி போல நான் இங்கு எடுத்துச் சொல்ல வரவில்லை. நமது ஹிந்து சமுதாயமே, நமது தமிழ்ப் பண்பாடே, உலகமே மதுவை அங்கீகரித்திருக்கிறது. ஆனால் யாருக்கு? எந்த இடத்தில்? எப்பொழுது? என்றெல்லாம் வரைமுறை இல்லையா? மயங்கியமனம் இந்த வரைமுறைகளை மீறுவதில்லை. மதுவை அருந்து-வதற்கு முன்னாலேயே இவர்களுக்கு அறிவுமயக்கம் ஏற்பட்டிருக்கிறது என்றுதான் இதற்குப் பொருள். மனப் பலவீனத்திற்காக மதுவ-ருந்துகின்றவன் இழிநிலையடைவான். 'சந்தோஷத்திற்காக' 'ஆரோக்கி-யத்துக்காக' என்று கூறி ஒரு நிவேதனம் மாதிரி மதுவருந்துவதே மரபு. இதனை எல்லாச் சமூகமும் எல்லா நாகரிகமான மனிதர்களும் காப்பாற்ற வேண்டும்.

மனிதன் உடலெடுத்தது ஆத்ம பரிசோதனைக்காகத்தானே தவிரப் பிரேத பரிசோதனைக்காக அல்ல. பிரேதப் பரிசோதனை பிறரால் செய்யப்படுவது. ஆத்மபரிசோதனை தமக்குத்தானே செய்து கொள்வது. ஒருவன் தனக்குத் தானே பிரேதப் பரிசோதனை செய்து கொள்வ-தென்றால் அது தற்கொலையாகும். இதையெல்லாம் நான் சொல்லுவது

குடிக்கிறவர்களுக்கு நாகரிகமாகக் குடிக்கத் தெரிய வேண்டும் என்பதற்காகவே. மனிதனின் ஆத்ம பரிசோதனைக்கு அது தடையாக விடலாகாது.

மதுவை மறுக்கிறவர்களை நான் அதிகம் மதிக்கிறேன். அவர்களுக்குக் குடிக்கக் கற்றுத் தருவதோ, மதுவைச் சிபாரிசு செய்வதோ என்னுடைய நோக்கமல்ல.

ஏசுநாதர் வரலாற்றில் அந்தக் கடைசி இரவு (Last supper) விருந்தில் மது பரிமாறப்பட்டதாக விவிலியம் சாட்சி சொல்லுகிறது.

'பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்' – ஆனால் சிலுவைத் தண்டனைக்குத் தீர்க்கப்பட்ட பிறகு ஏசுநாதர் பாரச்சிலுவையைத் தோளில் தாங்கி ஜெருசலம் வீதிகளில் சாட்டை அடியால் வழிநடத்தப்பட்டுச் செல்கையில் ஜெருசலத்தைச் சேர்ந்த பெண்மக்களின் மரபுப்படி பெரிய பெரிய கோப்பைகளில் சிலுவைக் குற்றவாளிகளுக்கென்றே பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்ட மதுவை வழங்க, எல்லாப் பாவிகளும் அதைக் கடவுளின் கருணையேபோல் மதித்து அதில் முகம் கவிழ்ந்து மாந்துகின்றனர்.

அறுவை சிகிச்சைக்கு முன்னால் உடல் மரத்துப்போவது போல், சிலுவையின் வேதனையை ஆத்மாவுக்குச் செல்ல வொட்டாமல் தவிர்ப்பதற்கு ஜெருசலப் பெண்கள் மனிதர் மீது கொண்ட அன்பினால் கைக்கொண்ட அற்புதமான ஒரு தந்திரோபாயம் அது.

ஏசுநாதரின் முகத்துக்கு நேரே அந்தப் பெண்கள் கண்ணீரோடும் கனிவோடும் அதனை ஏந்தி நிற்கையில் அவர், 'நான் இதனைக் குடிக்க முடியாது' என்று முகம் திருப்பி மறுதலித்துவிடுகிறார்.

தன்னை மறக்கவோ, தன்னை இழக்கவோ குடிப்பவர்கள் நாகரிகமானவர்கள் அல்லர்.

வள்ளுவரும் காந்தியும் குடியின் கேடுகளைச் சொல்லியும் 'குடிக்காதீர்கள்' என்று பெரியவர்கள் ஆணையிட்டும், அரசு சட்டம் போட்டுத் தண்டித்தும்... எல்லாம் ஆனபிறகும் இங்கே குடிக்கிற என்னிடமும் உங்களிடமும் வந்து 'குடிக்காதே' என்று சொல்லுகிறவர்கள் நமது நகைப்புக்கு ஆளாவார்கள் என்று அஞ்சியே குடிக்கிறவர்களுக்கும் குடிக்கவிரும்புகிறவர்களுக்கும் இதனை நான் சொல்லுகிறேன்

முதலில் குடிக்கக் கற்றுக்கொள்ளுங்கள். குடித்தபிறகு செய்யத் தகுந்ததும், செய்யவேண்டியதுமான ஒரே காரியம் relaxation தான். இதற்குச் சரியான தமிழ் வார்த்தைகள் துணிவுறுதல், ஒய்வு கொள்ளுதல், கட்டுப்பாடுகளைத் தளர்த்திக் கொள்ளுதல் எனலாம். உடல் ரீதியாகவும் மன ரீதியாகவும் 'ரீலாக்ஸேஷன்' மேற்கொள்ளுதல். இதைப் பொது இடத்திலும், கடமையைச் செய்கிற போதும், எல்லார் முன்னிலையிலும் நாகரிகமானவர்கள் செய்யலாகாது; One should not relax in Public and must not relax while committed to a social responsibility.

இதைப் படிக்கிற மாணவர்கள் நான் குறிப்பிட்ட சம்பவம் நடந்தது 'நமது கல்லூரியிலா, வேறு கல்லூரியிலா?' என்ற வீண் ஆராய்ச்சியில் தயவுசெய்து ஈடுபட வேண்டாம். நான் குறிப்பிட்ட 'அந்த மாணவர்' களுக்காகவே இதனைப் பொதுவாகப் பகிரங்கபடுத்துகிறேன். இப்படிச் செய்ய வேண்டுவது எனது சமுதாய ஆன்மிகக் கடமை என்று நான் கருதுகிறேன்.

மூலம் : நூல் : சுதந்திரச் சிந்தனை, முதற்பதிப்பு, 1974 ஜனவரி [கட்டுரை எண் : 10]
பதிப்பகம் : கலைஞன், சென்னை – 17


* * * * * *

❑ **சொற்பொருள் குறிப்பு** – பாட வரிசைப்படி (Note on Vocabulary)

| | |
|---|---|
| சூழ்நிலை | – circumstances |
| புறம்பான (புறம்பு + ஆன) | – contrary or opposite |
| தகாத நறுமணம் | – improper fragrance |
| நுகர் (v) | – உணர் ; experience |
| அநாகரிகம் | – uncivilised |
| விடுவி (Tr. v) | – release ; set free |
| உபதேசம் | – teaching |
| சகித்துக்கொள் (v) | – tolerate |
| காட்டிக்கொடு | – (ஒரு நபரையோ அவர் இருக்கும் இடத்தையோ) தெரிவித்தல்; inform; pointout |

| | |
|---|---|
| உத்தேசம் | – மனத்தில் தீர்மானித்துள்ளது ; எண்ணம்; intention; proposal |
| குடி (v & n) | – drink (v & n) |
| கீழ்த்தனமான (adj) | – தரக்குறைவான, மோசமான ; mean (mentally) |
| புத்திமதி | – advice |
| விலக்கு (v) | – remove |
| நடவடிக்கை | – action |
| கோழைத்தனம் | – cowardness |
| தொடைநடுங்கு | – feel timid |
| மது | – liquor ; போதை தரும் பானம் |
| அருந்து (v) | – குடித்தல் ; drink (with relish) |
| அம்சம் | – [a typical or noticeable] feature |
| மயக்கம் | – சுய நினைவு அற்ற நிலை; intoxicated state |
| அங்கீகரி (v) | – recognise |
| சுமத்து (v) | – (குற்றம், பழி) கூறுதல் / (வழக்கு) தொடுத்தல் ; put the blame on |
| இழிநிலை (n) | – கீழ்நிலை ; degraded or disgraceful state |
| மனப்பலவீனம் | – மனம்வலுவில்லாதநிலை ; தளர்ச்சி ; debility or mental weekness |
| மரபு (n) | – tradition, established usage |
| நிவேதனம் (n) | – படைப்பு ; offering (usually to God) |
| பிரேதப் பரிசோதனை | – post mortem |
| ஆத்ம பரிசோதனை | – self analysis (introspection) |
| தற்கொலை (n) | – suicide |
| பரிமாறு (v) | – serve (food) |
| விவிலியம் | – கிறித்தவர்களின் வேத நூல் ; the Bible |
| பெயக்கண்டு (பெய், பெய்ய, பெய) | – pouring, found pouring |
| நஞ்சு (n) | – poison |

நயத்தக்க – சிறப்பான; விரும்பத் தகுந்த

பாரச்சிலுவை
(பாரம் + சிலுவை) – weight cross for crucification

சாட்டை (n) – whip ( used mostly by cart-man)

வழிநடத்து (v) – lead

குற்றவாளி – culprit, a person found guilty

பாவி (n) – பாவச்செயல் செய்தவர், sinner

கவிழ்ந்து (intr.v) – (படுத்தல் என்னும் வினையோடு) குப்புற; on one's stomach

மாந்து (v) – குடி

அறுவைச் சிகிச்சை – surgery ; treatment

மரத்துப்போ (v) – உணர்ச்சியற்றுப்போ, becoming numb

செல்லவொட்டாமல் – செல்ல அனுமதிக்காமல்; செல்லவிடாமல் ; not allowing or permitting

தந்திரோபாயம் (n)
(தந்திரம் + உபாயம்) – சாமர்த்தியமான வழிமுறை; புத்திக் கூர்மையுள்ள வழிமுறை ; technique

கண்ணீரோடும் கனிவோடும் – with tears and affection

இழ (v) – lose (v)

கேடுகளைச் சொல்லி (vp) – by informing the harm / damage

ஆணையிடு (v) – to issue order

நகைப்புக்கு ஆளாவார்கள் – (they) will face humiliation ; subjected to humiliation; to be laughed at

செய்யவேண்டியதுமான – (things which) require to be done

தணிவுறுதல் (n) – (பசி, கோபம் முதலியவை) குறைதல் ; (hunger, anger, etc) subside ; decrease

கட்டுப்பாடுகளைத் தளர்த்திக்
கொள்ளுதல் – the act of relaxing the restriction / control

பகிரங்கப்படுத்து (tr.v) – make known (to all); publicise

## ❑ பயிற்சி (Exercise)

I அ. *இணைச் சொற்கள் தருக.*

தகாத நறுமணம்
சகித்துக் கொள்
கோழைத்தனம்
தணிவுறுதல்
தண்டி
கீழ்த்தனமான
தொடை நடுங்கு
குடி
காட்டிக் கொடு
மாந்து (கின்றனர்)

ஆ. *தமிழிணைகள் தருக.*

1. உபதேசம்
2. சகித்துக்கொள்
3. உத்தேசம்
4. புத்திமதி
5. அங்கீகரி
6. பலவீனம்
7. சந்தோஷம்
8. ஆரோக்கியம்
9. நிவேதனம்
10. மாதிரி
11. ஆத்ம பரிசோதனை
12. பிரேதபரிசோதனை
13. நாகரீகம்
14. பிரத்தியேகமாக
15. ஆத்மா
16. தந்திரோபாயம்
17. நிர்பந்தம்
18. பகிரங்கம்

II அ. *கூட்டுவினைச் சொற்கள் (பெயர் + வினை) ஐ நந்தினை நினைவு கூர்ந்து எழுதுக.*

*எ.கா. ஆணையிடு, வழிநடத்து*

ஆ. *வினையடிகள் ஐந்தினைப் பாடப்பகுதியிலிருந்து எடுத்து அவற்றை வினையடிப் பெயர்ச்சொற்களாக மாற்றி எழுதுக.*

*எ.கா. நிகழ் – நிகழ்ச்சி ; நகை – நகைப்பு*

III. *பொருள் சிதைவின்றிப் பிரித்து எழுதுக.*

நிறுவனங்களை விட்டு

எப்பொழுதுமில்லாமல்

குற்றவாளிகளுக்கென்றே

குடிக்கிறவர்களுக்கும்

செய்ய வேண்டியதுமான

IV. *எ.கா.வில் உள்ளதுபோல் அடைப்புக்குள் உள்ளதைப் பொருத்தமான வினையாலணையும் பெயராக (Relative participial Noun) மாற்றிக் கோடிட்ட இடத்தை நிரப்புக.*

*எ.கா. தவறு ____ + இடம் உபதேசம் செய்து கொண்டிருக்கலாகாது. (செய்து கொண்டிரு).*
*தவறு செய்துகொண்டிருப்பவனிடம் உபதேசம் செய்து கொண்டிருக்கலாகாது.*

1. ———— ஒய்வு பெறுகிறபொழுது கொஞ்சம் மதுவருந்திச் சுகம் பெறுவது பாபமோ, குற்றமோ அல்ல, சமூகம் அங்கீகரிக்குமெனில். (உழைத்த)
2. மனபலவீனத்திற்காக ———— இழிநிலையடைவான். (மதுவருந்துகின்ற)
3. இதையெல்லாம் நான் சொல்லுவது ———— களுக்கு நாகரிகமாகக் குடிக்கத் தெரிய வேண்டும் என்பதற்காகவே. (குடிக்கிற)
4. குடிக்கிற என்னிடமும் உங்களிடமும் வந்து 'குடிக்காதே' என்று ————கள் நமது நகைப்புக்கு ஆளாவார்கள்... (சொல்லுகிற)

V. *எடுத்துக்காட்டு ஒவ்வொன்றையும் பின்பற்றி அதைப்போல வேறு ஒரு வாக்கியத்தைச் சொந்தமாக எழுதுக.*

*எ.கா. 1 : பாபமோ, குற்றமோ*
*உழைத்தவன் ஒய்வு பெறுகிறபொழுது கொஞ்சம் மதுவருந்திச் சுகம் பெறுவது பாபமோ குற்றமோ அல்ல.*

*எ.கா. 2 : யாருக்கு? எந்த இடத்தில்? எப்பொழுது?*
*உலகமே மதுவை அங்கீகரித்திருக்கிறது. ஆனால் யாருக்கு? எந்த இடத்தில்? எப்பொழுது? என்றெல்லாம் வரை முறை இல்லையா?*

*எ.கா. 3 : கற்றுத் தருவதோ, சிபாரிசு செய்வதோ என்னுடைய நோக்கம் இல்லை*
*குடிக்காதவர்களுக்கு குடிக்கக் கற்றுத்தருவதோ மதுவைச் சிபாரிசு செய்வதோ என்னுடைய நோக்கமல்ல.*

*எ.கா. 4 : மறக்கவோ இழக்கவோ*
*தன்னை மறக்கவோ தன்னை இழக்கவோ குடிப்பவர்கள் நாகரீகமானவர்கள் அல்லர்*

VI. *பொருள் சிதைவின்றிச் சிறுசிறு வாக்கியங்களாகப் பிரித்து எழுதுக.*

வள்ளுவரும் காந்தியும் குடியின் கேடுகளைச் சொல்லியும், 'குடிக்கா– தீர்கள்' என்று பெரியவர்கள் ஆணையிட்டும், அரசு சட்டம் போட்டுத் தண்டித்தும் எல்லாம் ஆனபிறகும் இங்கே குடிக்கிற என்னிடமும் உங்களிடமும் வந்து 'குடிக்காதே' என்று சொல்லுகிறவர்கள் நமது நகைப்புக்கு ஆளாவார்கள் என்று அஞ்சியே குடிக்கிறவர்களுக்கும் குடிக்க விரும்புகிறவர்களுக்கும் இதனை நான் சொல்லுகிறேன்.

VII. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக.*

1. மதுவில் இருக்கின்ற நல்ல அம்சமும் தீய அம்சமும் அதன் மயக்கமே.
2. மனிதன் உடலெடுத்தது ஆத்ம பரிசோதனைக்காகத் தானே தவிர, பிரேத பரிசோதனைக்காக அல்ல.
3. அதைக் கடவுளின் கருணைபோல் மதித்து அதில் முகம் கவிழ்ந்து மாந்துகின்றனர்.

VIII. *சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

விடுவிக்க வேண்டும்
எவ்வளவு நிர்பந்தங்கள் செய்தாலும்
பரிமாறப் பட்டதாக
தோளில் தாங்கி
வீதிகளில் சாட்டை அடியால் வழிநடத்தப்பட்டு
நகைப்புக்கு ஆளாவார்கள்
கட்டுப்பாடுகளைத் தளர்த்திக் கொள்

IX. ஐந்து வாக்கியங்களில் விடை எழுதுக.

1. மதுவின் பொது அம்சமாகக் கூறப்படுவது யாது ? அதை அருந்துவது பாபமோ குற்றமோ அல்ல என்று கூறப்படுவதன் பின்னணி என்ன?

2. ஆத்ம-பிரேத பரிசோதனைகளாக கட்டுரை ஆசிரியர் கருதுவன யாவை ? அவற்றின் நோக்கம் என்ன ?

3. நாகரிகமானவர்கள் செய்யலாகாது என்று கூறுவதன் மூலம் ஆசிரியர் உணர்த்துவது யாது ?

## ❑ இலக்கணக் குறிப்பு (Note on Grammar)

1.0 சொல்லிணைகள்

1.1 பாபமோ குற்றமோ அல்ல

1.2 கற்றுத்தருவதோ சிபாரிசு செய்வதோ நோக்கமல்ல.

1.3 தன்னை மறக்கவோ இழக்கவோ குடிப்பவர்கள் நாகரிகமானவர்கள் அல்லர்.

'பாபமோ குற்றமோ; கற்றுத்தருவதோ சிபாரிசு செய்வதோ; மறக்கவோ இழக்கவோ'- ஆகிய சொல்லிணைகளில் உள்ள ஒவ்வொரு சொல்லும் கிட்டதட்ட ஒரே பொருளையே உணர்த்துவதைக் கவனிக்கவும்.

'பாவமுமல்ல; குற்றமுமல்ல' என வரவேண்டிய இரண்டு தொடர்களையும் ஒன்றாகச் சேர்த்துப் 'பாபமோ குற்றமோ' என்று 'ஓ' விகுதியிட்டு எழுதலாம் என அறிக. அவ்வாறே 'கற்றுத்தருவது நோக்கமல்ல' 'சிபாரிசு செய்வது நோக்கமல்ல' ஆகிய இரு தொடர்களும் கற்றுத்தருவதோ சிபாரிசு செய்வதோ என 'ஓ' விகுதியிட்டு இணைத்து எழுதப்படுகின்றன. மறக்கக் குடிப்பவர்கள், இழக்கக் குடிப்பவர்கள் என்பவை 'மறக்கவோ இழக்கவோ குடிப்பவர்கள்' என்றாகும்.

2.0. உலகமே மதுவை அங்கீகரித்திருக்கிறது.

ஆனால் யாருக்கு? எந்த இடத்தில்? எப்பொழுது?

முழுமையற்ற பதிலைக் கொடுத்து, வினாக்களின் மூலம் மேலும் விளக்கம் கொடுக்க முயல்வது கட்டுரை எழுதுவதில் சிலர் கையாளும் உத்தி. மேலே எழுப்பியுள்ள வினாக்களுக்கு விடையளிப்பதன்மூலம் செய்தியின் முழுமையினை அறிய வாய்ப்புக் கிடைக்கிறதென்பதை உணர்க.

3.0 உபதேசம் செய்து கொண்டிருக்கலாகாது
ஆத்ம பரிசோதனைக்கு அது தடையாக விடலாகாது
எல்லார் முன்னிலையிலும் நாகரிகமானவர்கள் செய்யலாகாது

4.0 எல்லாப்பாவிகளும் அதைக் கடவுளின் கருணையே போல் மதித்து அதில் முகம் கவிழ்ந்து மாந்துகின்றனர்.

பாவி (n) - sinner ; polular usage in christianity

மாந்து (v)- (பசி, தளர்ச்சி போன்ற ஏக்கத்தால் முழுவேகத்துடன்) குடிப்பது

5.0 பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர் – குறள் 580 : கண்ணோட்டம்

– கொல்லும் விஷத்தைக் குடியென்று கொடுத்தாலும், அன்பால் அதைவாங்கிப் பருகிவிட்டு, அமைதியோடு இருப்பதுதான் சிறந்த பண்புடையோர் விரும்பும் செயலாகும்.
The cultured people will drink even the poison if it is served with love.

6.0 Defective verbs

The usage of defective verbs, both positive and negative, is quite common as seen from the list of phrases shown above.

6.1 ஆகிவிடக்கூடாது
வைத்துவிட முடியாது
குடிக்க முடியாது

6.2 விடுவிக்க வேண்டும்
சகித்துக் கொள்ள வேண்டும்
காப்பாற்ற வேண்டும்
குடிக்கத் தெரிய வேண்டும்

6.3 கொடுக்கும் உத்தேசம் இல்லை
பாபமோ குற்றமோ அல்ல
பரிசோதனைக்காக அல்ல
(என்னுடைய) நோக்கம் அல்ல

6.4 பலன் இராது
பழக்கம் உண்டு

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

கூட்டுவாக்கியங்களும் கலப்பு வாக்கியங்களுமே மிகுந்து காணப்படும் ஜெயகாந்தனின் மொழிப்பயன்பாட்டில் முடியும்–முடியாது, வேண்டும்–வேண்டாம், ஆகும்–ஆகாது போன்ற குறை வினைமுற்றுகளைக் கொண்டே பெரும்பாலான வாக்கியங்கள் முடிக்கப் பெறுவதைக் காணலாம். பேச்சு வழக்கில் உள்ளது போலவே பல ஆங்கிலத் தொடர்களும் சொற்களும் இயல்பாகக் கையாளப் படுகின்ற இவரது மொழிநடையை பெயர்ப்பு ,நடை

(code switching style) எனக் கருதுவர் நடையியலார். பேச்சுவழக்குச் சொற்களும் தொடர்களும் ஏராளம் கலந்திருப்பினும் இவரது மொழிப்பயன்பாடு குறிப்பிட்ட வட்டார வழக்கு எதையும் சாராமல் standard dialect உடன் கூடிய எழுத்து மொழியிலேயே அமைந்திருப்பதைக் காணலாம்.

# 9. கொல்லிமலை வீரன்

*ரா. பி. சேதுப்பிள்ளை*

*[ரா.பி. சேதுப்பிள்ளை திருநெல்வேலி நகரையடுத்த இராசவல்லிபுரத்தில் பிறந்தவர். இவர் சிறந்த வழக்கறிஞர்; தமிழ் மீது நாட்டங்கொண்டு தமிழ் பயின்று புலமை பெற்றவர். சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றினார். சிறந்த பேச்சாளராகவும், எழுத்தாளராகவும் விளங்கினார். 'சொல்லின் செல்வர்' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றவர். கம்பராமாயணத்தில் மிக்க ஈடுபாடு உடையவர். தமிழகம்—ஊரும் பேரும், ஆற்றங்கரையினிலே, வேலும் வில்லும், வழி வழி வள்ளுவர், கடற்கரையிலே, வேலின் வெற்றி, தமிழ் விருந்து, தமிழர் வீரம், தமிழின்பம் ஆகிய நூல்களையும் எழுதியுள்ளார்]*

சேரநாட்டிலே கொல்லி என்னும் மலையொன்று உண்டு. அம் மலை முன்னாளில் சேரகுல மன்னர்க்கு உரியதாய் இருந்தது. வளமார்ந்த அம்மலையின் சோலையில் செந்தேன் துளிக்கும்; செழும் பலாப் பழுக்கும். ஈசனருள் விளங்கும் அறைப்பள்ளி என்னும் திருக்கோயிலும், தீயவரை மருட்டி அழிக்கும் தெய்வப் பாவையும் அம்மலையில் உண்டு.

இத்தகைய கொல்லிமலையிலே குறுநில மன்னனாக வாழ்ந்தான் ஓரி என்ற பெயர் பெற்ற வீரன். வில்லாண்மையில் அவன் நிகரற்றவன். முடி வேந்தரும் அவனுதவியை நாடினர். அமர்க்களங்களில் அவன் வில்லால் மடிந்த வீரர் எண்ணிறந்தவர். காற்றின் வேகமும் கனலின் வெம்மையும் வாய்ந்த அவ்வில்லை 'வல்வில்' என்று புகழ்ந்தனர் வீரர்.

போர் ஒழிந்த காலத்தில் அவ்வீரன் வேட்டையாடிப் பொழுது போக்குவான். அவன் ஆடிய வேட்டையொன்று பாட்டில் அமையும் பெருமை பெற்றது! ஒரு நாள் வல்வில் எடுத்துத் தன்னந்தனியனாய்க் கொடிய விலங்குகள் உலாவும் கொல்லிமலைக் காட்டின் உள்ளே சென்றான் ஓரி. ஒரு பெரிய யானை அவன் கண்ணெதிர்ப்பட்டது. உடனே வல்வில் வளைந்தது; அடுகணை எழுந்தது; வேழத்தின் தலையில் வேகமாகப் பாய்ந்து வெளிப்பட்டது. பின்னும் விசையாகச் சென்று குறுக்கிட்ட ஒரு பெரும் புலியைக் கொன்றது. அதனையும் கடந்து ஒரு கலைமான் மீது பாய்ந்தது. மேலும் சென்று காட்டுப் பன்றியொன்றை வீட்டியது. அம்மட்டிலும் அமையாது புற்றிலே இருந்த ஓர் உடும்பின் மீது பாய்ந்து கடுஞ்சினம் தீர்த்தது.

அவ் வேட்டையைக் கண்டது ஒரு பாணர் கூட்டம். வியப்பும் திகைப்பும் உற்றது. "கொல்லிமலையில் இப்படிக் கொலை புரிந்தவன் எவன்?" என்று அறிந்து கொள்ள ஆசைப்பட்டது. "இவன் விளையாட்டின் பொருட்டு வேட்டையாடும் வீரனா? அன்றி விலைப் பொருட்டால் விலங்குகளைக் கொலை செய்யும் வேடனா? " என்று ஒருவரை ஒருவர் வினவினர்.

அப்போது வில்லாளன் அவர் நின்ற பக்கம் திரும்பினான். அவன் ஏற்றமும் தோற்றமும் அவர் கண்களைக் கவர்ந்தன. வண்ண மேனி; திண்ணிய தோள்; நறுஞ்சாந்தம் பூசிய பரந்த மார்பு; நெடிய கை; கொடிய வில்; கழல் அணிந்த கால்; ஏறு போன்ற நடை – இவற்றைக் கண்டனர் பாணர். "கொல்லிமலையாளும் கொடைவள்ளல் இவன்தானா?" என்ற எண்ணம் அவருள்ளத்தில் எழுந்தது. 'நாம் கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததோ' என்று அதிசயித்தார்.

அந்நிலையில் கொல்லிமலைச் சாரல் இன்னிசை யரங்கமாயிற்று. பாணரிடையே ஆர்வம் பெருகிற்று. முழவும் சிறுபறையும் முழங்கின; குழலும் யாழும் இயங்கின; இசைத் தழும்பேறிய கைகள் தாளமிட்டன. பாணர் தலைவன் பண்ணோடு ஒரு வண்ணம் பாடினான். அப் பாட்டை ஆர்வத்தோடு கேட்டான் வீரன். தமிழிசை கேட்டு மனந்தழைத்தான். பாட்டை முடிக்கும் பொழுது, "நல்லிசை யாளும் கொல்லிக் கோவே" என்று எடுத்து இசைத்தான் பாணப் புலவன்.

தன் பெயரைக் கேட்டபோது நாணித் தலை கவிழ்ந்தான் தலைவன்; பாடிய பாணர் பசிதீர ஊன் கலந்த சோறும் உயர்ந்த மதுவும் அளித்தான்; நல்ல பொன்னும் மணியும் பரிசாகக் கொடுத்தான்.

---

* வல்வில் ஓரி பற்றிய வன்பரணரின் புறநானூற்றுப் பாடல் பின் வருமாறு :

*"வேழம்[1] வீழ்த்த விழுத்தொடைப்[2] பகழி[3]*
*பேழ்வாய்[4] உழுவையைப்[5] பெரும்பிறிது இறீஇ[6]*
*புழல்தலைப் புகர்க்கலை[7] உருட்டி, உரல்[8] தலைக்*
*கேழற்[9] பன்றி வீழ, அயலது*
*ஆழற்புற்றத்து[10] உடும்பில் செற்றும்*
*வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்."*

புறம் : 152

1. யானை
2. தொடுக்கப்பட்ட
3. அம்பு
4. கோரமானவாய்
5. புலி
6. இரண்டாக்கி
7. புள்ளிகளுடைய கலைமான்
8. பெரிய தலை
9. வன்மை
10. பள்ளத்தில்

படைத்திறமும் கொடைத்திறமும் வாய்ந்த "வல்வில் ஓரி"யைப் பாடினார் வன்பரணர்.* அவரது பாட்டின் சுவையறிந்து மகிழ்ந்தது பழந்தமிழுலகம். கவியரசராகிய கம்பர் உள்ளமும் அப்பாட்டிலே கவிந்த தென்றால் அதன் செம்மைக்கு வேறு சான்றும் வேண்டுமோ?

கோசலநாடு செய்த தவப்பயனாகத் தோன்றிய இராமன் வில்லின் செல்வனாய் விளங்கினான். கொல்லிமலையில் ஓரியின் வல்வில் செய்த வேலையைப் பாணர் கண்டு வியந்தாற் போலவே கோசல நாட்டில் இராமனதுவில்லின் வன்மையைக்கண்டு இன்புறும் பேறுபெற்றார் கோமுனிவர்.

தரு வனத்தில் அம் முனிவர் இயற்றிய தவ வேள்வியைத் தடுத்து அழித்து வந்தாள் தாடகை என்னும் அரக்கி. அவ்வேள்வியைக் காக்க எழுந்தது இராமன் வில். வன்மை சான்ற அந்த அரக்கியை இலக்காக வைத்து வில்லை வளைத்தான் இராமன். எழுந்தது சுடுகணை. தாடகையின் கல்லொத்த நெஞ்சைத் துளைத்தது. அவ்வளவில் நிற்க-வில்லை. பின்னும் சென்று நேராக நின்ற மலையைத் துளைத்தது; மரத்தைத் துளைத்தது ; மண்ணையும் துளைத்து நின்றது. அவ் வில்லின் செயல் கண்டு வியந்து மகிழ்ந்தான் முனிவன்.

கோசல நாட்டு வில்லாளன் அஞ்சனவண்ணன்; செங்கமலக் கண்ணன் ; நிமிர்ந்த தோளன்; நீண்ட கையன்; அவனை "வல்வில் இராமன்" என்று புகழ்ந்தார் கம்பர்.

"செந்தாமரைக் கண்ணோடும் செங்கனி வாயினோடும்
சாந்தார் தடந் தோளோடும் தாழ்தடக் கைகளோடும்
அந்தார் அக லத்தோடும் அஞ்சனக் குன்றமென்ன
வந்தான் இவனாகும் அவ் வல்வில் இராமன் என்றாள்."

அரக்கர் கோன் தங்கையாகிய சூர்ப்பனகை.

மூலம் : நூல் : தமிழ்க்கோவை (பத்தாம் வகுப்புக்குரியது) இரண்டாம் பதிப்பு, 1967
தொகுத்தோர் : எஸ். வடிவேலு
வெளியீடு : பழநியப்பா பிரதர்ஸ் பப்ளிஷர்ஸ், சென்னை- 600014


* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – பாட வரிசைப்படி (Note on Vocabulary)

| | | |
|---|---|---|
| சொல்லின் செல்வர் | – | வளமான சொல்லாற்றலை உடையவர் |
| வளமார்ந்த | – | வளம் + ஆர்ந்த ; வளம் நிறைந்த; மிகுந்த |
| செந்தேன் (n) | – | நல்ல தேன், செம்மையான தேன் |
| செழும்பலா (n) | – | செழுமையான பலா ; fully riped jack fruit |
| திருக்கோவில் | – | கோவில்; temple |
| தீயவர் | – | கெட்டவர் |
| மருட்டு(v), மருட்சி (n), மருட்கை (n) | – | இதுவா அதுவா என்று தெரியாத மயக்க நிலை ; confused state |
| தெய்வப்பாவை (தெய்வம் + பாவை) | – | தெய்வப்பெண் ; அருட்பெண் |
| வில்லாண்மை (வில் + ஆண்மை) | – | வில் வீரம் ; skill in archery |
| நிகர் அற்றவன் | – | ஒப்பற்றவன்; unparallel person (here, extraordinary person) |
| குறுநில மன்னன் | – | vassal - chieftain |
| முடிவேந்தர் | – | crowned king ; முடி - crown ; king - மன்னன் |
| அமர்க்களம் (n) | – | போர்க்களம்; battle field ; போர் – war; |
| அமர் (n) | – | சண்டை; war |
| எண்ணிறந்தவர் | – | innumerable persons |
| வல்வில் (வல் + வில்) | – | வலிமையான வில் |
| தன்னந்தனியன் | – | he alone |
| உலாவும் | – | உலவும் ; wander |
| அடுகணை (n) | – | கொல்லுகின்ற அம்பு ; arrow that kills |
| வேழம் | – | ஆண்யானை |
| மான் (f) | – | பெண் மான் ; deer |
| கலைமான் (m) | – | ஆண்மான் ; stag, adult male deer |
| காட்டுப் பன்றி | – | boar (wild pig) |
| வீட்டு (v) | – | கீழே விழச்செய் ; make(one) fall |
| அம்மட்டில் (அ + மட்டு + இல்) | – | அத்தோடு; அந்த அளவில் [மட்டு – அளவு] |
| உடும்பு | – | monitor lizard; a big lizard like animal known for its grip (on the walls, etc.) |
| புற்று (n) | – | ant hill (usually snakes live in it) |

வியப்பும் திகைப்பும் – வியப்பு – ஆச்சரியம் ; amazement
திகைப்பு– உடனடியாகப் புரிந்து கொண்டு செயல்பட முடியாத நிலை,; astonishment; surprise

கொலைபுரி – murder, kill

ஏற்றமும் தோற்றமும் – ஏற்றம்–மேன்மை; சிறப்பு ; excellance, high position ; தோற்றம் – பார்வைக்குத் தெரியும் புறவடிவம் , உருவம் ; figure , appearance

வில்லாளன் (n) – வில் வித்தையில் சிறந்தவன்

கண்களைக் கவர்ந்தன – attracted the eyes.

வண்ணமேனி – good appearance of the body ; வண்ணம் – நிறம்; colour

திண்ணிய தோள் – strong shoulder

நறுஞ்சாந்தம் (n) – நல்ல சந்தனக் குழம்பு ; original sandal paste

பூசு(v) – தடவு; இடு ; apply; smear

கொடைவள்ளல் (n) – கொடையாளி ; philanthropist

'கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததோ' – பழமொழி; proverb
பொருள்: முயற்சியின்றியே பலனடைதல்

இன்னிசை அரங்கம் – music hall; music sabha

கொல்லி மலைச் சாரல் – கொல்லி என்னும் மலையைச் சார்ந்த பகுதி

சாரல் (n) – சார்ந்திருப்பது 'சாரல்'

முழவும், சிறு பறையும் – தோலாலாகிய இசைக் கருவிகள்

குழலும் யாழும் – துளையுடன் கூடிய இசைக்கருவியாகிய குழலும் தந்தி இசைக் கருவியாகிய யாழும்

நாணித் தலை கவிழ்ந்தான் – bowed out of shy

இசை (n) – புகழ் ; glory; usually music (here, fame)

நல்லிசைக் கோ – glorious king

கொல்லிக்கோ – king of Kollimalai

ஊன்கலந்த சோறு – cooked rice mixed with mutton

திறம் (n) – capacity, power

படைத்திறமும் கொடைத் திறமும் உடைய – வீரமும் வள்ளல் தன்மையும் உடைய

வாய் (tr. & in tr.v) – வாய்ந்தது (intr.) வாய்த்தது (tr.)

வாய்ந்த – possess ; have

வாய்ப்பு – chance to have ; get

| | |
|---|---|
| பழந்தமிழுலகம் (பழைய+ தமிழ்+உலகம்) | – பழைய தமிழகம் |
| கோமுனிவர் | – முனிவர்களுக்கெல்லாம் கடவுள் போன்றவர் |
| வேள்வி(n) | – யாகம்; sacrifice |
| கல்லொத்த (நெஞ்சு) | – கல்போன்ற (நெஞ்சு); stone like (chest) ; ஒத்த–போல |
| துளை (v) | – penetrate |
| கமலம் (n) | – தாமரை ; lotus |
| அரக்கி (n) | – demonness; female form of அரக்கன் |
| தவப்பயன் (n) | – yield of a penance |
| கோன் (n) | – அரசன் ; king |

## ❑ பயிற்சி (Exercise)

I அ. பொருத்தமான இணைச்சொல்லைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

| | |
|---|---|
| வீட்டு | நிகரற்றவன் |
| நாணம் | கோன் |
| திறம் | கமலம் |

[Cues : விழுக்காட்டு, ஒப்பற்றவன், வெட்கம், அரசன், வீரம், தாமரை ]

ஆ. எதிர்ச்சொல் தருக.

| | |
|---|---|
| தீயோர் | ஏற்றம் |
| வன்மை | ஆண்மை |
| கொடைவள்ளல் | அரக்கி |

[Cues : நல்லோர், இறக்கம், மென்மை, பெண்மை, கருமி, அரக்கன்]

II. பிரித்து எழுதுக.

தன்னந்தனியனாய், கண்ணெதிர்ப்பட்டது, மனந்தழைத்தான்
பழந்தமிழுலகம், தாழ்தடக்கைகளோடும்

III அ. எ.கா.வில் உள்ளதுபோல் வினைத்தொகைத் தொடர்கள் ஏதேனும் ஐந்தினைப் பாடப்பகுதியிலிருந்து எடுத்து ஒவ்வொன்றையும் சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

எ.கா. சுடுகணை

ஆ. *கொடுக்கப்பட்டுள்ள உம்மைத் தொடர்களை சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

குழலும் யாழும், முழவும் சிறுபறையும், ஏற்றமும் தோற்றமும், சோறும் மதுவும், பொன்னும் மணியும்

VI. *கேட்டுள்ளபடி எழுதுக.*

1. *அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ள வினைச்சொற்களை எதிர்கால வினை முற்றுக்களாக மாற்றிக் கோடிட்ட இடங்களை நிரப்புக.*

வளமார்ந்த அம்மலையின் சோலையில் செந்தேன் ————; செழும்பலா ————, திருக்கோயில் ஈசனருள் ————; தெய்வப் பாவை தீயவரை ————. (துளி, பழு, விளங்கு, அழி)

2. *அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ள விலங்குப் பெயர்களைக் கொண்டு கோடிட்ட இடங்களைப் பொருத்தமாக நிரப்புக.*

அடுகணை எழுந்தது; ——— + இன் தலையில் வேகமாகப் பாய்ந்து வெளிப்பட்டது; பின்னும் விசையாகச் சென்று ஒரு பெரும் ——— + ஐ க் கொன்றது; அதனையும் கடந்து ஒரு ———— + மீது பாய்ந்தது, மேலும் சென்று ——— + யொன்றை வீட்டியது, அம்மட்டிலும் அமையாது புற்றிலே இருந்த ஓர் ——— + இன்மீது பாய்ந்து கடுஞ்சினம் தீர்த்தது. (வேழம், புலி, கலைமான், காட்டுப்பன்றி, உடும்பு).

3. *அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ள சொற்களைப் பொருத்தமாக மாற்றிக் கோடிட்ட இடங்களை நிரப்புக.*

கழல் அணிந்த கால்; ஏறு போன்ற நடை—இவற்றைக் கண்டார் பாணர். "கொல்லிமலையாளும் ———— இவன்தானா? " என்ற எண்ணம் அவருள்ளத்தில் எழுந்தது. 'நாம் ——— போன தெய்வம் ——— வந்ததோ' என்று அதிசயித்தார். (கொடைவள்ளல், கும்பிடு, குறுக்கு).

4. *அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ளவற்றைக் கொண்டு கோடிட்ட இடங்களைப் பொருத்தமாக நிரப்புக.*

அந்நிலையில் கொல்லிமலைச் சாரல் இன்னிசை அரங்கமாயிற்று. பாணரிடையே ஆர்வம் பெருகிற்று. முழவும் சிறு பறையும் ———; குழலும் யாழும் ———; இசைத் தழும்பேறிய கைகள் ————. (முழங்கு, இயங்கு, தாளமிடு).

5. *அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ளவற்றைக் கொண்டு கோடிட்ட இடங்களை நிரப்புக.*

படைத்திறமும் கொடைத்திறமும் வாய்ந்த ——— யை ப் பாடினார் ———. (வல்வில் ஓரி, வன்பரணர்).

V. *எ.கா.வில் உள்ளதுபோல், சொற்களின் இருப்பிடத்தை மாற்றி (பொருள் சிதைவின்றி) வாக்கியத்தை வெவ்வேறு வகையில் எழுதுக.*

*எ.கா. ஆசையின் காரணமாகத் தன்னைத் தானே அழித்துக் கொண்டான்*
*தன்னைத்தானே ஆசையின் காரணமாக அழித்துக் கொண்டான்.*

ஒரு நாள் வல்வில் எடுத்துத் தன்னந்தனியனாய்க் கொடிய விலங்குகள் உலாவும் கொல்லிமலைக் காட்டின் உள்ளே சென்றான் ஓரி.

VI. *வினையெச்சத்தைப் (vp) பயன்படுத்துவதன் மூலம் சிறு வாக்கியங்களை இணைத்து, நீண்ட வாக்கியமாக எழுதுக.*

உடனே வல்வில் வளைந்தது; அடுகணை எழுந்தது; வேழத்தின் தலையில் வேகமாகப் பாய்ந்து வெளிப்பட்டது. பின்னும் விசையாகச் சென்று குறுக்கிட்ட ஒரு பெரும் புலியைக் கொன்றது. அதனையும் கடந்து ஒரு கலைமான் மீது பாய்ந்தது. மேலும் சென்று காட்டுப் பன்றியொன்றை வீட்டியது. அம்மட்டிலும் அமையாது புற்றிலே இருந்த ஓர் உடும்பின் மீது பாய்ந்து கடுஞ்சினம் தீர்த்தது.

VII. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக.*

1. காற்றின் வேகமும் கனலின் வெம்மையும் வாய்ந்த அவ்வில்லை 'வல் வில்' என்று புகழ்ந்தனர் வீரர்.
2. கொல்லிமலையில் இப்படிக் கொலைபுரிந்தவன் எவன்?
3. 'நாம் கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததோ'

VIII. *சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

காற்றின் வேகமும் கனலின் வெம்மையும்
வியப்பும் திகைப்பும் உற்ற

IX. *நான்கு அல்லது ஐந்து வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. கொல்லி மலையின் வளம் எவ்வாறு கூறப்படுகிறது ?
2. ஓரி யார் ? அவன் வீரம் எப்படிப்பட்டது ?
3. பாணர் கூட்டம் வியப்பும் திகைப்பும் அடையக் காரணமாக இருந்த நிகழ்ச்சியை விளக்குக.

4. கொல்லிமலைக் குறுநில மன்னன் நாணித் தலைகவிழக் காரணம் என்ன ?

5. வன்பரணர் பாட்டில் கவியரசர் கம்பரின் உள்ளமும் கவிந்தது என்பது எவ்வாறும் புலப்படுகிறது ?

X. *எடுத்துக்காட்டுகளில் உள்ளதுபோல் பெயரடை (adj.), வினையடை (adv.)களைப் பயன்படுத்தி ஏதேனும் ஒரு பொருளையோ ஆளையோ வருணித்து எழுதுக. (சுமார் 10 வாக்கியங்களில்)*

*எ.கா. 1 (a) வண்ணமேனி ; திண்ணிய தோள் ——— இவற்றைக் கண்டனர் பாணர் ...*

*(b) கோசல நாட்டு வில்லாளன் அஞ்சன வண்ணன் ; செங்கமலக்கண்ணன். ... நீண்ட கையன்.*

*எ.கா. 2 (a) செந்தேன் துளிக்கும் ; செழும்பலா பழுக்கும் ...*

*(b) வல்வில் வளைந்தது ; அடுகணை எழுந்தது ...*

## ❑ இலக்கணக் குறிப்பு (Note on Grammar)

கல்லொத்த நெஞ்சு – உவமைத் தொடர்.

ஒத்த – உவம உருபு; போல, புரைய, ஒப்ப, உறழ, மான, கடுப்ப, அன்ன, ஆகியவை இலக்கணத்தில் கூறப்பட்டுள்ள வேறு சில உவம உருபுகளாகும்.

## ❑ பண்பாட்டுக் குறிப்பு (Note on Culture)

1. 1.1 முடிவேந்தர். முடி – crown

   1.2 குறுநில மன்னர் / சிற்றரசர் – இவர்கள் முடிவேந்தரின் கீழ் ஆட்சி செய்தவர்கள்

2. 2.1 முழவு, சிறுபறை

   இசைக் கருவிகள். இவற்றைத் 'தோல் கருவிகள்' என்று சொல்வதுண்டு. இக்கருவிகளைப் பயன்படுத்துவோரை முழவர், பறையர் என்று அழைத்தனர்.

   2.2 குழல், யாழ்

   குழல் – துளையிசைக் கருவி. இதைத் தற்போது புல்லாங்குழல் (flute) என்று கூறுவர் யாழ் – நரம்பிசைக் கருவி. இதன் வளர்ச்சியே தற்போதுள்ள வீணை (veena) என்பர்.

3.3.1 அமர், சண்டை, போர்
போரில் பங்கேற்பவர்களின் எண்ணிக்கையைப் பொருத்து அமர், சண்டை, போர் போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டன.

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

செந்தேன் துளிக்கும் ; செழும்பலா பழுக்கும்;
வல்வில் வளைந்தது ; அடுகணை எழுந்தது;
வண்ண மேனி ; திண்ணிய தோள்;
நெடிய கை ; கொடிய வில்

– இத்தொடர்களைப்போல எதுகை, மோனை போன்ற ஒலிக்கலப்பும், இலக்கிய நடை தமிழும் இனிமை சேர்ந்த சொற்களும், எளிமை நலம் மிகுந்த தனிநிலை வாக்கியங்களும், உவமை உருவகம் நிறைந்த அடைகளும் மற்றும் மேற்கோள்களும் கலந்து, விரித்தல் உத்திகளால் பின்னப்பட்டிருப்பதே ரா. பி. சேதுப்பிள்ளையின் எழுத்து மொழிநடையாகும். இத்தனை சிறப்புகளும் கொண்ட இந்த மொழிநடையை விளக்க நடை மற்றும் விவரிப்பு நடைக் கூறுகள் அடங்கிய கவிதை நடை (poetic style) என்று நடையியலார் கண்ணோட்டத்தில் குறிப்பிடலாம்.

# 10. திருக்குறள் – உலகப் பொதுநூல்

## திரு.வி. கல்யாண சுந்தரன்

[திரு. வி. க. எனும் சுருக்கப் பெயரால் அழைக்கப்படும் தமிழ்ப் பெரியார் இவர். திருவாரூர் விருத்தாசலம் மகன் கல்யாணசுந்தரன் என்பதன் சுருக்கமே திரு.வி.க. செங்கை மாவட்டத்தைச் சார்ந்த துள்ளம் என்னும் சிற்றூரில் 26. 8. 1883 அன்று பிறந்தவர். திரு. விருத்தாசலம்– திருமதி. சின்னம்மாள் 'ஆகியோர் இவரது பெற்றோர் . தொழிலாளர் சங்கத்தைத் தோற்றுவித்து அதன் தலைவராகவும் பணியாற்றியவர். நாட்டுக்கும், மொழிக்கும், பெண்களின் முன்னேற்றத்திற்கும் பெரும்பாடுபட்டவர் இவர் ; தமிழில் அழகிய உரைநடை கண்டவர் ; மேடைப் பேச்சில் வல்லவர்; 'தேசபக்தன்' 'நவசக்தி' என்னும் இதழ்களின் ஆசிரியராக இருந்தவர். பெண்ணின் பெருமை, இந்தியாவும் விடுதலையும், தமிழ்த் தென்றல், வாழ்க்கைவழி, மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும், சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து, முருகன் அல்லது அழகு, இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், பொதுமை வேட்டல், முதுமை உளறல் போன்ற நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ள இவர் 17.9.53 அன்று காலமானார்]

*"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்"* – திருமூலர்.

திருவள்ளுவர் பிறப்பு வளர்ப்பு முதலியவற்றைப் பற்றிய உண்மை வரலாறு பலவாறு பகரப்படுகின்றது. இந்நாளில் வழங்கிவரும் அவர்தம் வரலாறுகளெல்லாம் புனைந்துரைகளே.

திருவள்ளுவர் தமிழ் நாட்டிற் பிறந்து வளர்ந்தவர் என்பதும், இல்வாழ்க்கையில் நின்று ஒழுகினவர் என்பதும், தெய்வப் புலவர் என்பதும், அறவோர் என்பதும் அவர் அருளிய நூலால் இனிது விளங்குகின்றன.

### நாடும் நூலும்

திருவள்ளுவர் தமிழ் நாட்டில் தோன்றியவர்; திருக்குறள் என்ற நூலை யாத்தவர். இங்கே அவர் தோன்றிய நாட்டிற்குச் சிறப்பளிப்பதா? அல்லது அவர் யாத்த நூலுக்குச் சிறப்பளிப்பதா? நூலுக்குச் சிறப்–பளிப்பதே சால்பு. ஏன்? திருக்குறள் தமிழ் நாட்டுக்கு மட்டும் பயன் படுவதாய் அன்மயவில்லை. அஃது உலகுக்குப் பயன் படுவதாய் அமைந்–துள்ளது. நாட்டினும் உலகம் பெரியதன்றோ?

உலகுக்கென்று ஒரு நூலை அளித்த ஒருவரை ஈன்ற பெருமை தமிழ்நாட்டுக்கு உண்டு. இது குறித்துத் தமிழ் மக்கள் இறும்பூதெய்தலாம்; இறுமாப்படையலாம். ஆனால், திருவள்ளுவரைத் தமிழ்நாட்டளவில் கட்டுப்படுத்தலாகாது. அது தளையாகும் ; சிறையாகும்.

உலகுக்கென்று ஒரு நூலை அளித்த ஒருவரை உலகவர் என்று கோடலே சிறப்பு.

வள்ளுவன் றன்னை யுலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு !

என்று பாரதியார் பாடியதும் ஈண்டுக் கருதற்பாலது.

### உலகநூல்

திருவள்ளுவர் நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற முப்பாலால் ஆக்கப்பட்டது. அறமும் பொருளும் காதலும் ஒரு வகுப்பார்க்கோ, ஒரு மதத்தார்க்கோ, ஒரு மொழியார்க்கோ, ஒரு நாட்டார்க்கோ உரியன அல்ல; அவை மன்பதைக்கு–உலகுக்குப்–பொது. திருக்குறளில்–எழுவாய் முதல் இறுவாய்வரை–உலகு என்னும் சொல்லும், பொதுமைப் பொருள் உணர்த்தும் சொற்களும், சொற்றொடர்களும் தக்க இடங்களில் திகழ்கின்றன. இன்னோரன்ன குறிப்புக்கள் திருக்குறள் உலக நூல் என்பதை வலியுறுத்துவன.

### தமிழ் நாடும் உலகமும்

திருவள்ளுவர் தமிழ் நாட்டிற் பிறந்து வளர்ந்த காலத்தில் தமிழ்நாடு உலகுடன் தொடர்பு கொண்டிருந்ததா? இல்லை; பெரிதும் இல்லை. அக்காலத்தில் தமிழகத்தில் அவர் வாயிலாக உலகநூல் ஒன்று எவ்வாறு மலர்ந்தது?

நாம் வாழும் இவ்வுலகம் தோன்றிச் சுமார் இருநூறு கோடி ஆண்டுகளாயின. முதல் ஒரு நூறுகோடி ஆண்டு இவ்வுலகம் அழற்பிழம்பாய், அனலாவியை உமிழ்ந்து கிடந்தது; பின்னே அது படிப்படியே தணியத்தொடங்கிற்று. அனல் தணிந்துதணிந்து இது–போழ்து ஏறக்குறைய நாற்பது கல் தொலைவில் கனன்று கொண்டிருக்கின்றது. தணிவு உற உற, ஆங்காங்கே அனல் நின்று நின்று வெம்மை அலைகளைக் கொழித்துச் சென்றது. அலைகள் யாண்டும் ஒரே விதமாகக் கொழிக்கவில்லை; சில இடங்களில் வன்மையாய், சில இடங்களில் மென்மையாய், சில இடங்களில் இடைமையாய்க்

கொழிக்கலாயின. வன்மை மென்மை இடைமைக் கேற்ற வண்ணம் நிலத்தில் தட்ப வெப்பமும் தவழும்.

அனல் முதல் முதல் தணியத் தொடங்கிய இடம் தமிழ்நாடு. இஃது ஆராய்ச்சியாளர் கண்ட உண்மை. தமிழ்நாட்டின் தட்ப வெப்ப நிலையோ வன்மையதும் அன்று, மென்மையதும் அன்று; இடைமையது. தமிழ் நாட்டின் முதன்மைத் தணிவும், தட்பவெப்ப நிலையும் அதைப் பலவழியிலும் பண்படுத்தின. அதனால் , தமிழ் நாட்டின் பண்பாடு தொன்மையதாயிற்று. முதன்மையும் தொன்மையும் வாய்ந்த பண்பாட்டில் உலக வாழ்க்கைக்கூறுகள் கருக் கொண்டன; கருக்கொள்ளல் இயல்பு. அக்கரு தெய்வப் புலவராகிய திருவள்ளுவருக்குப் புலனாயிற்று. ஆகவே அவர் பால் உலகநூல் ஒன்று மலர்ந்த தென்க.

### திருக்குறளின் உயிர்ப்பு

திருக்குறளின் உள்ளக் கிடக்கையைப் பலப்படக்கூறலாம். அவற்றுள் உயிர்ப்பாய் ஒளிர்வது ஒன்று; அஃது 'உலகம் ஒரு குலம்' என்பது.

'உலகம் ஒரு குலம்' என்பது பழந்தமிழர் பண்பாட்டினின்றும் முகிழ்த்த ஒரு பெருங்குறிக்கோள். அக்குறிக்கோள் திருவள்ளுவருள் படிந்து நின்று வளர்ந்து ஒரு சீரிய உலக நூலாயிற்று. அந்நூலின் உள்ளுறை நுண்ணியதாய்ப் பல பேரறிஞரிடம் புகுந்துபுகுந்து பலமொழிகளில் பரிணமித்தது. இவ்வாறு திருவள்ளுவர் கருத்துப் பெருகிப்பெருகி, இந்நூலில் விஞ்ஞானத்தில்விராவி மார்க்கஸி-யமாகவும், தெய்வீகத்திற்கலந்து காந்தியமாகவும் பரவியுள்ளது. விஞ்ஞான மார்க்கஸியமும், தெய்வீகக் காந்தியமும் ஒன்றிய ஒரு கொள்கையே இக்கால உலகை ஒருமைப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது. இதை உணர்ந்து தொண்டாற்ற நம்நாடு முற்பட்டால் உலகம் நலம் பெறும்.

### அன்பு வித்து

"உலகம் ஒரு குலமாதல் வேண்டும்" என்று பேசுதல் எளிது; எழுதுதல் எளிது. பேச்சும் எழுத்தும் செயலாதல் வேண்டும். செயலை எழுப்பவல்ல ஒரு கருவி வேண்டும். கருவி உள்ளதா? உளது. அஃது எது? அஃது அன்பு. உலகை ஒரு குலமாக்குதற்கென்று அன்பு இயற்கையில் அமைந்துள்ளது; அவ்வன்பே வித்து.

"அன்பின் வழிய துயிர் நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு" என்பது திருவள்ளுவர் வாய்மை.

**மக்கட் பிறவி**

அன்பு விரைந்து பெருகும் வாய்ப்பு மக்கட்பிறவிக்கு உண்டு. அதனால் அப்பிறவி விழுமியதென்று ஆன்றோரால் போற்றப்பெற்றது. மக்கட் பிறவி விழுமியதே. எப்பொழுது? அப்பிறவி தன் மாட்டுக் கெழுமியுள்ள அன்பு வளர்ச்சிக்கு உரிய வாய்ப்பை நன்முறையில் பயன்படுத்தினால், அது விழுமியதாகும். இல்லையேல் அது விழுமியதாகாது.

**வாழ்க்கைக் கலை**

அன்புவழி வாழ்க்கை வளர்தல் வேண்டும். அவ்வழி வளரும் வாழ்க்கையே பண்பும் பயனும் உடையதாகும். பண்பும் பயனும் உடைய வாழ்க்கையே ஒரு கலை. அவ்வாழ்க்கைக்கலை அன்பிலே வளர்ந்து உருக்கொள்வதென்பதை மறக்கலாகாது. வாழ்க்கைக் கலையே மற்றைக் கலைகளின் தாயகம்.

**திருவள்ளுவர் நெறி**

வாழ்க்கைக் கலையை உலகுக்கு உதவினோர் பலர். அவருள் குறிக்கதக்க பண்டைச் சான்றோர் ஆதி மனு, அரிஸ்டாட்டில், திருவள்ளுவர் முதலியோர். ஆதிமனு நெறி செவ்வனே செழித்து வந்தது. இடைநாளில் மனு என்ற பெயரால் தோன்றிய சிலர் பழைய செந்நெறிக்குக் கேடுசூழ்ந்தனர். அவரால் பிறப்பில் உயர்வு தாழ்வு, பெண்ணடிமை, தீண்டாமை, கண்மூடி வழக்கங்கள் முதலியன கற்பிக்கப் பெற்றன. அவை தூறுகளாய்ச் செந்நெறியை மறைத்தன. இவ்வாறு ஆதி மனுநெறி குலைந்தது. அரிஸ்டாட்டில் வழியில் பொறாமை, நாட்டாசை, சுரண்டல், இகல், போர், கொலை முதலிய கொடுமைகள் மலியலாயின. இம்மலிவால் அரிஸ்டாட்டில்வழி இரத்த ஆறாகியது. திருவள்ளுவர் நெறியோ அறத்தை அடிப்படையாகக் கொண்டது. அறத்தில் மாசு படிதல் அரிதன்றோ? அதனால் திருவள்ளுவர் நெறி சிதைவுபடவில்லை, அறத்தை அடிப்படையாகக் கொண்ட எதுவும் சிதைவுபடாது.

**அறத்தின் இயல்**

திருவள்ளுவர் அறத்தை

"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்

ஆகுல நீர பிற" என்றும்

"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்

இழுக்கா இயன்றது அறம்" என்றும் விளக்கியுள்ளார். இஃது ஊன்றி ஊன்றி உன்னத்தக்கது. மனத்தின் முழுத் தூய்மையே அறம் என்பது திருவள்ளுவர் கருத்து.

### முறைகள்

மனத்துக்கண் மாசிலா அறநிலைமை எய்துதற்குத் திருவள்ளுவர் வகுத்தமுறைகள் போற்றற்குரியன. இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை-நலம், மக்கட்பேறு, அன்பு முதலிய அதிகார வைப்புமுறைகளை நோக்குக. அவற்றை நோக்கநோக்கத் திருவள்ளுவர் கோலிய அற நெறி புலப்படும்.

### அன்பும் அறமும்

இல்வாழ்க்கையாலும், அதன் சார்புகளாலும் அன்பு எழுகிறது. அன்பு மனமாசைக் கழுவும் கருவியாகிறது. மனமாசற்ற நிலையே அறம் என்பது. அறத்தை விளங்க வைப்பது அன்பு. இதற்கு விரிவுரை வேண்டுவதில்லை. திருவள்ளுவர் கண்ட நெறி, அன்பால் தெளிவுறும் அறத்தை அடிப்படையாகக் கொண்டது. இதை உளங்கொண்டு திருவள்ளுவர் அருளிய வாழ்க்கைக் கலையில் ஆழ்ந்து திளைத்தால், அஃது அன்புக்கலை–அறக்கலை என்பது உறுதிப்படும். அக்கலை, உலகை ஒரு குலமாக்கும் தகைமையது என்று சொல்லலும் வேண்டுமோ?

திருக்குறள் ஒரு சுரங்கம். அஃது அவ்வக்கால உலகைப் புரக்கும் பொருள்களை அவ்வப்போது வழங்கும் பெற்றியது. அதனின்றும் இதுகாறும் அறிஞரால் எடுக்கப்பட்ட பொருள்கள் சிலவே; மிகச் சிலவே. இவ்வேளையில் திரண்டு வரும் புது உலகமும், இனித் திரளப்போகும் பலவகை உலகங்களும் ஏற்கத்தக்க பொருள்கள் இன்னும் திருக்குறளில் மிடைந்து கிடக்கின்றன. திருகுறட் சுரங்கம் வற்றாதது.

மூலம் : நூல் : தமிழ்ப் பூங்கா [பத்தாம் வகுப்புக்குரியது] 1967
அஜந்தா புக் சென்டர், சேலம் – 1


* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – பாடவரிசைப்படி (Note on Vocabulary)

| | |
|---|---|
| பகர் (v) | – சொல்; கூறு; tell |
| யாத்த நூல் | – எழுதிய நூல் |
| புனைந்துரை (v) | – தானாகக் கற்பனை செய்து சொல் |
| ஒழுகு (v) (ஒழுகினவர்) | – பின்பற்றியவர் |
| அறவோர் | – அறவழியில் நடப்பவர் ; those who follow dharma |
| சிறப்பு (n) | – பெருமை |
| இறுமாப்பு | – தற்பெருமை ; self pride |
| சால்பு (n) | – பொருத்தம் 'பண்பு' என்ற பொருளும் உண்டு ; quite correct, appropriate |
| மட்டும் | – மாத்திரம் ; only - emphatic marker |
| அஃது | – has the same meaning as அது but usually occurs before the nouns with vowel beginning. eg. அஃது உலகு. இஃது has the similar meaning as இது occur before the nouns begining with vowels. eg. இஃது உன்னத்தக்கது |
| பெரியதன்றோ? (பெறியது+அன்று+ஓ?) | – Is it not large ? |
| இறும்பூதெய்தலாம் (இறும்பூது + எய்தலாம்) | – பெருமை அடையலாம் ; may feel proud of |
| தளை (n) | – தடை ; hurdle |
| சிறை (n) | – கட்டுப்பாடு ; confined with [சிறைக்கூடம் – jail] |
| உலகவர் | – உலகத்துக்கெல்லாம் பொதுவானவர் ; one who is common to all [similar use: அகத்தவர், மறையவர்] |
| கோடலே | – கொள்ளுவதே ; only consideration |
| ஈண்டு | – இங்கு; [ஈண்டு is literary usage] |
| கருதற்பாலது | – நினைப்பதற்கு உரியது / நினைவுக்குரியது / எண்ணுதற்கு உரியது |
| வகுப்பார்க்கு | – இனத்தவருக்கு ; to a group |
| வகு (v) | – classify, divide |
| வகுப்பு (n) | – classification / division |

| | | |
|---|---|---|
| மன்பதை (n) | – | human society |
| பால் (n) | – | பிரிவு; chapter; section; division |
| அறம் (n) | – | virtue (dharma) |
| பொருள் (n) | – | wealth |
| காமம் (n) | – | love |
| எழுவாய் முதல் இறுவாய் வரை | – | தொடக்கம் முதல் முடிவு வரை |
| இன்னோரன்ன | – | இத்தன்மையான (உலகு) |
| வலியுறுத்து (v) (வலி + உறுத்து) | – | அழுத்தமாகச் சொல்; emphasize |
| வாயிலாக | – | through ; மூலமாக, வழியாக |
| அழற் பிழம்பாய் (அழல் + பிழம்பு + ஆய்) | – | mass of liquid fire; lava |
| அனலாவியை (அனல் + ஆவி) | – | அனல் – தீ ; ஆவி – smoke; அனலாவி – lava; fire gas |
| உமிழ் (v) | – | வெளிப்படுத்து; spit; emit |
| தணிந்து தணிந்து | – | தணி (v) – குறை ; தணிந்து – குறைந்து ; get cooled |
| இது போழ்து | – | இப்பொழுது ; போழ்து – பொழுது |
| கனன்று (vp) | – | கனல் (v) – கடுமையான சூடு ; கனன்று – சூடாகப் பேசி; கடுமையாகப் பேசி |
| தணிவு உற உற | – | தணிவு அடைய அடைய |
| நில் (v) நின்று (vp) நின்று நின்று | – | by ceasing from moving / staying |
| (கொழி (v)) கொழித்து (vp) | – | மிகு; மிகுந்து |
| யாண்டும் | – | எப்போதும் |
| வன்மை, மென்மை, இடைமை | – | strong, weak and moderate (abstract nouns) |
| தட்ப வெட்பம் (n) | – | climate, weather |
| பண்பாடு | – | culture ; |
| கருக்கொண்டன | – | கருக்கொள்(v) (கரு + கொள்); கருக்கொள்ளல் (n); மூலம் ; தோற்றம் |
| உயிர்ப்பு (n) (உயிர் + ப்பு – உயிர்ப்பு) | – | மூலக்கருத்து; மையக் கருத்து; Central theme ; (abstract concept) eg. புகைப்பு, நகைப்பு |
| உள்ளக்கிடக்கை (n) (உள்ளம் + கிடக்கை) | – | பொருளடக்கம் ; content ; |

முகிழ் (v)
முகிழ்த்த (முகிழ் + த்த) – மலர் ; blossom
படிந்து நின்ற – அடங்கி நின்ற ; ஒன்றி நின்ற
பரிணமித்தது – தோன்றியது; ஒன்றிலிருந்து மற்றொன்றாய்த் தோன்றியது [பரிணாமம் – தோற்றம்] evolution.
விழுமியது – சிறந்தது ; விழுமு (v) - சிற ; விழுமம் (n) - சிறப்பு ; excellence
தன்மாட்டு (தன் + மாட்டு) – தன்னிடத்தில்
கெழு (v) கெழுமியுள்ள (கெழுமி + உள்ள) – ஆழமாக வளர்ந்துள்ள (அன்பு) ; deep rooted (love)
பண்பு (n) – character
பயன் (n) – usefulness
வாழ்க்கைக்கலை – art of life
உருக்கொள் (v) – form, taking a shape
தாயகம் (n) – தாய் நாடு / தாய் வீடு
கலைகளின் தாயகம் – birth place of arts
சான்றோர் – சிறந்தோர்; சான்றாக வாழுகின்றவர்கள்; exemplaries ; சான்று – example
செவ்வனே (adv) – properly
செந்நெறி (n) – சிறந்தவழி
தீண்டாமை (n) – untouchability
கண்மூடி வழக்கங்கள் – supertitious practice
கற்பி (v) – teach
தூறுகள் (n) – புதர் , bushes, clumsy
சுரண்டல் (n) – exploitation, swindle
இகல் (n) – hatred
கொடுமைகள் – atrocities
மலி(itr.) மலிதல்(n) – மிகு (v) ; மிகுதல் (n)
மாசு (n) – குற்றம்
மாசுபடிதல் – குற்றம் சேர்தல்
சிதைவு படுதல் – (சிறிது சிறிதாக) அழிந்துவிடுதல்; damage ; ruin
ஊன்று (v) – நடு ; பதி ; transplant

| | | |
|---|---|---|
| ஊன்றி ஊன்றி | – | (மனதில்) பதியவைத்து i.e.பதித்து பதித்து; ஆழமாகச் சிந்தித்து |
| உன்னத்தக்கது | – | நினைக்கத்தக்கது |
| தூய்மை (n) | – | purity |
| மனத்துக்கண் | – | மனத்தினிடத்தில் [கண்–case marker] |
| மாசு(n) | – | குற்றம் |
| மாசிலா (மாசு + இலா) | – | குற்றமில்லாத |
| வைப்புமுறை (n) | – | order of placement |
| நோக்க நோக்க | – | பார்க்க பார்க்க |
| கோலிய | – | ஏற்படுத்திய; நிலைநாட்டிய ; established |
| சார் (v) சார்பு (n) | – | connected with |
| தகைமை (abs-n) | – | fitness |
| சொல்லலும் வேண்டுமோ? | – | context சொல்ல வேண்டாம் என்னும் பொருளில் எடுத்தாளப்பட்டுள்ளது |
| சுர(v), சுரங்கம் | – | mine |
| புர(v), புரக்கும் | – | காக்கும் |
| பெற்றி (n) | – | சிறப்பு |
| பெற்றியது (குறிப்பு வினை) | – | சிறப்பை உடையது |
| மிடை (v) | – | பின்னு , ஊடாடு |
| மிடைந்து (vp) | – | பின்னி , ஊடாடி blend (n) / இரண்டறக்கலத்தல் |

## ❑ பயிற்சி (Exercise)

*I.* *பிரித்து எழுதுக.*

சொற்றொடர்களும்
அழற்பிழம்பாய்
குலமாக்குதற்கென்று
உலகுக்கென்று
மாசிலா அற நிலைமை

*II.* *இலக்கியத் தமிழ்ச் சொற்களுக்கு இணையான, எளிய தற்காலத் தமிழ்ச் சொற்கள் தருக.*

சால்பு ; இறும்பூதெய்து ; தளையாகும் ; புலனாயிற்று ; விழுமியதே ; உன்னத்தக்கது ; மிடைந்து கிடக்கின்றன ; கோடலே சிறப்பு ; புரக்கும் ; பெற்றது.

III அ. *தன்வினைச் சொற்களாக மாற்றுக.*

கற்பி, முகிழ்த்தது, பயன்படுத்து, சிதைத்தான், வளர்த்த.

ஆ. *பிறவினைச் சொற்களாக மாற்றுக*

விளங்கு, தணிந்தது, மறைந்தது, புலப்படு, மறைந்தன.

IV. *பொருத்தமானவற்றைத் தேர்ந்தெடுத்துக் கோடிட்ட இடங்களை நிரப்புக.*

1. திருவள்ளுவர்நூல் ——— ——— ——— என்ற முப்பாலால் ஆக்கப்பட்டது.
2. '—————' என்பது பழந்தமிழர் பண்பாட்டினின்றும் முகிழ்த்த ஒரு —————.
3. ————— வாழ்க்கை வளர்தல் வேண்டும். அவ்வழி வளரும் வாழ்க்கையே —————.
4. இல்வாழ்க்கையாலும், அதன் சார்புகளாலும் அன்பு எழுகிறது. ——— மனமாசைக் கழுவும் கருவியாகிறது. மனமாசற்ற நிலையே ————— என்பது. ————— + ஐ வளங்க வைப்பது —————.
5. திருக்குறள் ஒரு —————. அஃது அவ்வக்கால ————— + ஐ ப் புரக்கும் பொருள்களை அவ்வப்போது வழங்கும் ————— + யது.

[Cues : அன்புவழி ; பண்பும் பயனும் ; உலகம் ஒரு குலம் ; பெருங்குறிக்கோள் ; அன்பு, அறம் ; அறம், அன்பு ; அறம், பொருள், இன்பம் ; சுரங்கம், உலகு, பெற்றி ]

V. *சிறிய முற்று வாக்கியங்களாக மாற்றி எழுதுக.*

1. திருவள்ளுவர் தமிழ்நாட்டில் பிறந்துவளர்ந்தவர் என்பதும், இல்வாழ்க்கையில் நின்று ஒழுகினவர் என்பதும், தெய்வப்புலவர் என்பதும், அறவோர் என்பதும் அவர் அருளிய நூலால் இனிது விளங்குகின்றன.
2. அறமும் பொருளும் காதலும் ஒரு வகுப்பார்க்கோ, ஒரு மதத்தார்க்கோ ஒரு மொழியார்க்கோ, ஒரு நாட்டார்க்கோ உரியன அல்ல; அவை மன்பதைக்கு – உலகுக்குப் – பொது.
3. அலைகள் யாண்டும் ஒரே விதமாகக் கொழிக்கவில்லை; சில இடங்களில் வன்மையாய், சில இடங்களில் மென்மையாய், சில இடங்களில் இடைமையாய்க் கொழிக்கலாயின.

VI. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக.*

1. இது குறித்துத் தமிழ் மக்கள் இறும்பூதெய்தலாம்.
2. அனல் முதல்முதல் தணியத் தொடங்கிய இடம் தமிழ்நாடு.
3. பேச்சும் எழுத்தும் செயலாதல் வேண்டும். செயலை எழுப்பவல்ல ஒரு கருவி வேண்டும். கருவி உள்ளதா ? உளது? அஃது எது?
4. இஃது ஊன்றிஊன்றி உன்னத்தக்கது.
5. இதற்கு விரிவுரை வேண்டுவதில்லை.

VII *அ.சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.*

யாத்த நூல், இறுமாப்பு அடை, கருதற்பாலது, இன்னோரன்ன, தணிவு, உற உற, கெழுமியுள்ள, விழுமியதாகும். கோலிய அறநெறி, பெற்றியது. மிடைந்து, அஃது, நின்று நின்று

*ஆ. எ.கா.வில் உள்ளதுபோல் சொல்லிணைகளைச் சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

*எ.கா. 1. வன்மை மென்மை :*

*தமிழ்நாட்டின் தட்ப வெட்ப நிலையோ வன்மையதும் அன்று மென்மையதும் அன்று இடைமையது.*

அ. ஏற்றம் இறக்கம்

ஆ. வளமை வறுமை

இ. பெருமை சிறுமை

*எ.கா. 2. எழுவாய் முதல் இறுவாய்வரை :*

*திருக்குறளில் – எழுவாய் முதல் இறுவாய்வரை – உலகு என்னும் சொல்லும், பொதுமை பொருள் உணர்த்தும் சொற்களும் சொற்றொடர்களும் தக்க இடங்களில் திகழ்கின்றன.*

ஈ. இமயம்முதல் குமரிவரை

உ. அடிமுதல் முடிவ்வரை

ஊ. வீடுமுதல் காடுவரை

*இ. எ.கா.வில் உள்ளதுபோல் பண்புப் பெயர்கள் ஏதேனும் ஐந்தனை பாடப்பகுதியிலிருந்து எடுத்து, ஒவ்வொன்றையும் சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.*

*எ.கா. 1. வன்மை, வாய்மை.*

*2. உயிர்ப்பு; பயிர்ப்பு*

VIII. *ஐந்து வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. திருவள்ளுவர் பற்றி அவர் அருளிய நூலால் இனிது விளங்குவன யாவை ?
2. திருக்குறள் ஏன் உலகநூல் என்று கூறப்படுகிறது ?
3. திருக்குறளின் உயிர்ப்பாய் ஒளிர்வது எது ? அது எங்ஙனம் பல மொழிகளில் பரிணமித்தது ?
4. வாழ்க்கைக் கலையை உலகுக்கு உதவினோர் யார் ? அவர்கள் நெறியினின்றும் திருவள்ளுவர் நெறி எங்ஙனம் வேறுபடுகிறது ?
5. திருக்குறள் ஒரு சுரங்கம் என்றும் அது வற்றாதது என்றும் கூறப்படுவதேன்?

## ❑ இலக்கணக் குறிப்பு (Note on Grammar)

1.0 *அஃது, இஃது*

1.1 *அஃது உலகு*

1.2 *அஃது எது? அஃது அன்பு*

1.3 *இஃது உன்னத்தக்கது; இஃது ஊன்றி ஊன்றி.*

மேற்காணும் தொடர்களில் அஃது, இஃது என்பவை அது, இது என்னும் பொருளிலேயே பயன்படுத்தப் பட்டிருந்தாலும், அடுத்து வரும் சொல்லின் முதலெழுத்து உயிரெழுத்தாகவே இருப்பதைக் கவனிக்கவும். பழைய தமிழ் வழக்குகளில் அதை அதிகம் காணலாம்.

2.0 Emphatic constructions

2.1 *நாட்டினும் உலகம் பெரியதன்றோ?*

2.2 *அறத்தில் மாசு படிதல் அரிதன்றோ?*

2.3. *அக்கலை உலகை ஒரு குலமாக்கும் தகைமையது என்று சொல்லுதலும் வேண்டுமோ?*

மேற்காணும் தொடர்கள், வினாத்தொடர்களாக இருப்பினும், அவை உணர்த்த வந்த பொருளை வலியுறுத்தும் சாதாரணத் தொடர்களாகவே அமைவதை உணரலாம்.

2.1.1 *நாட்டினும் உலகம் பெரியதன்று.*

2.2.1 *அறத்தில் மாசு படிதல் அரிதன்று.*

2.3.1 *அக்கலை உலகை ஒரு குலமாக்கும் தகைமையது என்று சொல்லுதலும் வேண்டும்.*

எனவே, இத்தொடர்களில் பயன்பட்டுள்ள வினா எழுத்து 'ஓ', வாக்கியம் உணர்த்தும் பொருளை வலியுறுத்தும் வகையிலேயே பயன் படுத்தப்பட்டுள்ளது என்பதை உணர்க.

3.0 Sentence conjunction

அறமும் பொருளும் காதலும் ஒரு மதத்தார்க்கோ
ஒரு மொழியார்க்கோ
ஒரு நாட்டார்க்கோ உரியன அல்ல.

2.1, 2.2, 2.3 தொடர்களில் உள்ள 'ஓ', வாக்கியம் 3–இல் உள்ள 'ஓ' வினின்றும் வேறுபட்ட பொருள் உணர்துவதைக் காண்க. முன்னது emphatic; பின்னது sentence conjunction.

## ❑ பண்பாட்டுக் குறிப்பு (Note on Culture)

இயற்கை எய்தினார் –

literal meaning of this phrase is 'attained the nature'. This refers to the death of a person. This type of usage is genrally found in Tamil. Tamil grammarians categorised this kind of usage under மங்கல வழக்கு. In English this concept is more or less equal to 'euphemism'

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

1.1 இடையிடையே வினாவெழுப்பி விடை தருவது,
எ.கா. கருவி உளதா? உளது.
அஃது எது? அஃது அன்பு.

1.2 –பாலது, –என்க, –ஆகாது, – தகைமையது போன்ற பின்னொட்டுச் சொற்களை அமைத்து எழுதுவது
எ.கா. கருதற்பாலது, மலர்ந்த தென்க.
விழுமிய தாகாது, ஒரு குலமாக்கும் தகைமையது.

1.3 அஃது, இஃது என்னும் சுட்டுச் சொற்களை கையாளுவது
எ.கா. அஃது உலகு;
இஃது உன்னத்தக்கது

இவ்வாசிரியரின் மொழி நடைச் சிறப்பு எனலாம்.

2.1 பழந்தமிழ்ச் சொற்கள் கலந்து தனிவாக்கியங்கள் மிகுந்து, குறிப்பிட்ட சில இலக்கியப்பகுதிகளை மேற்கோள் காட்டி விளக்குவதாக அமைகிறது திரு. வி. க.வின் மொழிநடை. வினாவெழுப்பி விடைதருவது போன்று அமையும் பயன்பாட்டினை இவருடைய எழுத்து மொழி நடையில் ஏராளம் காணலாம். விரித்தல் உத்திகள் மிகுந்து உவமை உருவகங்களுடன் ஒரு குறிப்பிட்ட பின்னணியை / நிகழ்ச்சியைச் சித்தரிப்பதாக அமையும் பழைய உரையாசிரியர்களின் மொழிநடைக்கு ஒப்பான திரு. வி. க வின் மொழி நடையை விளக்க நடை (descriptive style) என்றே குறிப்பர் நடையியலார்.

# 11. நானும் என் எழுத்தும்

*சுந்தரராமசாமி*

[சுந்தரராமசாமி கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோயிலைச் சேர்ந்தவர். பசுவய்யா என்பது இவரது புனைப்பெயர். நாவல், சிறுகதை, கட்டுரை, கடிதம் போன்றவற்றைக் கலவை வாக்கியங்களைக் கொண்டு எழுதுபவர். திருநெல்வேலி மற்றும் நாகர்கோயில் வட்டார வழக்குகளைப் பயன்படுத்தி எழுதும் இவரது படைப்புக்கள் மிகவும் வித்தியாசமானவை. இவர் எழுதிய 'புளிய மரத்தின் கதை', 'ஜே.ஜே. சில குறிப்புகள்', 'குழந்தைகள் பெண்கள் ஆண்கள்' போன்ற நாவல்களும், 'பல்லக்குத் தூக்கிகள்', 'பள்ளம்' போன்ற சிறுகதைத் தொகுதிகளும், 'காற்றில் கலந்த பேரோசை' என்ற கட்டுரைத் தொகுதியும், '107 கவிதைகள்' என்ற கவிதைத் தொகுப்பும் குறிப்பிடத்தக்கவை. 'காலச்சுவடு' என்ற தமிழ் இலக்கிய இதழ் இவரால் தொடங்கப்பட்டது. இவரது கவிதைத் தொகுதிக்குக் குமரன் ஆசான் நினைவு விருதும், இலக்கியப் படைப்புகளுக்காக கனடா நாட்டைச் சேர்ந்த டொரான்டோ பல்கலைக்கழகமும் தமிழ் இலக்கியத் தோட்டம் என்ற அமைப்பும் இணைந்து வழங்கும் 'இயல் விருது'ம் கிடைத்துள்ளன. இவர் தொடர்ந்து மொழிபெயர்ப்புகளையும், பத்திரிகைக் கட்டுரைகளையும் எழுதி வருகிறார். தகழியின் 'தோட்டியின் மகன்' நாவலை மலையாளத்திலிருந்து தமிழுக்குத் தந்துள்ளார். இவருடைய படைப்புகள் மலையாளம், ஆங்கிலம், பிரஞ்சு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.]

---

நான் எழுத்துத் துறையில் புகுந்த வருஷம் பிறந்த அடுத்தவீட்டுப் பெண்குழந்தை ஸாரி கட்டிக் கொண்டு கல்லூரிக்குப் போகிறது. அவளுக்குப் பதினைந்து வயது தாண்டியிருக்க வேண்டும்.

எதற்காக எழுதுகிறேன் எனும் கேள்வியை எழுப்பிக் கொள்கிறேன். லகுவாக அதற்குப் பதில் கிடைக்குமென்று தோன்றவில்லை. அப்பொழுது எதற்காக எழுத ஆரம்பித்தேன் எனும் கேள்வி பிறக்கிறது.

படிக்க வேண்டிய காலத்தில் படிக்காத மாணவனும், சம்பாதிக்க வேண்டிய காலத்தில் சம்பாதிக்காத இளைஞனும், மலடியான மருமகளும்– அவர்களுக்குரிய அந்தஸ்தைப் பெற முடியாது. நான் முதல் வகுப்பிலிருந்து பள்ளிப் படிப்பு முடிப்பது வரையிலும் கடைசிப் பெஞ்சு மாணவனாகவே இருந்து வந்திருக்கிறேன். என் பள்ளி வாழ்க்கையில் பக்திச் சிரத்தையோடு நாலு வரிகள் உருப்போட்ட நினைவு எனக்கில்லை. இதன் விளைவாக குடும்பம் என்னை அசடு என்று முத்திரை குத்திற்று. அப்பொழுது அந்தப் 'பட்டம்' கனகச்சிதமாய் பொருந்தும்படியாகவே நான் இருந்தேன்–குறைந்த பட்சம் வெளி உலகிற்கேனும். எனது

துரதிர்ஷ்டம் என்னுடன் படித்துவந்த என் சகோதரி படிப்பில் கன சூட்டிகையாக வந்து வாய்த்தாள். அவளோடு ஒப்பிட்டுப் பேசப்படும் சங்கடங்களுக்கு நான் ஆளானேன்.

நான் முட்டாள் அல்ல என்பதை நிரூபித்து என் தந்தையை ஒப்புக் கொள்ளச் செய்துவிட வேண்டும் என்பதற்காகவே எழுத ஆரம்பித்–தேன். அவர் மதிக்க நிர்பந்திக்கப்படும் ஒரு புத்திசாலி உலகம் என்னைக் கொண்டாடும் நாட்களை உருவாக்கி அவரை அசடு வழியச் செய்துவிட வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அதோடு என் எழுத்தில் மயங்கி அழகிய ரசிகைகள் யாரேனும் வலிய வந்து என்னைக் காதலிக்கக்கூடும் என்ற நப்பாசையும் எனக்கு இருந்தது.

எனக்கே முற்றிலும் தெளிவாகாத ஒரு இயற்கைத் தாகம்தான் இன்றும் என்னை எழுதத் தூண்டுகிறது எனத் தோன்றுகிறது. ஒரு விதத்தில் இதைத் தவிர வேலை எதுவும் மேற்கொள்ள என்னால் ஆகாது என்றும் சொல்லலாம். ஒரு வியாபார ஸ்தாபனத்தின் தமிழ்க்கடிதப் போக்குவரத்தைக் கவனித்தல், ஒரு இலக்கியப் பத்திரிகைக்கு ஆசிரியராக இருத்தல், கவுரவமான குடும்பம் ஒன்றில் காரோட்டியாக வேலை பார்த்தல், ஐந்து வகுப்பு வரையிலும் குழந்தைகளுக்கு வீட்டுப் பாடம் எடுத்தல் ஆகிய வேலைகளையும் என்னால் திருப்திகரமாகச் செய்ய முடியுமென்றாலும், எழுதுகிறபொழுது ஏற்படுகிற ஒரு 'அட் ஹோம்' உணர்ச்சி எனக்கு வேறு வேலைகளில் ஏற்படுவதில்லை. வேறு காரியங்களில் ஈடுபட்டிருக்கும்பொழுது எனது மூர்த்திகரம் சிந்திச் சிதறுவதாகத் தோன்றுவதாலும், எழுத்தில் குவிந்து என்நம்பிக்கையையும் ஆத்ம திருப்தியையும் ஏற்படுத்துவதாலும், இயற்கை இந்த ஒரு வேலைக்கே என்னைத் தயார் செய்திருக்கிறதோ என எண்ணிக் கொள்கிறேன்.

எழுதுவதன் மூலம் நான் வாசகர்களுக்கு எந்த விதத்திலும் கடமைப் பட்டவனாக உணரவில்லை. என்னுடைய வாசகர்கள் யார் யார் என்பதும் எனக்குத் தெரியாது. வாசகர்களை சுவாரஸ்யப்படுத்துவதோ, குஷிப்படுத்துவதோ, அவர்களுக்குக் கிச்சுகிச்சு மூட்டுவதோ, வாழ்க்கைப் பாதையில் அலுப்புநடை நடந்து அவர்கள் 'அப்பாடா!' என்று ஆயாசத்துடன் சோர்ந்து உட்காரும்பொழுது குதிரை சதை பிசைந்து விடுவதோ என்னுடைய வேலை அல்ல. இதுதான் தர்மம் என்று காட்டவோ, இதுதான் உண்மை என உணர்த்திடவோ என்னால் ஆகாது.

எது தர்மம், எது உண்மை என்பது எனக்கே குழப்பமாக இருக்கிறது. தமிழ்ப் பண்பாடுகளைக் கொஞ்சம் அழுத்துவோம் என்றால் அதன் கீழ் வரும் அயிட்டங்கள் என்ன என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. மனிதாபிமானத்தையாவது பரப்பலாமே என்றால், நானே ஒரு மனிதாபிமானிதானா என்பது சந்தேகமாகவே இருக்கிறது.

நான். எனக்காக மட்டும் எழுதக் கூடியவனாக இருக்கவேண்டு-மென்றே ஆசைப்படுகிறேன். எனக்குள் புதையுண்டு கிடக்கும் கலை உணர்ச்சி ஒரு வடிவம் பெற்று வெளிவந்த பின்புதான் எனக்கே அது இருந்திருப்பது தெரியவருகிறது. இதேபோல் உள்ளே வேறு என்ன என்ன இருக்கின்றன என்பதை அறிந்துகொண்டுவிடவே நான் எழுத முற்படுகிறேனோ என்னவோ! இவ்வாறு வெளிப்பட, வெளிப்பட நான் அத்தகைய அனுபவங்களுக்கு ஆளாக ஆளாக என்னை நான் கண்டு கொள்வது ஒரு விதத்தில் சாத்தியமாக இருக்குமென்று தோன்றுகிறது. என்னைப்பற்றி நான் தெரிந்துகொள்ள எழுதும் எழுத்துக்கள், தங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள உபயோகப்படும் என்று எண்ணுகிறவர்கள்தான் என்னுடைய வாசகர்கள். என்னுடைய பூட்டுக்கு நான் அடித்த சாவிகள் அவர்களுடைய பூட்டுகளுக்கும் சேரும் என்று கேள்விப்படுகிற பொழுது அவர்கள் என் வீடு தேடி வருவார்கள். நான் படித்துக் கொண்டும் கனவுகள் கண்டுகொண்டும் இருப்பதால் ஒன்றுக்கு இரண்டுமுறை தட்டினால்தான் கதவையே திறப்பேன்.

ஒரு பிரஜை என்ற அளவில் நான் சமூக வாழ்க்கைக்குத் தகுதியானவன்தான். என் வீட்டுக் கொல்லையைப் பெருக்கி அடுத்த வீட்டுக் கொல்லையில் நான் ஒரு நாளும் இடமளிக்க மாட்டேன். எனது கைத்தடியைச் சுழற்றும் சுதந்திரம் எதிராளியின் மூக்கு நுனியோடு முடிவடைந்துவிடும் என்பது எனக்கு எப்பொழுதும் நினைவிருக்கும். அரசாங்க வரிகளை பாக்கி போடாமல் செலுத்துவதில் அக்கறை கொள்வேன். சொந்தப் பிணங்களை, காடுவரையிலும் சென்று வழி-யனுப்பிவரப் பின்வாங்க மாட்டேன். அகாலத்தில் வந்து சேரும் விருந்தாளியின் பசி ஆற என்னால் ஆகக்கூடியதைச் செய்வேன். பொது நன்மைக்காகக் குலுக்கப்படும் உண்டியல்களில் நட்புக்குத் துரோகம் இழைக்காமலிருக்கக் கூடுமானவரையிலும் முயல்வேன். பொய்கள் சொல்வதை—முற்றிலும் விட்டுவிடுவது சிரம சாத்தியமாகவே இருக்கிறது என்றாலும்—குறைத்துக் கொள்ள அந்தரங்க சுத்தமாகப் பாடுபடுகிறேன்.

ஒரு எழுத்தாளன் என்ற முறையில் நான் எதற்கும் பூரண விசுவாசம் செலுத்துகிறவன் அல்ல. நடைமுறை அர்த்தப்படி கட்சிகள், அரசாங்கம், சமூகம், மதம், தேசம் இவற்றிற்கெல்லாம் பூர்ண விசுவாசம் அளித்து-விடக் கூடாது என்பதை எனது இலக்கியக் கொள்கையின் ஒரு பகுதியாக நான் ஏற்றுக்கொண்டிருக்கிறேன். வெகுஜனத்தின் நம்பிக்கைகளைப் பிரதி-பலிப்பதோ, புதிய நம்பிக்கைகளை ஏற்றுக்கொள்ளும்படி அவர்களைத் தூண்டுவதோ என்னுடைய வேலை அல்ல. அவர்களுடைய பொது நம்பிக்கைகளுக்கு அப்பாற்பட்ட விதிவிலக்கான உண்மைகளைச் சொல்லி, அந்தச் சந்தர்ப்பங்களில் அவர்களுடைய விரோதியாகவும், காலத்தின் நண்பனாகவும் இருப்பதே என் வேலை என்று எண்ணுகிறேன். மனிதனின் சராசரித்தன்மையின் அழுத்தத்தினால் வெளியே பிதுங்கிவிடும் விதிவிலக்கான உண்மைகள் அலட்சியப்படுத்தப்பட்டு முக்கால் உண்மைகள் முழு உண்மைகளின் தோற்றம் கொள்கிறபொழுது, மைனாரிட்டியின் அரை உண்மையில் கலந்துகொண்டு கத்துவது தவிர்க்க முடியாத காரியமாகவே எனக்குப்படுகிறது.

ஒரு நவீனத் தமிழ் எழுத்தாளன் ஆன நான், புதுமைப்பித்தன், மௌனி, கு.ப.ரா., பிச்சமூர்த்தி, செல்லப்பா, க.நா.சு., ராமாமிருதம், ஜானகிராமன், அழகிரிசாமி இவர்களுக்குப் பின்னால் வந்தவன் என்பதை எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொள்கிறேன். சிருஷ்டிகள் மூலம் அவர்கள் பவித்திரப்படுத்தியும், கூராக்கியும் தந்த வார்த்தைகள் என் வேலைக்குப்பயன்படுகின்றன என்பது எனக்குத் தெரியும். இவர்களை முற்றாகப் புறக்கணிக்கிறவன் என்னை ஏற்றுக்கொள்ள மாட்டான் என்பதோடு, இவர்களைப் புறக்கணிக்கும் எந்த தனிமனிதனின் பாராட்டையும் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசு எனக்கு அளிக்கப்படுமென்றால் அதை நான் அவர்கள் முகத்தில் விட்டெறிந்துவிடுவது என்பது என்னைப் பொருத்த-வரையிலும் தவிர்க்கமுடியாத காரியமாகவே இருக்கும். இதற்குக்காரணம் என்னுடைய இலக்கிய முன்னோர்களைக் கவுரவிக்கத் தவறியது மூலம், எனக்குப் பரிசளிக்கும் தகுதியை அவர்கள் இழந்துவிட்டார்கள் என்பதாகும்.

எழுத ஆரம்பித்த காலத்தில் எனக்கிருந்த மிதமிஞ்சிய உற்சாகம் இப்போது எனக்கில்லை. ஸ்வீடிஷ் அகாடமியிலிருந்து அழைப்பு வந்துவிட்டால், விலை உயர்ந்த பனிக்கோட்டுகள் வாங்குவது சிரமமாக இருக்குமே என எண்ணிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த காலம் மலையேறிவிட்டதைப்பற்றி எனக்குச் சந்தோஷம்தான். நாள் போகப்

போக உலக இலக்கியம் பொருட்படுத்தும்படி எதையேனும் அளிக்க என்னால் ஆகுமா என்று மலைப்புத்தட்ட ஆரம்பித்திருக்கிறது. என்னைக் கருவியாய்க் கொள்ளும் இயற்கையின் முகவிலாசம் பின்னால் எப்படி விரியும் என முன்கூட்டிக் கணிப்பது தருக்க அறிவுக்கு அப்பாற்பட்டது என சமாதானம் அடைகிறேன். இலக்கிய உலகில் மகத்தான வெற்றி கிடைக்காவிட்டாலும், தோல்வி ஏற்படும் எனில், அத்தோல்வியும் மகத்தான தோல்வியாக இருக்கவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன். அற்ப வெற்றி எனும் தண்டனைக்கு ஆளாகாமல் தப்புவேன் என்றால் அதுவே பெரிய அதிர்ஷ்டம் என்று கருதுவேன்.

வாழ்வின் அந்திமதசையில் இவ்வாறு கூறிக்கொள்ள முடிந்தாலே போதும்; "என்னுடைய கலைத்திறன் மிகச்சொற்பமானதுதான். எனினும் அந்தச்சொற்பமான கலை உணர்வையும் நான் பேணிச் சீராட்டி வளர்த்தேன். எனது அந்தரங்கத்துக்கு உவப்பான விஷயத்தையே நான் அளித்தேன். மூன்று வார்த்தைகளில் சொல்லக் கூடியதை நாலு வார்த்தைகளில் சொல்லலாகாது என்ற விதியைக் கடைசிவரையிலும் நான் காப்பாற்ற முயன்றேன். எனக்குக்கிடைத்த பாஷையை மலினப்படுத்தாமல் மறு சந்ததிக்கு அளிக்க நானும் என்னால் ஆன முயற்சி எடுத்துக் கொண்டேன்." இவ்வளவு போதும் எனக்கு.

நான் செல்லும் பாதை என்னைக் கோவிலின் சந்நிதானத்திற்கு இட்டுச் செல்வதற்குள் நான் களைப்படைந்து போய்விடலாம். ஆனால் நடந்து செல்கிறபாதை சுத்தமான பாதையாக இருந்துவிட்டாலே போதும். அப்பொழுது வழிநெடுகிலும் கோவில்கள்தாம்; வழி நெடுகிலும் கோபுரங்கள்தாம்.

மூலம் : சுந்தரராமசாமி கட்டுரைகள்

வெளியீடு : கிரியா, 1984, சென்னை – 600014



* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – பாட வரிசைப்படி (Note on Vocabulary)

| | |
|---|---|
| லகுவாக | – easily |
| மலடி (n) | – a barren woman who does not bear child |
| அசடு என்று முத்திரை குத்திற்று (அசட்டு) | – முட்டாள்தனம் என்று குறியிடப்பட்டது ; putting the seal of foolishness |
| பட்டம் (பட்டப் பெயர்) | – ஒருவரின் உடலமைப்பு, நடவடிக்கை, குணம் காரணமாகக் கேலியாகச் சூட்டப்படும் பெயர் ; nickname |
| கனகச்சிதமாய் | – perfectly |
| ஒப்பிட்டு | – by comparing |
| கனசூட்டிகையாக | – more brilliantly ; more smartly |
| சங்கடங்களுக்கு | – for embarrassments ; uneasiness |
| நிர்ப்பந்திக்கப்படும் (tr.) | – compel |
| அசடுவழியச் செய்து விட வேண்டும் | – make (one) feels (his) foolishness |
| அழகிய ரசிகைகள் | – beautiful female fans |
| நப்பாசை (n) | – எப்படியாவது நிகழாதா என்ற எதிர்பார்ப்பு ; fond hope |
| இயற்கைத் தாகம் (n) | – natural thirsty |
| கடிதப் போக்குவரத்து (n) | – letter correspondence |
| காரோட்டி | – car driver |
| மூர்த்திகரம் (சிந்திச் சிதறுவதாக) | – உருவம் (அ) எண்ணம் (contextual meaning) |
| சுவாரஸ்யப்படுத்து | – to make ( the readers) get interest |
| குஷிப்படுத்து (tr.v) | – to make (the readers) feel happy |
| கிச்சுகிச்சு மூட்டு (tr.v) | – tickle (so as to make one laugh) |
| அலுப்பு நடை நடந்து | – by having a tired walk |
| குதிரைச் சதை | – ஆடுசதை ; calf muscle |
| பிசை (v) | – (கையால்) அழுத்திப்புரட்டி உருட்டுதல் ; knead, squeeze |
| தமிழ்ப்பண்பாடுகளைக் கொஞ்சம் அழுத்துவோம் என்றால் அதன் கீழ்வரும் அயிட்டங்கள் என்ன என்ன என்பது எனக்குத் தெரியவில்லை | – if (I) want to emphasise the Tamil culture, I do not know which are all the items that constitute such culture. |

| | | |
|---|---|---|
| மனிதாபிமானம் (n) | – | humanitarianism |
| புதையுண்டு கிடக்கும் கலையுணர்ச்சி | – | hidden artistic feeling |
| சாத்தியம் (n) | – | chance, possibility |
| கைத்தடியைச் சுழற்று | – | swedling the walking stick |
| எதிராளியின் மூக்கு நுனி | – | nose tip of an enemy |
| முடிவடைந்துவிடு | – | getting finished |
| காடுவரை | – | upto the burial ground |
| குலுக்கு (v) | – | shake |
| உண்டியல் (n) | – | hundi ; a container used for personal savings or the one kept in temples for collecting contributions |
| காணிக்கை (n) | – | offering or gift out of devotion or respect |
| துரோகம் (இழைக்காமல்) | – | not imposing unfaithfulness |
| அந்தரங்கச் சுத்தம் | – | மனத்தூய்மை ; purity in mind |
| பூரண விசுவாசம் | – | whole hearted faithfulness |
| பிரதிபலி (v) | – | reflect |
| பொது நம்பிக்கை | – | general belief |
| விதிவிலக்கு (n) | – | exception |
| சராசரி (n) | – | average |
| அப்பாற்பட்ட | – | beyond |
| பிதுங்கிவிடும் | – | will come out (due to force/ pressure) |
| அலட்சியப்படுத்து (tr.v) | – | ignore |
| மைனாரிட்டி | – | சிறுபான்மை; minority |
| புறக்கணி (v) | – | refuse, avoid |
| பவித்திரப்படுத்து (tr.v) | – | பரிசுத்தப்படுத்து ; purify to attain sanctity; sacredness |
| கூராக்கு(v) | – | sharpen |
| முகத்தில் விட்டெறி (v) | – | throw (it) on the face |
| கவுரவிக்கத் தவறு (v) | – | fail to honour |
| மிதமிஞ்சிய உற்சாகம் | – | excess enthusiasm |
| பனிக்கோட்டு | – | coat (to be used during winter) |
| மலையேறிவிட்டது | – | (already) gone |
| பொருட்படுத்து (tr.v) | – | mind |

| | | |
|---|---|---|
| மலைப்புத்தட்டு | – | get discouragement |
| முன்கூட்டிக் கணி (v) | – | predict beforehand |
| தருக்க அறிவு | – | விவாத அறிவு; knowledge of discussion (in the nature of an argument); logic |
| அற்ப வெற்றி (n) | – | victory achieved through cheap means |
| தண்டனைக்கு ஆளாகாமல் தப்புவேன் | – | I will escape from punishment |
| அந்திமதசை | – | last stage/ during the old age |
| சொற்பமானது தான் | – | only little |
| அந்தரங்கத்துக்கு உவப்பான | – | உள் மனதுக்குப் பிடித்த, உள்ளூர மகிழும்படியான |
| உவப்பு (n) | – | happiness |
| மலினப்படுத்தாமல் | – | by not making it cheap |
| மறுசந்ததி (n) | – | successor / future generation |
| சந்நிதானம் (n) | – | இறைவன் உறைவிடம் ; temple, a sanctum |
| கோபுரங்கள் | – | towers |
| விதி (n) | – | rule |

❑ **பயிற்சி** (Exercise)

*I.* *பிரித்து எழுதுக*

விட்டெறிந்து விடுவது
அலட்சியப்படுத்தப்பட்டு
மனிதாபிமானத்தையாவது
மலையேறிவிட்டதைப்பற்றி
சிரமசாத்தியமாகவேயிருக்கிறது

*II அ.* *இணைச்சொல் தருக.*

வீண், புலனாகு, கோண் (கோணு), நழுவவிடு, யோசி, அக்கறை, கனகச்சிதமாய், கூராக்கு, கவுரவி.

*II ஆ.* *எதிர்ச்சொல் தருக*

ஆறிப்போய் விடு, மும்முரம், மேல்வாரியான, புறக்கணி, சொற்பமான, உவப்பு, மலினப்படுத்து

III *அ. தன்வினைச் சொற்களாக மாற்றி எழுதுக.*

வீணாக்கு, நழுவவிடு, விரித்து, அழுத்து, குலுக்கு, புலப்படுத்து, கூராக்கு

*ஆ. பிறவினைச் சொற்களாக மாற்றி எழுதுக.*

புலனாகு, ஈடுபடு, தீர்ந்தது, நெருங்கு, பிதுங்கு, விலகு, பவித்திரப்படு, மலையேறு, தண்டனைக்கு ஆளாகு, ஆறு.

IV *அ. எடுத்துக்காட்டில் உள்ளபடி (பொருத்தமான உருபினைச் சேர்த்து) தொழிற் பெயர்களாக மாற்றுக.*

*எ.கா. படி – படிப்பு*

யோசி, எழுது, ஆராய், (கார்)ஓட்டு, அலு, விலக்கு, கருது, ஏறு, கூடு.

*ஆ. எடுத்துக்காட்டில் உள்ளபடி சரியான வினையடிகளைக்* (roots) *கண்டுபிடித்து எழுதுக :*

*எ.கா. ஓட்டம் – ஓடு*

*சோர்வு, நெருக்கம், ஈடுபாடு, தீர்ப்பு* (தீர்வு), நம்பிக்கை, ஊக்கம், உணர்வு (உணர்ச்சி), மலைப்பு, உவகை (உவப்பு), குறிப்பு.

V. *ஒவ்வொரு வாக்கியமும் மறைமுகமாக உணர்த்தும் பொருளை எழுதுக.*

1. அவரை அசடு வழியச் செய்துவிடவேண்டும் என்று ஆசைப்பட்டேன்.
2. குடும்பம் என்னை 'அசடு' என்று முத்திரை குத்திற்று.
3. என்வீட்டுக் கொல்லையைப் பெருக்கி அடுத்த வீட்டுக் கொல்லையில் தட்ட நான் ஒரு நாளும் இடமளிக்க மாட்டேன்.
4. கவலைப்பட்டுக் கொண்டிருந்த காலம் மலையேறிவிட்டது.
5. அப்போது வழிநெடுகிலும் கோவில்கள் தாம் ; வழிநெடுகிலும் கோபுரங்கள் தாம்.

VI. *சொற்களின் / சொற்றொடர்களின் இருப்பிடங்களை மாற்றி ஒவ்வொரு வாக்கியத்தையும் (பொருள் சிதைவின்றி) வெவ்வேறு வகையில் எழுதுக.*

என் எழுத்தில் மயங்கி அழகிய ரசிகைகள் யாரேனும் வலிய வந்து என்னைக் காதலிக்கக் கூடும் என்ற நப்பாசையும் எனக்கு இருந்தது.

VII. *சிறிய முற்று வாக்கியங்களாக மாற்றி எழுதுக.*

'வாசகர்களைச் சுவாரஸ்யப் படுத்துவதோ, குஷிப்படுத்துவதோ, அவர்களுக்குக் கிச்சிக்கிச்சு மூட்டுவதோ, வாழ்க்கைப்பாதையில் அலுப்புநடை நடந்து அவர்கள் ' அப்பாடா !' என்று ஆயாசத்துடன்

சோர்ந்து உட்காரும் பொழுது குதிரைச்சதை பிசைந்து விடுவதோ என்னுடைய வேலையல்ல'.

VIII. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக.*

1. அவளுக்குப் பதினைந்து வயது தாண்டியிருக்க வேண்டும்.
2. இதன் விளைவாக குடும்பம் என்னை அசடு என்று முத்திரை குத்திற்று.
3. சொந்தப்பிணங்களை காடுவரையிலும் சென்று வழியனுப்பிவரப் பின்வாங்க மாட்டேன்.
4. சிருஷ்டிகள் மூலம் அவர்கள் பவித்திரப்படுத்தியும் கூராக்கியும் தந்த வார்த்தைகள் என் வேலைக்குப் பயன்படுகின்றன என்பது எனக்கு தெரியும்.
5. அற்பவெற்றி என்னும் தண்டனைக்கு ஆளாகாமல் தப்புவேன் என்றால் அதுவே பெரிய அதிர்ஷ்டம் என்று கருதுவேன்.

IX. *சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.*

அ. சூட்டிகையாக
கனகச்சிதமாய்
நப்பாசை
கிச்சுகிச்சு மூட்டு
கைத்தடியைச் சுழற்றும் சுதந்திரம்
விசுவாசமற்ற தன்மை
முகத்தில் விட்டெறிந்து
மலையேறிவிட்டது
பேணிச் சீராட்டி
அந்திமதசையில்

ஆ. நாளை நாளை
என்ன என்ன
வெளிப்பட வெளிப்பட
ஆளாக ஆளாக
கண்டு கண்டு
யார் யார்
ஆங்காங்கு
கொட்டை கொட்டை

IX. எ.கா.வில் உள்ளதுபோல சொல்லிணைகளை சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

எ.கா. 1. படிக்க–படிக்காத ; சம்பாதிக்க–சம்பாதிக்காத

"படிக்கவேண்டிய காலத்தில் படிக்காத மாணவனும், சம்பாதிக்க வேண்டிய காலத்தில் சம்பாதிக்காத இளைஞனும் – அவர்களுக்கு வேறு தகுதிகள் ஆயிரம் இருக்கட்டும் – குடும்பங்களில் அவர்களுக்கு உரிய அந்தஸ்தைப் பெற முடியாது".

1. எழுத – எழுதாத ; தேற – தேறாத.
2. விதைக்க – விதைக்காத ; அறுக்க – அறுக்காத
3. விளையாட – விளையாடாத ; சாப்பிட – சாப்பிடாத.

எ.கா. 2. பிரதிபலிப்பதோ – தூண்டுவதோ.

"வெகு ஜனத்தின் நம்பிக்கைகளைப் பிரதிபலிப்பதோ, புதிய நம்பிக்கை–களை ஏற்றுக்கொள்ளும்படி அவர்களைத்தூண்டுவதோ என்னுடைய வேலை அல்ல".

1. கற்பிப்பதோ – வலியுறுத்துவதோ
2. வெளிப்படுத்துவதோ – விளக்கமளிப்பதுவோ

X. வினாக்களுக்கு வரையறையின்படி, விடை எழுதுக.

1. யார் யார் அவரவர்களுக்குரிய அந்தஸ்தைப் பெறமுடியாது என்று கட்டுரையாசிரியர் குறிப்பிடுகிறார் ? (ஓரிரு வாக்கியங்களில்)
2. தான் எழுத ஆரம்பித்ததன் காரணங்களாகக் கட்டுரையாசிரியர் குறிப்பிடுவன யாவை ? (மூன்று முதல் ஐ ந்து வாக்கியங்களில்)
3. எழுதுவதைத்தவிர இவ்வாசிரியரால் திருப்திகரமாகச் செய்ய முடியுமெனக் கருதப்படுகிற வேறு சில வேலைகள் யாவை ? (இரண்டு அல்லது மூன்று வாக்கியங்களில்).
4. ஒரு பிரஜை என்ற அளவில் தான் சமூக வாழ்க்கைக்குத் தகுதி–யானவன் என்பதைக் கட்டுரையாசிரியர் எப்படி விளக்குகிறார் ? (மூன்று முதல் ஐ ந்து வாக்கியங்களில்).
5. ஒரு எழுத்தாளன் என்ற முறையில் 'தான் எதற்கும் பூரண விசுவாசம் செலுத்துகிறவன் அல்ல' என்பதை எப்படி விளக்குகிறார் ? (மூன்று முதல் ஐந்து வாக்கியங்களில்).

XI. *பாடப்பகுதி உணர்த்தும் செய்தியைச் சொந்த நடையில் எழுதி வெளிப்படுத்துக :*

1. எழுதுகிறபொழுது ஏற்படுகிற ஒரு 'அட் ஹோம்' உணர்ச்சி எனக்கு வேறு வேலைகளில் ஏற்படுவதில்லை. வேறு காரியங்களில் ஈடுபட்டிருக்கும் பொழுது எனது மூர்த்திகரம் சிந்திச் சிதறுவதாகத் தோன்றுவதாலும், எழுத்தில் குவிந்து என் நம்பிக்கையையும் ஆத்ம திருப்தியையும் ஏற்படுத்துவதாலும், இயற்கை இந்த ஒரு வேலைக்கே என்னைத் தயார் செய்திருக்கிறதோ என எண்ணிக் கொள்கிறேன்.

2. மனிதனின் சராசரித் தன்மையின் அழுத்தத்தினால் வெளியே பிதுங்கி-விடும் விதிவிலக்கான உண்மைகள் அலட்சியப்படுத்தப்பட்டு முக்கால் உண்மைகள் முழு உண்மைகளின் தோற்றம் கொள்கிறபொழுது, மைனாரிட்டியின் அரை உண்மையில் கலந்து கொண்டு கத்துவது தவிர்க்கமுடியாத காரியமாகவே எனக்குப்- படுகிறது.

## ❑ மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

*கடுமையான சொற்களைப் பயன்படுத்தி, கலவை வாக்கியங்களையே மிகுதியாகக் கொண்டு, கருத்தாழமாகக் கொள்கைகளையும் கோட்பாடு-களையும் விளக்குவதாக அமைகிறது சுந்தரராமசாமியின் எழுத்துமொழி நடை. வட்டார வழக்குச்சொற்கள் சிலவற்றுடன் எளிதில் புரிந்து கொள்ளமுடியாத நீண்ட கலவை வாக்கியங்களைப் பயன்படுத்தல் இவருக்கென்றே உரிய சிறப்பு அம்சமாகும்* (ideo synchrotic feature). *நடையியலார் நோக்கில் கவனித்தால் இவருடைய எழுத்துமொழி நடையில் விளக்கநடைக்கூறுகளும் விவரிப்பு நடைக்கூறுகளும் கலந்து விளங்குவதைக் காணலாம்.*

# 12. இரண்டாம் தாரமா ?

## பி. இராமமூர்த்தி

[நீதித்துறை சார்ந்த வழக்குச் சொற்களையும் மொழிநடைகளையும் வெளிப்படுத்து-வதாகவுள்ள இப்பகுதி, தமிழரல்லாதார்க்குத் தமிழ் கற்பிக்கும் பாடத்திட்டக் குறிக்கோளினைப் பிரதிபலிப்பதாக உள்ளது. "பி. இராமமூர்த்தி, B.com., B.L ஆனந்தவிகடன், 1970." என்று எழுதப்பட்டுள்ள குறிப்பினைத்தவிர இவ்வுரையிலக்கியப் பகுதியைப் பன்டைத்த ஆசிரியர் பற்றிய வேறு செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை. ஆனந்தவிகடன் அலுவலகத்திலிருந்து பெறப்பட்ட 26.6.98 ஆம் நாளிட்ட கடிதம் இதை உணர்த்துகிறது. எனினும் வித்தியாசமான சொல்லாட்சி, வாக்கியப் பயன்பாடு போன்ற சிறப்புகளைக் கருதி, இவ்வுரைப்பகுதி பாடநூலில் சேர்க்கப்பட்டுள்ளது.]

இன்று நம் சமூகத்தில் எத்தனை அபலைகள் இது போன்ற அனு-பவத்துக்கு ஆளாகியிருக்கிறார்களோ, பாவம்!

" டிஸ்டிரிக்ட் கோர்ட், டிஸ்டிரிக்ட் கோர்ட் ..." பஸ் கண்டக்டர் விசிலை வாயருகில் கொண்டு போனபடி உரக்கக் கத்தினார்.

குலுங்கி நின்ற பஸ்ஸிலிருந்த அந்தப் பெண், பின் வழியாக இறங்கினாள்.

வழவழப்பான தார் ரோடு, வஞ்சிக்கப்பட்ட அந்தப் பெண்ணின் உள்ளம் போல சூடேறியிருந்தது. அவள் அணிந்திருந்த மஞ்சள் சேலை காலை வெயிலில் தகதகத்தது. நெற்றியிலே காசு அளவுக்குக் குங்குமம்; நல்ல யௌவனம் ; முதலிரவு முடித்து, தலைப்பிரசவம் காணும் பருவம்.

ஆஸ்பத்திரிப் படிகளில் ஏற வேண்டிய கால்கள், இப்பொழுது கோர்ட்டின் படிகளில் ஏறிக் கொண்டிருக்கின்றன.

தாலிச் சரடு, சேலைக்கு மேலே மார்பில் புரண்டு கொண்டிருந்தது. கயிற்றை நம்பித்தான் வழக்காட அவள் வந்திருக்கிறாள்.

கண்களில் கண்ணகியின் உறுதி இருந்தது. ஆனால் இவள் கண்ணகி இல்லை ; கண்ணம்மா!

கோர்ட் டவாலி எவ்வளவு சொல்லியும் ஜன்னல் பக்கமாக எட்டிப் பார்க்கும் கூட்டம் கலையவே இல்லை.

அவர்களது ஆர்வத்தைத் தூண்டிவிடுவது போல, எதிரிக் கூண்டில் ஒரு பெண்; அவளுக்கும் இளவயது.

"விபசார கேஸ் போல இருக்கு!" தம் கருத்தைத் தெரிவித்தார் ஒரு தடித்த மனிதர்.

"என்னடா, இந்தச் சின்ன வயசிலேயே இப்படித் திரியுதுக" என்று அங்கலாய்ப்பது போலச் சொன்னார் அவர்.

கூட்டத்தில் பின்னால் இருந்த குட்டைஆள் எம்பிஎம்பிப் பார்த்தார்.

"அட, இது வேறு கேஸ்! பக்கத்திலே புருஷங்காரன் நிக்கறாண்டா!" இழுத்தபடி சுவாரஸ்யம் இழந்து சொன்னார் அவர்.

அவர் கணக்குச் சரிதான். வாசுவும் பாரதியும் நின்று கொண்டி-ருந்தார்கள்.

மத்தளம் கொட்ட, மணப்பந்தலிலே பெரியோர்கள் வாழ்த்துக் கூற, கன்னிகாதானம் செய்யப்பட்டவள்தான் பாரதி. பலபேர் முன்னிலையில் போட்ட மூன்று முடிச்சு.

இவ்வளவு பகிரங்கமாகக் கட்டிய தாலியைத்தான் அவள் கணவன் ஜாக்கெட்டுக்குள் ஒளித்து வைக்கச் சொல்கிறான் நீதிபதியின் கண்ணில் படக்கூடாதாம்!

"பட்டால் என்னவாம்!" — எதிர்த்துப் பாரதி கேட்டாள். ஒரு பெண்-ணுக்கு எது பெருமையோ அதை ஏன் மறைக்க வேண்டும் ?

"அவ்வளவுதான்; மறுமணம் செய்து கொண்டான் என்று என்னைக் கம்பி எண்ண வைத்துவிடுவார்கள். உடந்தையாக இருந்ததற்கு உன்னையும் உள்ளே தள்ளிடுவாங்க" வாசு விளைவு களை விளக்கினான்.

"ஜெயிலுக்கு அனுப்பும் சக்தி, இந்தக் கயிற்றுக்கு இருக்குமா!" என்று அந்தப் பெண்ணுள்ளம் நினைத்தது.

ஐயர் தொட்டு, ஆசீர்வதித்துத் தந்த மாங்கல்யம்; அதைக் கழற்றி வீட்டிலேயே வைக்க மனம் வரவில்லை. கோர்ட்டுக்கு முன் வாசலில்

நுழையும் போது பத்திரமாகப் 'பாடி'யுள் பின்னைக்குத்தி வெளியே தெரியாதபடி சரி செய்துகொண்டாள். சங்கு போன்ற அவள் கழுத்தில் தெரிவதெல்லாம் கறுப்புமச்சமும் இரண்டுபவுன் முறுக்குச் செயினுந்தான்.

" கண்ணம்மா! கண்ணம்மா!" — பியூன் உரக்கக் கூவினான்.

வராந்தாவில் நின்று கொண்டிருந்த கண்ணம்மா, சேலை முந்தானையை இழுத்துப் போர்த்தபடி முன்னேறினாள்.

தன்னை வஞ்சித்த வாசுவைப் பார்த்தாள். அவனோ ஏதும் அறியாதவன் போல், எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான். பார்க்கக்கூடாது என்ற நிர்பந்தத்தில் அவன் தலை திரும்பியிருக்கிறது என்பதைக் கண்ணம்மாவினால் ஊகிக்காதிருக்க முடியவில்லை. ஒரு கணந்தான்; அவள் உள்ளம் பாறையாக இறுகியது. தன் வாழ்க்கையையே பாலைவனமாக்கிய இவனுக்கு மட்டும் தென்றலின் சுகமா ?

சாட்சிப் பெட்டியில் நின்ற கண்ணம்மா, காளியாகக் காட்சியளித்தாள். கழுத்தைச் சுற்றியிருந்த தாலிக் கயிறு சேலைக்கு முன்புறம் தொங்கிக் கொண்டிருந்தது. யதேச்சையாகப் பார்த்த வாசுவின் கண்களைக் குருடாக்கும்படி அந்த மஞ்சள் தாம்பு மின்னியது.

"இரண்டு பொம்பளெங்களைக் கைவச்சுட்டான் போல் இருக்கு!"— அதே தடித்த மனிதர் தமக்குத் தாமே பேசிக் கொண்டார்.

"இல்லேப்பா! முதல்சம்சாரம் இருக்க, வேறு ஒருத்தியைக் கண்ணாலம் செஞ்சிருக்கான். இப்ப வசமா மாட்டிக்கிட்டான்!" என்று குட்டை ஆள் தம் சட்டஞானத்தை வெளிப்படுத்தினார்.

"ஒண்ணைக் கட்டிட்டு மாரடிக்கறதே கஷ்டம்! இதிலே இன்னொண்ணு!" அவரது வாழ்க்கை அனுபவம் போலும்! சலிப்பாகச் சொல்லிக் கொண்டார்.

முன் வரிசையில் உட்கார்ந்திருந்த சட்டநாதன் எழுந்தார். கறுப்புக் கவுனில் முன்னே தொங்கிய பட்டைக் கயிற்றை இழுத்துச் சரிசெய்து கொண்டார்.

"இட் இஸ் அன் அன்ஃபார்சுனேட் கேஸ் ஆப் பிகாமி, யுவர் ஆனர்" (இரண்டாம் மணம் செய்து கொண்ட துரதிருஷ்டமான வழக்கு)

என்று தொடங்கியதாலே வாதாடும் அவர் உள்ளத்தில், ஒருத்தியின் வாழ்வு சூறையாகப் போகிறதே என்ற சோகம் இருந்தது.

"உனக்கு யாரம்மா வக்கீல் ?" கண்ணம்மாவைப் பார்த்துக் கேட்டார் நீதிபதி.

"யாரும் இல்லை" என்று சொல்வதுபோலத் தலையைப் பக்க– வாட்டில் ஆட்டினாள் அவள்.

"பெற்றோர்கள் யாரும் இல்லையா ? அவர்கள் ஏதாவது ஏற்பாடு செய்திருக்கக் கூடாதா?"

" அவர்கள் யாரும் வரமாட்டார்கள். சம்பந்தம் இல்லையென்று அவர்கள் தலைமுழுகிவிட்டார்கள்!"

புருவத்தை உயர்த்தி நீதிபதி அவளைப் பார்த்தார்.

'நான் ஓடிப்போனவள்...." குரல் கம்மிற்று. " என்னைச் சேர்த்துக் கொள்ள மாட்டாங்க . . . "

கண்களில் நீர் முட்டியது. கோர்ட் அறையில் மின்சாரம் தாக்கிய மௌனம்.

"அவர் கூட ஓடிவந்தவர்தான்! ஆனால், இன்னைக்குச் சம்சாரம், குடும்பம், பாசம், பந்தம் எல்லாம் இருக்கு. அவரை யாரும் தள்ளி வைக்கவில்லை. நான்தான் வேண்டாதவள்! நடத்தை கெட்டவள்! ஆண் வர்க்கத்தின் இரட்டை வேஷத்தை அனுமதிக்கிறாங்க! ஆனால் பெண் செய்தா அது தப்பு ! தள்ளி வைக்கறாங்க ..."

பாண்டியனது கொலுவில் சிலம்பை எறிந்து முத்துக்களைச் சிதற அடித்தது போல் கண்ணம்மாவின் வார்த்தைகள் தெறித்தன.

சமூக அநீதிபற்றி எவ்வளவோ பெண்கள் இதற்கு முன்பும் குமுறியிருக்கிறார்கள். இது ஒன்றும் புதிதில்லை. இது ஆண்கள் உலகம். நியாயம் வழங்க அவர்கள் தயாராயில்லை.

"இந்தாம்மா, இது கோர்ட்! வளவளன்னு பேசாதே. கேக்கறதுக்குப் பதில்சொன்னா போதும் ஒ!" – நிலைமை எக்கச்சக்கமாகப் போவதைப் பார்த்து, கோர்ட் குமாஸ்தா இடைமறித்தார். வக்கீல் இல்லாமல், தாமே

வாதடுகிற வழக்குகளில் எல்லாம் ஒரு கண்டிப்பு இல்லையென்றால், கண்டதையும் பேசிக் கொண்டே இருப்பார்கள் என்பது அவருடைய சித்தாந்தம்.

"என்ன அம்மா! உன் வழக்கைப் பற்றிச் சொல்லு" என்று நீதிபதி கனிவாகக் கேட்டார்.

கண்ணம்மா, "இதோ இவர் என் கணவர்" என்று வாசுவைச் சுட்டிக் காட்டியபடி ஆரம்பித்தாள். "வைகாசி 18-ஆம் தேதி பேரூர்ப் பட்டீசுவரன் கோவிலில் என்னைக் கல்யாணம் செய்து கொண்டார். என் வாழ்க்கையைப் பாழாக்கி வேறு மனைவியைக் கட்டிக் கொண்டதற்கு பிராது கொடுத்திருக்கிறேன்." ரத்தினச் சுருக்கமாக தன் வழக்கைச் சமர்ப்பித்தாள்.

"ஏனம்மா! உனக்கும் வாசுவுக்கும் கல்யாணம்ாச்சுங்கறயே; சாட்சி உண்டா?" நீதிபதி கேட்டார்.

" சாட்சிங்களா ? ... இதோ, இந்தத் தாலிதான் சாட்சி" என்று சொல்லியபடி வலது கையால் கழுத்தைச் சுற்றி இருந்த தாலியை இழுத்து, தூக்கிக் காட்டினாள்.

"வீட்டைவிட்டு வந்திடு, கடைசிவரை காப்பாற்றுவேன்னு சத்தியம் செய்து எழுதின கடிதம் இருக்குங்க, அவர் கைப்படவே எழுதியது" என்று சொல்லியபடி ஒரு கடிதத்தை எடுத்து நீட்டினாள் கண்ணம்மா.

குற்றவாளிக்கூண்டில் நின்று கொண்டிருந்த வாசுவுக்கு குப்பென்று வேர்த்தது. காதல் கடிதம் இப்பொழுது கழுத்தறுக்கிறது!

அந்த கடிதத்தை நீதிபதி வாங்கிப் படித்தார். அவர் உதடுகளின் விளிம்பில் இளம் புன்முறுவல் பூத்தது.

எப்பொழுதுமே, பிறருடைய கடிதம் மிகவும் ருசிக்கும். அதிலும் காதல் கடிதம் என்றால்!

அந்தக் கடிதம் குற்றத்தை மெய்ப்பிக்கும் முக்கியமான ரிக்கார்டாக வழக்கில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

"இரண்டாம் எதிரி பாரதியை உன் கணவர் எப்பொழுது கல்யாணம் செய்து கொண்டார் ? " நீதிபதி கேட்டார்.

"வைகாசி 18–ஆம் தேதி ... "

"உன் கல்யாணமில்லை; பாரதியுடையது ... "குற்றவாளிக் கூண்டில் நிற்கும் பாரதியைச் சுட்டிக் காட்டி தம் கேள்வி விளங்கும்படி கேட்டார் நீதிபதி.

"அதே வைகாசி 18–ஆம் தேதிதான். எனக்குத் திருமண்ம் நடந்த அதே காலையில் இரண்டு கல்யாணம்" விரக்தியுடன் பதில் அளித்தாள். கோர்ட்டே கலகலத்தது.

கிருஷ்ண பகவான்கூட ராதா, ருக்மினியை ஒரே நாளில் கைப்–பிடித்ததில்லை. ஆனால் வாசுவோ ... ?

"இந்த இரண்டாம் கல்யாணத்துக்கு ஆதாரம் ஏதாவது உண்டா ?"-- ஆர்வத்துடன் நீதிபதி கேட்டார்.

" இதோ அவருடைய திருமண அழைப்பிதழ் " -- ஆணித்தரமாகப் பதில் அளித்தாள். கண்ணம்மாள். விளிம்புகளில் மஞ்சள் தடவிய பத்திரிகை. நல்ல வெள்ளை நிறம். ஓரங்களில் ஜிகினா ஜொலிப்பு. வாசு, பாரதி என்று மணமக்களின் பெயர்கள் பெரிய எழுத்தில் அதில் அச்சிடப்பட்டிருந்தன.

சட்டநாதன் தம் நாற்காலியைத் தள்ளி முன்சென்று, அந்த அழைப்பிதழை வாங்கிப் பார்த்தார். அதே பெயர்கள்தாம். ஊர், தகப்பனார் பெயர் எல்லாமே சரிதான். தம் நெற்றியில் துளித்த வேர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டார்.

ஜூனியர் வக்கீல் ஒருவர் சீனியர் பின்னால் நின்று பத்திரிகையைப் பார்த்தார்.

"இந்தப் பத்திரிகை எங்கே அச்சிடப்பட்டது என்று அச்சுக்கூடப் பெயரைக் காணோம்" என்று சீனியர் காதில் கிசுகிசுத்தார்.

சட்டநாதனும் அந்தக் கண்டுபிடிப்பை ஆமோதிக்கும் வகையில் லேசாகப் புன்முறுவலித்தார்.

அந்தச் சிரிப்பைப் பார்த்ததும் வாசுவின் வயிற்றில் பாலூற்றிய குளுமை. சாமர்த்தியமான வக்கீலை வைத்திருக்கிறோம், எப்படியும்

ஜெயிலுக்குப் போக விடமாட்டார் என்ற நம்பிக்கையும் கூடவே துளிர்த்தது.

திருமண அழைப்பிதழ் கோர்ட்டில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

கண்ணம்மாவின் சாட்சி முடிந்தது. இந்த ஒரு சாட்சியே போதும். வலுவான ரிக்கார்டுகளின் மூலம் குற்றம் மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது; குறுக்கு விசாரணையில் கேஸ் விரிசல் விட்டால் தவிர விமோசனம் இல்லை!

சட்டநாதன் எழுந்தார்; வாசுவின் நம்பிக்கையும் எழுந்தது. மக்களின் ஆர்வமும் தலைதூக்கியது.

"ஏம்மா! வாசுவுடன் எவ்வளவு காலமாகப் பழக்கம் ?" – சட்டநாதன் எதிரியைக் கைகாட்டியபடி கேட்டார்.

"நாங்கள் ஒன்றாகவே படித்தவர்கள். ரொம்ப வருஷமாகத் தெரியும்."

" ஓஓ! அப்படியென்றால் பள்ளிக்கூடக் காதலர்கள் ... !"

கண்ணம்மா ஒன்றும் பேசவில்லை. தலையைக் குனிந்துகொண்டாள்.

"இருவரும் தினமும் சந்தித்துக் கொள்வீர்கள்; பேசிக்கொள்வீர்கள் . . இதைத் தவிர ?. . . "

"கடிதத் தொடர்பும் உண்டு" -இதை சொல்லியபடி, ஓரக் கண்களால் வாசுவைப் பார்த்தாள்.

வகுப்புகள் நடக்கும்போது, பரிமாறிக் கொள்ளும் அதே பார்வையைத் தான் இன்றும் வீசுகிறாள் என்று வாசுவின் மனம் நினைவுபடுத்தியது. அன்று குளிர்ச்சியாக இருந்தது ; இன்றோ அனலாகக் கொதிக்கிறதே.

"இதைத் தவிர ஏதாவது உறவு உண்டா ?" – சாட்சியென்று பெட்டி ஏறினால், கண்டதையும் கேட்பார்கள் என்று கண்ணம்மா கேள்விப்பட்டிருக்கிறாள். அதற்காக அந்தரங்கம், உடலுறவு எல்லாங்கூடச் சொல்ல வேண்டுமா என்று யோசித்தாள்.

" உனக்கும் வாசுவுக்கும் உறவு உண்டா? அதாவது சொந்தம்முறை உண்டா?" சட்டநாதன் கேள்வியைத் தெளிவுபடுத்த மீண்டும் கேட்டார்.

கண்ணம்மாவுக்கு லேசாக மூச்சு திரும்பியது.

"இல்லை. அவர் வேறு ஜாதி. நான் வேறு ஜாதி ... "

" உங்கள் காதல், பெற்றோர்களுக்கும் தெரியுமா?"

"முதலில் தெரியாது."

" அப்படியானால் ரகசியமாக வளர்த்தீர்களா?"

ஆம் என்பது போல், மெல்லத் தலையாட்டினாள் கண்ணம்மா.

"உங்கள் திருமணத்தைப் பெற்றோர்கள் ஆமோதிக்கவில்லை".

"அதனால்தான் ஓடிவந்தேன்"

"இந்தக் காலத்துப் பெண்கள் கல்யாணம் என்றால் ஓடியும் வருவார்கள்; பறந்தும் வருவார்கள் !" என்றார் சட்டநாதன். கிண்டலைக் கேட்டுக் கோர்ட்டே குபீரென்று சிரித்தது.

கண்ணாமாவும் தலைகுனிந்து சிரிப்பை அடக்க முயன்றாள். எவ்வளவோ காலத்துக்குப் பின்பு சிரிக்கிறாள்.

"இந்தத் திருமணப் பத்திரிகையை ஆதாரமாகக் கொண்டு வாசு - பாரதியைத் தம்பதிகள் என்று கூறுகிறீர்கள் ... "

"ஆம்! பின்னாலும் விசாரித்து ஊர்ஜிதம் செய்து கொண்டேன். இப்பொழுது குடும்பமே நடத்துகிறார்கள்".

"இந்தப் பத்திரிகையின்படி இவர்கள் விவாகம் என்றைக்கு நடந்தது?"

" வைகாசி 18-ஆம் தேதி. எனக்குக் கல்யாணமான அதே நாளில்."

"அதாவது ஒரே நாளில் இரண்டு கல்யாணம்!" - சட்டநாதன் உறுதிப்படுத்தினார்.

கேள்வியில் கொக்கியிருப்பதுபோல உணர்ந்த கண்ணம்மா, "இரண்டு கல்யாணந்தான். ஆனால் வெவ்வேறு நேரம்; வெவ்வேறு இடம்" என்றாள் விட்டுக் கொடுக்காமல்.

"வெவ்வேறு பெண்கள் என்பதையும் சேர்த்துக் கொள்ளுங்களேன்!" - சட்டநாதன் சொன்னார். மீண்டும் குபீரென்று சிரிப்பு.

"இந்தப் பத்திரிகையில் திருமண முகூர்த்தம் எத்தனை மணிக்கு என்று குறிப்பிட்டிருக்கிறது ?"

" காலை 5-30 இலிருந்து 6-15 மணிக்குள்"

"உங்களுக்குத் தாலி கட்டியபோது மணி எவ்வளவு ?"

"பத்து மணி இருக்கும்".

"ஆக, பாரதிக்குத் தாலி கட்டிச் சுமார் நான்கு மணி நேரங்கழித்துக் கழுத்தில் தாலி ஏறுகிறது. சரிதானா ?"

"சரி" என்று தலையாட்டினாள் கண்ணம்மா.

"கோர்ட்டில் ஒப்படைத்த இந்தத் திருமணப் பத்திரிகை உங்கள் தகப்பனாருக்கு அனுப்பிய அழைப்பிதழ்; இதோ விலாசங்கூட இதிலேயே எழுதப்பட்டிருக்கிறது" என்று கண்ணம்மாவிடம் நீட்டினார் வக்கீல்.

"ஆம், இது என் தந்தைக்கு வந்ததுதான்."

"இந்தப் பத்திரிகையைப் பார்த்த பின்புதான் நீங்கள் வீட்டைவிட்டு ஓடிப்போய்த் தம்பதிகளாக முடிவு செய்தீர்கள் ?"

"என்னுடைய முடிவு மட்டுமில்லை; அவரும் ஒப்புக் கொண்டது-தான்" — வாசுவைச் சுட்டிக் காட்டியபடி பதில் சொன்னாள்.

"வாசுவின் பெற்றோர்கள் முடிவு செய்த கல்யாணத்தை எப்படியும் நிறுத்திவிட வேண்டும் என்று முடிவு செய்தீர்கள்."

கண்ணம்மா பதில் சொல்லவில்லை. ஆனால் மௌனமாக நின்றாள். மௌனத்தின் பொருள் "ஆம்" என்பதுதான்.

சட்டநாதன் மேலும் தொடர்ந்தார்.

"வாசுவை நீங்கள் கைபிடிக்கும்போது அவர் புதுமாப்பிள்ளை உடைகளுடன் இருந்தாரா?"

"இருந்தார்".

"காலையில் நடந்த கல்யாணத்துக்குப் போட்டிருந்ததுதான் அது என்பது உங்களுக்குத் தெரியுமில்லையா?" — சட்டநாதன் இதைக் கேட்கும்போது குரலைச் சற்று உயர்த்திக் கேட்டார்.

"நான் அவருடைய கல்யாணத்துக்குப் போகவில்லை. அவர் போட்டிருந்தாரா என்ன என்பதை நான் எப்படிப் பார்த்திருக்க முடியும்?"

சூடாகவே பதில் இருந்தது.

"கல்யாணத்துக்கு நீங்களோ போகவில்லை என்கிறீர்கள். இரண்டாம்தாரம் கல்யாணம் செய்து கொண்டார் என்கிறீர்கள். ஒன்றுக்கொன்று முரணாக இருக்கிறதே!" வழக்கிலே ஓட்டை விழுவதைக் காட்டுவதைப் போல் எடுத்துக் கூறினார் சட்டநாதன்.

"அவரே சொன்னார், கல்யாண வீட்டிலிருந்து வந்துவிட்டதாக. வேறு என்ன வேண்டும்?"

பதிலைக் கேட்டவுடன் சட்டநாதன் ஒரு துள்ளு துள்ளினார்.

"ஆக, உங்களுக்குத் தெரியும்; பாரதியோடு, திருமணத்தை முடித்துக் கொண்டு தான் வாசு வந்திருக்கிறார் என்று தெரிந்தேதான், முழுச் சம்மதத்தோடு, நீங்கள் கழுத்தை நீட்டி இருக்கிறீர்கள்! "

"ஆமாம்; தெரியும். ஓடிப்போய் விடலாம் என்றார்; நம்பினேன்". பெண் புத்தி கெட்டிருப்பதை அவள் ஒப்புக் கொண்டாள்.

"யுவர் ஆனர், இந்த ஒரே பதிலினால் கண்ணம்மாவின் வழக்கு வம்பு வழக்காகப் போய்விட்டது". --சட்டநாதன் நீதிபதியைப் பார்த்துப் பேசினார்.

" வாசுவைக் கோர்ட்டுக்கு இழுத்து மானபங்கப்படுத்த வேண்டும்" என்ற பழி உணர்ச்சிதான் மேலோங்கி நிற்பதை நம்மால் பார்க்க முடிகிறது.

வாசுவைத தம் கணவனாக வரித்துக் கொண்டபோதே அவர் மாற்றாரின் உடைமை என்பதைச் சாட்சி நன்கு தெரிந்து கொண்டிருக்கிறார். இருந்தும் மனமுவந்து, தம்மையும் தம் வாழ்வையும் பணயம்வைத்து ஆடுவதுபோல ஒப்புவித்திருக்கிறார் என்றால், தெரிந்தே வலிய ஏற்றுக் கொண்ட வாசுவை, 'அவர் வேறு திருமணம் செய்து கொண்டார்' என்று எப்படிக் குற்றஞ்சாட்ட முடியும்?" சட்டநாதன் குரலை உயர்த்திக் கேள்வியை வீசினார்.

எல்லோர் முகத்திலும் சந்தேகக் குறி! ... ஏதோ குழப்பமாக இருக்கிறது! சட்டநாதன் மீண்டும் தெளிவுபடுத்தினார்; "கடைசியாகப் பிறந்த பெண் குழந்தை ஒன்று, தன் தாயைப் பார்த்து, என் சம்மதம் இல்லாமல் எப்படி என் அக்காவைப் பெறலாம்? " என்று வம்பு செய்தால், எவ்வளவு அசட்டுத் தனமானதோ, அதே போலத்தான் பின்னால் வந்த கண்ணம்மாவின் பிராதும் வழக்கும்" -- சட்டநாதன் பேச்சை நிறுத்தினார்.

"ஆக, கண்ணம்மாள் கூறியபடி சம்பவங்கள் நடந்திருந்தால் வாழ்விழந்து நிற்கும் அவர்மீது நமக்குப் பரிதாபம் ஏற்படுவது இயல்பே. ஆனால் பரிதாபம் வேறு; நீதி வேறு. சமூகம் வேண்டுமென்றால் 'வாசுவின் செய்கை சரி இல்லை' என்று குறை கூறலாம். ஆனால் 'சட்டத்தின் முன் வாசுவும் பாரதியும் நிரபராதிகள்.' குற்றம் என்று

சட்டத்தின் தேவைகளை ருசுப்படுத்தினால் தவிர எப்படித் தண்டனை விதிக்க முடியும் ?" விடுதலை முரசு கொட்டியது போல இருந்தது அவர் வாதம்.

கண்ணம்மா, சாட்சிப் பெட்டியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தாள்...

பாவம். அபலைப்பெண். வழக்கையும், வாழ்வையும் இழந்த சோர்வு அவள் முகத்திலே சோகமாடின.

*குறிப்பு:* கோவையிலிருந்து நான்காவது மைலில் உள்ள கிராமத்தில் ஒரு பிள்ளையார் கோவில். தனியாகப் போகாதீர்கள்! ஒரு பைத்தியம், "வாசு" என்று உங்களைப் பிடித்துக் கொள்ளும்.

மூலம் : ஆனந்த விகடன், 1970

* * * * * *

## ❑ சொற்பொருள் குறிப்பு – பாடவரிசைப்படி (Note on Vocabulary)

| | | |
|---|---|---|
| *(இரண்டாம்) தாரம்* | – | *(இரண்டாவது) மனைவி*; (second) wife |
| குலுங்கு (itr.v) | – | *அதிர்ந்து ஆடு(தல்)*; shake (when doing something) |
| *வழவழப்பான* | – | slippery |
| வஞ்சிக்கப்படு (v) | – | கொடுமையாக ஏமாற்றப்படுதல் ; be cheated/ betrayed crually |
| *தகதகத்தது* (v) | – | shined |
| *பிரசவம்* (n) | – | child birth |
| *தாலிச்சரடு* (n) | – | auspicious thread worn by the married woman tied on the occation of the marriage by the bridegroom |
| *புரள்* (int.v), *புரண்டு* (vp) | – | *பக்கவாட்டில் உருளுதல்*; turn on sides |
| *வழக்காடு* (v) | – | argue |
| *ஆர்வம்* (n) | – | eagarness |
| *கலை* (v). | – | disperse |
| *தூண்டிவிடு* (v) | – | stimulate |
| *எதிரிக்கூண்டு* (n) | – | enemy's (witness) box |

| | | |
|---|---|---|
| விபசாரம் (n) | – | prostitution |
| தடி (v) | – | become stout |
| (இப்படித்) திரியுதுக | – | wandering (like this) |
| அங்கலாய் (v) | – | feel sorry; be frustrated |
| எம்பு (v) | – | stand on toe |
| சுவாரஸ்யம் இழ (v) | – | loose interest |
| மத்தளம் கொட்டு (v) | – | beating of drum during marriage |
| பகிரங்கமாக (adv) | – | openly / publicly |
| ஒளித்துவை (tr.v) | – | hide |
| கண்ணில் படு (v) | – | to be seen |
| மறை (tr. & int. v) | – | hide |
| மறுமணம் (n) | – | remarriage |
| கம்பி எண்ணு (idiomatic) (v) | – | be in the jail |
| உடந்தை (n) | – | connivance; abetment; cooperative or supportive |
| விளைவு(கள்) (n) | – | consequences |
| பாடி (n) | – | bra |
| மச்சம் (n) | – | mole |
| முறுக்குச் செயின் (n) | – | twisted gold chain (ornament) |
| போர்த்து (v) | – | cover |
| வஞ்சி (v) | – | betray; cheat |
| ஊகி (v) | – | guess |
| நிர்ப்பந்தம் (n) | – | compulsion |
| இறுகு (v) | – | become hard |
| சாட்சி (n) | – | witness |
| குருடாக்கு (v) | – | make blind |
| பொம்பளெங்க (dialect)<br>பெண்பிள்ளைகள் (standard form) | – | women |
| கைவச்சுட்டான் (idiomatic) | – | (பிழைப்பைக்) கெடுத்துவிட்டான்; |
| சலிப்பாக (adv) | – | சோர்வாக; in disgust |
| 'பிகாமி' | – | bigamy (n), crime of marrying a person while still legally married to some one else. |

| | | |
|---|---|---|
| கூறையாகப் போகிறதே ! | – | going to be spoiled |
| தலைமுழுகு (idiomatic) | – | முற்றிலுமாகக் கைவிடுதல், ; wash off |
| குரல் கம்மிற்று | – | voice become low |
| நீர்முட்டு (v) | – | sprouting of tears |
| தாக்கு (v) | – | attack |
| நடத்தை (n) | – | behaviour |
| பாண்டியனது கொலு (n) | – | throne of the Pandiya king; assembly; durbar |
| சிதற அடி (tr.v) | – | to make splash |
| தெறி (v) | – | splash |
| குமுறு (v) | – | feel mental distress |
| வளவளன்னு (வளவள என்று) | – | round about way, unendingly, pointlessly |
| எக்கச்சக்கமாக (adv) | – | to a large extent |
| இடைமறி (v) | – | intervene |
| கண்டிப்பு (n) | – | strictness |
| கண்டதையும் பேசிக்கொண்டு | – | speaking unrelated things |
| கனிவாக (adv.) | – | affectionately, mildly |
| சிறுக்கி (n) | – | கீழ்த்தரமானவள்; woman of low character |
| பாழாக்கு (v) | – | spoil |
| பிராது (n) | – | complaint |
| சத்தியம் செய் (v) | – | make oath; swearing by god, parent, etc. |
| கைப்பட | – | by (own) hand |
| நீட்டு (v) | – | give |
| கழுத்தறு (idiomatic) | – | disappoint |
| விளிம்பு (n) | – | edge |
| புன்முறுவல் (n) | – | smile |
| ருசி (n) | – | taste |
| மெய்ப்பி (tr.v) | – | prove |
| ஏற்றுக்கொள் (v) | – | accept |
| விரக்தி (n) | – | frustration |
| கலகலத்தது (v) | – | became shaky |

| | |
|---|---|
| ஆதாரம் (n) | – support; proof |
| அழைப்பிதழ் (n) | – invitation card |
| ஆணித்தரமாக | – உறுதியாக; emphatically, firmly |
| தடவு (v) | – பூசு, தேய்; apply (colour, etc.) smear, rub |
| ஜொலிப்பு (n) | – glittering |
| மணமக்கள் (n) | – bridal pair, newly married couple |
| அச்சிடு (v) | – print |
| துளித்த (v) | – spilled |
| துடை (v) | – wipe |
| அச்சுக்கூடம் (n) | – printing press |
| கிசுகிசு (v) | – murmur |
| கண்டுபிடிப்பு (n) | – discovery |
| குளுமை (n) | – coolness |
| சாமர்த்தியம் (n) | – talent / tactfulness |
| தளிர் (v) | – sprout / spring |
| விரிசல் விடு (v) | – break / crack |
| விமோசனம் (n) | – relief |
| கைகாட்டு (v) | – point out |
| தலையைக் குனிந்துகொண்டாள் | – put down the head |
| கொதி (v) | – boil |
| (சாட்சிப்) பெட்டி (n) | – (witness) box |
| அந்தரங்கம் (n) | – privacy; confidentiality; personal |
| உடலுறவு (n) | – sexual relation / body contact |
| ஆமோதி (v) | – ஒப்புக்கொள் ; agree with; accept |
| கிண்டல் (n) | – mocking / mock |
| தலைகவிழ் (v) | – lowering the head (out of shy or insult or shame) |
| ஊர்ஜிதம் செய் (v) | – re-assure |
| விவாகம் (n) | – திருமணம்; marriage |
| கொக்கி (idiomatic) | – hook (here, tricky) |
| விட்டுக்கொடு (v) | – make allowance for; accommodate (other's interests) |

| | | |
|---|---|---|
| ஒப்படை (v) | – | entrust |
| தம்பதி (n) | – | husband and wife |
| நிறுத்திவிடு (v) | – | get it stopped |
| முரண் (v) | – | controversy |
| ஒட்டை (n) | – | hole |
| துள்ளு (v) | – | jump |
| வம்பு வழக்கு (n) | – | false case |
| இழு (v) | – | pull |
| மானபங்கம் (n) | – | disgrace, dishonour / outrage (against woman) |
| பழிஉணர்ச்சி (n) | – | feeling of revenge |
| மாற்றாரின் உடைமை (n) | – | others belonging |
| பணயம் (n) | – | bet |
| வலிய (v) | – | voluntarily |
| அசட்டுத்தனம் (n) | – | foolishness |
| நிரபராதி (n) | – | குற்றம் அற்றவன் / செய்யாதவன் ; one who is innocent / not guilty |
| ருசுப்படுத்து (v) | – | prove |
| அபலைப் பெண் (n) | – | ஆதரவற்ற பெண் ; helpless woman |

## ☐ பயிற்சி (Exercise)

I. *நீதித்துறையில் (Judicial dept.) பயன்படுத்தப்படும் சிறப்புச் சொற்கள் ஏதேனும் ஐந்தினை பாடப்பகுதியிலிருந்து எடுத்து அவற்றிற்குப் பொருள் தருக.*

எ.கா. : 'கேஸ் ஆப் பிகாமி, குற்றவாளிக்கூண்டு போன்றவை

II. *கோடிட்ட இடத்தை வினையெச்சம் (vp) கொண்டு நிரப்புக.*

1. ஐயர் தொட்டு, ஆசீர்வதித்துத் தந்த மாங்கல்யம் ; அதைக் ———— வீட்டிலேயே வைக்க மனம் வரவில்லை. (கழற்று)
2. பாண்டியனது கொலுவில் சிலம்பை ———— முத்துக்களைச் சிதற அடித்தது போல் கண்ணம்மாவின் வார்த்தைகள் தெறித்தன. (எறி)
3. என் வாழ்க்கையைப் ———— வேறு மனைவியைக் கட்டிக் கொண்டதற்கு பிராது கொடுத்திருக்கிறேன். (பாழாக்கு)

4. "இந்தத் திருமணப் பத்திரிகையை —————— வாசு – பாரதியைத் தம்பதிகள் என்று கூறுகிறீர்கள்... " (ஆதாரமாகக்கொள்)

5. "இந்தப் பத்திரிகையைப் பார்த்த பின்புதான் நீங்கள் வீட்டை விட்டு —————— தம்பதிகளாக முடிவு செய்தீர்கள் ? " (ஓடிப்போ)

III. *பொருத்தமான ஒன்றைத் தேர்ந்தெடுத்து வாக்கியத்தை முழுமையாக்குக.*

| | |
|---|---|
| 1. கண்களில் கண்ணகியின் உறுதி இருந்தது. | அ. ஆனால் வெவ்வேறு நேரம்; வெவ்வேறு இடம் |
| 2. தன்னை வஞ்சித்த வாசுவைப் பார்த்தாள். | ஆ. ஆனால் இவள் கண்ணகி இல்லை; கண்ணம்மா! |
| 3. ஆண் வர்க்கத்தின் இரட்டை வேஷத்தை அனுமதிக்கிறாங்க! | இ. ஆனால் பெண் செய்தா அது தப்பு ! தள்ளி வைக்கறாங்க ... |
| 4. இரண்டு கல்யாணந்தான். | ஈ. ஆனால் பரிதாபம் வேறு; நீதி வேறு. |
| 5. வாழ்விழந்து நிற்கும் அவர்மீது நமக்குப் பரிதாபம் ஏற்படுவது இயல்பே. | உ. அவனோ ஏதும் அறியாதவன் போல், எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான். |

IV. *ஒரு குழந்தையின் அழகை 5 வாக்கியங்களில் வருணித்து எழுதுக.*

*எ.கா.: வழவழப்பான தார் ரோடு, வஞ்சிக்கப்பட்ட அந்தப் பெண்ணின் உள்ளம் போல சூடேறியிருந்தது. அவள் அணிந்திருந்த மஞ்சள் சேலை காலை வெயிலில் தகதகத்தது. நெற்றியிலே காசு அளவுக்குக் குங்குமம்; நல்ல யௌவனம் ; முதலிரவு முடித்து, தலைப்பிரசவம் காணும் பருவம்.*

V. *எ.கா.வில் உள்ளபடி உருவகத் (metaphorical) தொடர் அடங்கிய வாக்கியங்கள் ஐந்தினை எழுதுக.*

*எ.கா. பாறையாக இறுகியது, காளியாகக் காட்சியளித்தாள்*

VI. *எ.கா.வில் உள்ளது போல் எதுகைத் தொடர்கள் இரண்டையும் மோனைத் தொடர்கள் மூன்றையும் எழுதுக.*

*எ.கா. அன்று குளிர்ச்சியாக இருந்தது; இன்றோ அனலாகக் கொதிக்கிறதே.*

*காதல் கடிதம் இப்பொழுது கழுத்தறுக்கிறது !*

VII. *இடம் சுட்டிப் பொருள் விளக்கம் தருக. (Odd numbered ones are for oral exercises)*

1. "விபசார கேஸ் போல இருக்கு ! "
2. "என்னடா, இந்தச் சின்ன வயசிலேயே இப்படித் திரியுதுக"
3. "அட, இது வேறு கேஸ் ! பக்கத்திலே புருஷங்காரன் நிக்கறாண்டா!"
4. "அவ்வளவுதான்; மறுமணம் செய்து கொண்டான் என்று என்னைக் கம்பி எண்ண வைத்துவிடுவார்கள். உடந்தையாக இருந்ததற்கு உன்னையும் உள்ளே தள்ளிடுவாங்க"
5. "ஜெயிலுக்கு அனுப்பும் சக்தி, இந்தக் கயிற்றுக்கு இருக்குமா!"
6. "இரண்டு பொம்பளெங்களைக் கைவச்சுட்டான் போல் இருக்கு ! "
7. "ஒண்ணைக் கட்டிட்டு மாரடிக்கறதே கஷ்டம்! இதிலே இன்னொண்ணு!"
8. "இட் இஸ் அன் அன்ஃபார்சுனேட் கேஸ் ஆப் பிகாமி, யுவர் ஆனர்"
9. "அவர்கள் யாரும் வரமாட்டார்கள். சம்பந்தம் இல்லையென்று அவர்கள் தலைமுழுகிவிட்டார்கள்!"
10. "ஆண் வர்க்கத்தின் இரட்டை வேஷத்தை அனுமதிக்கிறாங்க! ஆனால் பெண் செய்தா அது தப்பு ! தள்ளி வைக்கறாங்க ..."
11. " சாட்சிங்களா ? ... இதோ, இந்தத் தாலிதான் சாட்சி"
12. "வீட்டைவிட்டு வந்திடு, கடைசிவரை காப்பாற்றுவேன்னு சத்தியம் செய்து எழுதின கடிதம் இருக்குங்க, அவர் கைப்படவே எழுதியது"
13. " ஓ ஓ! அப்படியென்றால் பள்ளிக்கூடக் காதலர்கள் ... !"
14. "இருவரும் தினமும் சந்தித்துக் கொள்வீர்கள்; பேசிக்கொள்வீர்கள்... இதைத் தவிர ? ... "
15. "இந்தக் காலத்துப் பெண்கள் கல்யாணம் என்றால் ஓடியும் வருவார்கள்; பறந்தும் வருவார்கள் !"
16. "என்னுடைய முடிவு மட்டுமில்லை; அவரும் ஒப்புக் கொண்டதுதான்"
17. "வாசுவை நீங்கள் கைபிடிக்கும்போது அவர் புதுமாப்பிள்ளை உடைகளுடன் இருந்தாரா ?"
18. "ஆமாம்; தெரியும். ஓடிப்போய் விடலாம் என்றார்; நம்பினேன்".

19. " வாசுவைக் கோர்ட்டுக்கு இழுத்து மானபங்கப்படுத்த வேண்டும்"

20. " கடைசியாகப் பிறந்த பெண் குழந்தை ஒன்று, தன் தாயைப் பார்த்து, என் சம்மதம் இல்லாமல் எப்படி என் அக்காவைப் பெறலாம் ?"

VIII. *சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.*

1. வழவழப்பான
2. தகதகத்தது
3. எம்பி எம்பி
4. சுவாரஸ்யம் இழ
5. கம்பி எண்ணு
6. மச்சம்
7. நீர்முட்டு
8. வளவளன்னு
9. எக்கச்சக்கம்
10. கலகலத்தது
11. கழுத்தறு
12. ஆணித்தரம்
13. விரிசல் விடு
14. கைகாட்டு
15. கழுத்தை நீட்டு
16. மானபங்கப்படுத்து
17. பழி உணர்ச்சி
18. நிரபராதி
19. விடுதலை முரசு
20. பணயம் வை

IX. *ஓரிரு வாக்கியங்களில் விடை எழுதுக.*

1. பாரதி என்பவள் யார் ?
2. கண்ணம்மாவின் வழக்கு என்ன ? சாட்சிகள் எவை ?
3. வைகாசி 18–ஆம் தேதி நடந்த நிகழ்ச்சிகள் யாவை ?
4. கண்ணம்மா – வாசு இவர்களின் உறவை விளக்குக.
5. கோர்ட்டில் எல்லோரும் சிரித்ததற்கான காரணம் என்ன ?
6. சட்டநாதன் எப்படி வாதாடினார் என்பதன் சுருக்கம்.
7. இந்தப் பாடத்திலிருந்து தெரிந்துகொள்ளும் திருமண முறைகள்.

## ❑ பண்பாட்டுக் குறிப்பு (Note on Culture)

*கண்ணகி* : இளங்கோவடிகள் எழுதிய சிலப்பதிகாரக் காப்பியத்தின் கதைத் தலைவி. தன் உறுதியாலும் கற்பின் சக்தியாலும் மதுரை நகரத்தை எரித்தவள். சிறந்த குணமுடைய பெண்களைக் குறிப்பிடும்போது கண்ணகியை ஒப்பிட்டுக் காட்டுவது தமிழர்களின் வழக்கம்.

*கன்னிகாதானம்*: பெற்றோர் மணப்பெண்ணைத் தாரைவார்த்துக் கொடுக்கும் ஒரு திருமண நிகழ்ச்சி.

*பலபேர் முன்னிலையில் போட்ட மூன்று முடிச்சு* : மணமகள் கழுத்தில் தாலிகட்டும்போது மணமகனால் போடப்படும் மூன்று முடிச்சு. பொது வழக்கில், 'மூன்று முடிச்சு'என்றாலே தாலிக்கயிற்றில் போடப்பட்டுள்ள முடிச்சுகளைக் குறிப்பதாக அமையும்.

*சேலை முந்தானை* : the unwrapped border portion of a saree (worn by a woman); free end (of a saree).

*பொம்பளெங்களைக் கைவச்சுட்டான் போலிருக்கு* : பெண்களிடம் தகாத முறையில் நடந்து கொண்டான் என்பதைக் குறிக்கும் பேச்சு வழக்கு.

*ஒண்ணைக் கட்டிட்டு மாரடிக்கறதே கஷ்டம்! இதிலே இன்னொண்ணு!*: ஒரு மனைவியோடு வாழ்க்கை நடத்துவதே கஷ்டம். அப்படியிருக்க, இன்னொரு மனைவியைக் கட்டிக்கொள்வது மேலும் பெரிய கஷ்டம் என்னும் பொருளில் வழங்கும் பேச்சு வழக்கு.

*ஓடிப்போனவள்*: திருமணத்துக்காக பெற்றோர் நிச்சயித்த ஆண்மகனை விரும்–பாமல் தான் விரும்பும் ஆண்மகனோடு யாருக்கும் தெரியாமல் ஓடிவிடுபவள்.

*பெண் செய்தா அது தப்பு ! தள்ளி வைக்கறாங்க ... !*: சமுதாயக் கட்டுப்பாடு–களைக் கடைபிடிக்காத பெண்களையும் அவர்களது குடும்பத்தாரையும் மற்றவர்–களின் இன்பதுன்பங்களில் கலந்து கொள்ளவிடாமல் ஒதுக்கிவைக்கும் வழக்கம்.

*விளிம்புகளில் மஞ்சள் தடவிய பத்திரிகை*: திருமணம் போன்ற மங்கல அல்லது சுப நிகழ்ச்சியைக் குறிப்பதற்கு அழைப்பிதழில் மஞ்சள் (turmeric paste) தடவிக் கொடுப்பது இந்து (Hindu) சமுதாயத்தைச் சேர்ந்தவர்களின் வழக்கமாக இருந்து வருகிறது.

*முகூர்த்தம்*: திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகளை நடத்துவதற்காகப் (புரோகிதர்களால்) குறிப்பிடப்படும் நேரம்; நல்ல நேரம்.

*வழக்கில் ஓட்டை விழுவது* : the loopholes in the suit / case

*வம்பு வழக்கு* : the suit / case (filed) with hidden intention; case with a bad motive.

*பணயம் வைத்து ஆடு* : play by betting (one's life)

*விடுதலைமுரசு கொட்டு* : beating the drums is one of the practices being followed on victory celebrations

## மொழிநடைக் குறிப்பு (Note on Language Style)

அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தப்படும் இயல்பான சொற்களையும் சொற்றொடர்களையும் பிரதிபலிக்கிற விளக்க (descriptive) நடையிலும், டவாலி, குறுக்குவிசாரணை, குற்றவாளிக் கூண்டு, வம்பு வழக்கு போன்ற நீதி மன்றம் சார்ந்த பேச்சுவழக்குகளைக் கொண்ட விவரிப்பு (narrative) நடையிலும் அமைந்துள்ளது இப்பாடப்பகுதி. நிகழ்ச்சிகளின் வேகத்தொடர்ச்சி குன்றாமல் ஆக்கப்படும் உரைநடையிலக்கியப் பகுதிகளில் இந்நடைகள் கையாளப் படுகின்றன.

- இப்பகுதியில் பதினெட்டுச் செய்யுள் பகுதிகள் உள்ளன. அவை : தொல்காப்பியம் ○ புறநானூறு ○ குறுந்தொகை ○ பட்டினப்பாலை ○ திருக்குறள் ○ நான்மணிக்கடிகை ○ சிலப்பதிகாரம் ○ திருமந்திரம் ○ திருவாசகம் ○ திருமாலை ○ சீவக சிந்தாமணி ○ கம்பராமாயணம் ○ கலிங்கத்துப்பரணி ○ ஆத்திசூடி ○ பாரத சமுதாயம் ○ சங்கநாதம் ○ திரையிசைப் பாடல் ○ புதுக்கவிதைகள்

- இவை பல்வேறு காலங்களில் பல்வேறு கட்டமைப்புகளில் பல்வேறு காரணங்களுக்காகப் பயன்படுத்தப்பட்டு வரும் தமிழ் வடிவங்கள் சிலவற்றின் பிரதிபலிப்பே தவிர முழுமையான தமிழ் இலக்கியப் பரப்பினை வெளிப்படுத்துவன அல்ல.

- ஒவ்வொரு செய்யுள் பகுதிக்கும் உரிய தோராயமான காலம் குறிப்பிடப்பட்டிருந்தாலும் அதனை முடிந்த முடிபாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை.

- ஆசிரியரின் பெயர், காலம், நூலின் பின்னணிச் செய்திகள், செய்யுள் கருத்து, சிறப்பு, பாடல்வகை, சொற்பொருள் குறிப்பு ஆகியவை ஒவ்வொரு செய்யுளுக்குப் பின்னரும் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

- புரிந்து கொண்ட கருத்துகள் அனைத்தையும், தமிழ் பயில்வோர் தமது சொந்த நடையில் வெளிப்படுத்துவதை ஊக்குவிக்கும் வகையில் இப்பகுதியிலுள்ள ஒவ்வொரு செய்யுள் பாடத்துக்கும் வினாக்கள் மட்டுமே பயிற்சியாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

---

நோக்கம், பாடத்தெரிவு, படிநிலை வரிசை, பாடத்திட்டங்களின் ஆக்கக்கூறுகள் போன்ற அனைத்துச் செய்திகளும் பொது வடிவமைப்பு மற்றும் அறிமுகப்-பகுதிகளில் விரிவாக ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

# 1. தொல்காப்பியம்

ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே
இரண்டு அறிவதுவே அதனொடு நாவே
மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐ ந்து அறிவதுவே அவற்றொடு செவியே
ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே

– பொருள் : 582

ஆசிரியர் : தொல்காப்பியர்

காலம் : கி.மு. மூன்றாம் நூற்றாண்டு

நூல் பெயர் : தொல்காப்பியம்

பின்னணிச் செய்திகள்:

தமிழ் மொழியில் கிடைக்கப்பெற்றுள்ள தொன்மையான இலக்கண நூல். இதில் எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்கள் / பிரிவுகள் உள்ளன. இவை நூற்பா வடிவில் அமையும். கொடுக்கப்–பட்டுள்ள இந்நூற்பா தொல்காப்பியம் – பொருளதிகாரத்தில் இடம் பெறுகிறது.

கருத்து :

உயிரினங்களைப் புலன்உணர்வு அடிப்படையில் மெய், வாய், மூக்கு, கண், செவி, மனம் என ஆறு வகையாகப் பிரித்துக் காட்டுகிறது இந்நூற்பா.

1. மெய்யால் தொடுவதால் மட்டுமே உணரக்கூடியவை ஓரறிவு உயிர்கள். எ. கா: புல், மரம் போன்றவை.
2. மெய்யால் தொடுவதோடு, வாயால் சுவைப்பதும் ஆகிய இரண்டு உணர்ச்சிகளையும் கொண்டவை இரண்டறிவு உள்ள உயிர்கள். எ–கா : நத்தை (snail).

3. தொடுதல், சுவைத்தல் ஆகியவற்றோடு மூக்கால் முகர்தல் (smell) ஆகிய மூன்று உணர்ச்சிகளையும் கொண்டவை மூன்றறிவு உள்ள உயிர்கள். எ–கா : எறும்பு (ant).
4. தொடுதல், சுவைத்தல், முகர்தல் ஆகியவற்றோடு கண்ணால் காணுதலும் ஆகிய நான்கு உணர்ச்சிகளையும் கொண்டவை நான்கறிவு உள்ள உயிர்கள். எ–கா: நண்டு (crab), தும்பி (bee).
5. தொடுதல், சுவைத்தல், முகர்தல், காணுதல் ஆகியவற்றோடு செவியால் கேட்பதும் ஆகிய ஐந்து உணர்ச்சிகளையும் கொண்டவை ஐந்தறிவு உள்ள உயிர்கள். எ–கா : விலங்குகள் (ஆடு, மாடு).
6. தொடுதல், சுவைத்தல், முகர்தல், காணுதல், கேட்டல் ஆகியவற்றோடு சிந்தனை செய்வதும் ஆகிய ஆறு உணர்ச்சிகளையும் கொண்டவை ஆறறிவு உள்ள உயிர்கள். எ–கா: மக்கள் (humanbeings)

சிறப்பு :

2300 ஆண்டுகளுக்கு முன்னரே உயிரினங்களை வகைப்படுத்தியறியும் அறிவியல் அணுகுமுறையை இந்நூற்பா வெளிப்படுத்துகிறது.

பாடல் வகை :

நூற்பா வடிவம்.

## ❑ சொற்பொருள் குறிப்பு

அறிவதுவே – அறிவதாவது
உற்று அறிவது – மெய்யால் தொடுவதன் மூலம் அறிவது

நூற் பாவின் ஒவ்வொருவரியும் ' ஏ ' காரத்தில் முடிவதைக் காண்க :
அறிவது<u>வே</u>, நா<u>வே</u>, மூக்<u>கே</u>, கண்<u>ணே</u>, செவி<u>யே</u>, மன<u>னே</u>

## ❑ வினாப் பயிற்சி

1. தொல்காப்பியரின் காலம், எழுதியநூல், அதன் பாவகை, சிறப்பு மற்றும் பின்னணிச் செய்திகளை உள்ளடக்கிச் சுமார் 1 1/2 பக்க அளவில் ஒரு கட்டுரை எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள தொல்காப்பிய நூற்பாவின் கருத்துச் சுருக்கத்தைத் தற்காலத் தமிழ் நடையில் எழுதுக.

# 2. புறநானூறு

யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன
...............................................

புறம். – 192

ஆசிரியர் : கணியன் பூங்குன்றனார்
காலம் : கி.பி. இரண்டாம் நூற்றாண்டு
நூல் பெயர் : *சங்க இலக்கியம் : *எட்டுத்தொகைத் தொகுப்பு

பின்னணிச் செய்திகள் :

சங்ககாலத்தில் தோன்றிய நூல்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இரண்டு பெரும் பிரிவுகளாக உள்ளன. எட்டுத்தொகையில் உள்ள ஒவ்வொரு இலக்கியமும் பல பாடல்களைக் கொண்ட தொகுப்பாகும். மேற்காணும் பாடல் எட்டுத்தொகையில் ஒன்றான 'புறநானூறு' என்னும் தொகுப்பில் உள்ளது. புறநானூறு என்பது நானூறு பாடல்களின் தொகுப்பு நூல் ஆகும். புறநானூற்றில் உள்ள ஒவ்வொரு பாடலும் களவு / காதல் வாழ்க்கை தவிர்த்த புற வாழ்க்கை நிகழ்ச்சிகளில் ஏதேனும் ஒன்றைப் பற்றிக் கூறுகிறது. புறவாழ்க்கை நிகழ்ச்சிகள் பன்னிரண்டு வகை (திணை)யாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இப்பாடல் பொதுவியல் திணையைச் சேர்ந்ததாகும். பொதுவியல் திணையென்பது அறநெறி வாழ்க்கை நெறிமுறைகளைப் பற்றிக் கூறுவதாகும்

கருத்து :

எல்லா ஊர்களும் நம்முடையனவே; எல்லா மக்களும் நம் உறவினர்களே; நமக்கு வரும் தீமைகளும் நன்மைகளும் பிறரால் தரப்பட்டவை அல்ல ; வருத்தம்உறுதலும் அவற்றிலிருந்து நீங்குதலும் அதைப்போன்றதே (பிறரால் வருவன அல்ல).

சிறப்பு :

வேற்றுமைகளைக்கடந்த உலகநோக்கினை (inter-national understanding) வெளிப்படுத்துகிறது இப்பாட்டல்.

பாடல்வகை :

இது 'ஆசிரியம்' என்னும் பாடல் வகையைச் சேர்ந்தது. 'ஆசிரியம்' என்பதற்கு 'அகவல்' என்னும் பெயரும் உண்டு.

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| புறம் | – | போர் வாழ்க்கை (அகம் – அன்புவாழ்க்கை) |
| யாதும் | – | எல்லாம் (நம்முடைய) ஊரே |
| யாவரும் | – | எல்லாரும் (எல்லா இன மக்களும்) |
| கேளிர் | – | உறவினர் |
| தீது | – | தீமை |
| நன்று | – | நன்மை |
| நோதல் | – | துன்பம் அடைதல்; |
| தணிதல் | – | குறைதல் (துன்பம் நீங்குதல்) |
| அவற்றோர் அன்ன | – | அதைப் போன்றதே |

❑ வினாப் பயிற்சி

1. புறநானூறு போல 400 பாடல்களைக் கொண்ட இன்னொரு சங்க (தொகை) நூலின் பெயர் யாது ?
2. போர்வாழ்க்கை (புறவாழ்க்கை) தொடர்பான கருத்துகளைக் கூறும் வேறு சங்க நூல்கள் ஏதேனும் மூன்றினைக் கூறுக.
3. கொடுக்கப்பட்டுள்ள புறநானூற்றுப்பாடலின் பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
4. கொடுக்கப்பட்டுள்ள புறப்பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 50 சொற்களில் எழுதுக.

---

*சங்க நூல்கள் :

சங்க இலக்கியம் 'பாட்டும் தொகையும்' என்று கூறப்படும். பாட்டு என்பது 'பத்துப்பாட்டு'; தொகை என்பது 'எட்டுத்தொகை'. எட்டுத்தொகை நூல்கள் ஒவ்வொன்றும் பல புலவர்களால் பாடப்பட்ட தனித்தனிப் பாடல்களின் தொகுப்பெனலாம். பத்துப்பாட்டு நெடும்பாடல்களின் தொகுப்பாகும். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை இரண்டினையும் 'பதினெண் மேற்கணக்கு' எனவும், நீதிநூல்களான நாலடியார் முதலானவற்றை 'பதினெண் கீழ்க்கணக்கு' எனவும் குறிப்பிட்டனர்.

*எட்டுத்தொகை :

*நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு*
*ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்*
*கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம் புறம்என்று*
*இத்திறத்த எட்டுத் தொகை*

என்னும் பழைய வெண்பா எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ள நூல் வரிசையினை வெளிப்படுத்துகிறது. அவற்றுள் # குறியிட்ட ஐந்தும் அகப்பொருள் பற்றியன. பதிற்றுப்பத்தும் புறநானூறும் புறப்பொருள் பற்றியன. பரிபாடலில் வையை பற்றியன அகப்பாடல்கள் ; ஏனைய செவ்வேள், திருமால் முதலானவை கடவுள்துதிகளாக அமைந்துள்ளன.

#1. நற்றிணை
#2. குறுந்தொகை
#3. ஐங்குறுநூறு
4. பதிற்றுப்பத்து
5. பரிபாடல்
#6. கலித்தொகை
#7. அகநானூறு (நெடுந்தொகை)
8. புறநானூறு



யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன
..........................................................................

- புறம் : 192

# 3. குறுந்தொகை

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே

குறுந்.–40

ஆசிரியர் : செம்புலப் பெயல் நீரார்.
காலம் : கி.பி. இரண்டாம் நூற்றாண்டு
நூல் பெயர் : சங்க இலக்கியம் : எட்டுத்தொகைத் தொகுப்பு

பின்னணிச் செய்திகள் :

சங்ககாலத்தில் தோன்றிய நூல்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இரண்டு பெரும் பிரிவுகளாக உள்ளன. எட்டுத்தொகையில் உள்ள ஒவ்வொரு இலக்கியமும் பல பாடல்களைக் கொண்ட தொகுப்பாகும். மேற்காணும் பாடல் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான 'குறுந்தொகை' என்னும் தொகுப்பில் உள்ளது. குறுந்தொகையில் உள்ள ஒவ்வொரு பாடலும் அகவாழ்க்கை தொடர்பான நிக்ழ்ச்சிகளைக் கூறுகிறது. அகவாழ்க்கை நிகழ்ச்சிகள் ஐந்து திணை (வகை)களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இந்த ஐந்து திணைகளும் 'அன்பின் ஐந்திணை' என்று அழைக்கப்படும். இந்தப்பாடலின் திணை குறிஞ்சி. குறிஞ்சி என்பது காதலர்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்திருத்தல் தொடர்பான செய்திகளைத் தருவது. ஒரு காதலன் தன் காதலியிடம் கூறுவதாக இந்தப்பாடல் அமைகிறது.

கருத்து :

என்னுடைய தாயும் உன்னுடைய தாயும் யார் யாரோ? என்னுடைய தந்தையும் உன்னுடைய தந்தையும் எந்த விதத்தில் உறவினர்கள்? நீயும் நானும் எந்த வகையில் அறிந்தவர்களாக

இருந்தோம்! செம்மண் நிலமும் அதில் பெய்த மழை நீரும் ஒன்றோடொன்று இரண்டறக் கலந்ததுபோல நம்முடைய அன்பு உள்ளங்கள் கலந்து விட்டன.

சிறப்பு :

இந்தப்பாடலில் உள்ள 'செம்புலப் பெயல்நீர்போல' என்னும் உவமை பல நுணுக்கங்களைக் கொண்டது. இந்தப்பாடலை எழுதிய ஆசிரியர் யார் எனத் தெரியவில்லை. ஆகையால், மேற்குறித்த உவமையாலேயே அவருக்குப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. செம்புலப் பெயல் நீர் + ஆர் = செம்புலப்பெயல்நீரார்.

பாடல்வகை :

இது 'ஆசிரியம்' என்னும் பாடல்வகையைச் சேர்ந்தது.

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| குறுந்தொகை (குறுமை + தொகை) | – | குறைந்த அடிகளை உடைய பாடல் |
| குறுமை | – | சிறுமை, சிறிய |
| தொகை | – | பல பாடல்களைக் கொண்ட தொகுப்பு 'தொகை' ஆகும் |
| *யாய் | – | (என்) தாய் |
| ஞாய் | – | (உன்) தாய் |
| *எந்தை | – | (என்) தந்தை |
| நுந்தை | – | (உன்) தந்தை |
| கேளிர் | – | உறவினர் |
| செம்புலம் | – | செம்மண் நிலம் |

❑ வினாப்பயிற்சி

1. தமிழில் உள்ள சில தொகை நூல்களின் பெயர்களை எழுதுக.
2. அக வாழ்க்கை தொடர்பான கருத்துகளைக் கூறும் சங்க நூல்கள் ஏதேனும் மூன்றின் பெயர்களைக் குறிப்பிடுக.
3. கொடுக்கப்பட்டுள்ள செய்யுட்பகுதியின் பின்னணிச் செய்திகளைச் சுமார் 50 சொற்களில் எழுதுக.
4. கொடுக்கப்பட்டுள்ள செய்யுட்பகுதியின் பொருள் சுருக்கத்தையும் அதன் சிறப்பினையும் ஒரு சிறு கட்டுரையாக எழுதுக.

---

*யாய் ஞாய் தாய் ; *எந்தை நுந்தை தந்தை – ஆகியன முறையே தன்மை, முன்னிலை, படர்க்கையில் வருவதைக் கவனிக்க.

# 4. பட்டினப்பாலை

நேரிழை மகளிர் உணங்கு உணாக்கவரும்
கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்கால் புதல்வர் புரவின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்குபகை யல்லது கலங்குபகை யறியா
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

பட்டினப்பாலை : 23-27

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |
| காலம் | : | கி.பி. இரண்டாம் நூற்றாண்டு |
| நூல்பெயர் | : | சங்க இலக்கியம் : *பத்துப்பாட்டுத் தொகுப்பு |

பின்னணிச் செய்திகள் :

சங்ககாலத்தில் தோன்றிய பத்துப் பாட்டு என்னும் தொகுப்பு நூல் பிரிவில் ஒன்பதாவதாக அமைந்தது பட்டினப்பாலை. 301 அடிகளைக் கொண்டுள்ள இப்பாட்டு சோழன் கரிகால் பெருவளத்தான் பெருமையினையும், காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பினையும் கூறுகிறது. கொடுக்கப்பட்டுள்ள ஐந்து அடிகள் காவிரிப்பூம்பட்டினப் புறநகர்ப் பகுதியின் செல்வப் பெருக்கினைக் கற்பனை நயத்தோடு வெளிப்படுத்துகின்றன.

கருத்து :

'பெண்கள் அழகிய நகைகளை அணிந்திருக்கிறார்கள். வெயிலில் காயவைக்கப்பட்ட உணவுப்பொருள்களை உண்பதற்காக அங்கே கோழிகள் வருகின்றன. அவற்றை அப்பெண்கள் விரட்டுகின்றனர். அவ்வாறு விரட்டும் பொழுது தங்கள் காதுகளில் அணிந்திருந்த நகைகளைக் கழற்றி வீசி எறிகின்றனர். அப்போது அழகிய கால்களையுடைய சிறுவர், குதிரையின்றி மூன்று சக்கரங்களையுடைய தேர்களை உருட்டுகின்றனர். ஆனால் பெண்களால் எறியப்பட்ட

நகைகள் அத்தேர்களை உருளவிடாமல் தடைசெய்கின்றன. இந்த மாதிரியான தடைகளைத் தவிர உள்ளத்தை வருத்துகின்ற வேறு எந்தத் தடைகளும் அந்நாட்டில் இல்லை. (அவ்வளவு வளமானது சோழநாடு).'

சிறப்பு :

பெண்கள் பறவைகளை விரட்டுவதற்குக்கூடத் தங்க அணிகலன்களைக் கழற்றி எறிந்தார்கள் என்பது காவிரிப்பூம்பட்டினத்தின் செல்வச் செழிப்பைக் காட்டுவதாக உள்ளது. மேலும் இப்பாடல் புலவரின் கற்பனை வளத்துக்கு எடுத்துக்காட்டாக உள்ளது.

பாடல்வகை :

'ஆசிரியம்' என்னும் பாவகையைச் சேர்ந்தது.

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| நேரிழை மகளிர் | – | அழகிய நகை அணிந்த மகளிர் |
| உணங்கு உணா | – | காய்வதற்காக (to get dried up) போடப்பட்டுள்ள உணவுப் பொருள் |
| கவரும் (vp) | – | (தெரியாமல்) திருடும் |
| கனங்குழை | – | பொன்னாலான காதணி |
| புரவி | – | குதிரை |
| முக்காற் சிறுதேர் | – | மூன்று சக்கர வண்டி |
| முன்வழி விலக்கும் | – | முன்னால் உள்ள வழியை மறைக்கும் |
| கலங்கு பகை | – | உள்ளத்தை வருத்தும் படியான பகை |

## ❑ வினாப் பயிற்சி

1. பத்துப்பாட்டு என்னும் தொகுப்பில் உள்ள உங்களுக்குத் தெரிந்த வேறு சில நூல்களின் பெயர்களை எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள சங்கப்பாடலின் பின்னணிச் செய்திகளைத் தொகுத்து சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
3. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 75 சொற்களில் ஒரு கட்டுரையாக எழுதுக.

*பத்துப்பாட்டு

*முருகு பொருநாறு பாண்இரண்டு முல்லை*
*பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய*
*கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்*
*பாலை கடாத்தொடும் பத்து*

என்னும் பழைய வெண்பா பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் வரிசையினை வெளிப்படுத்துகிறது. அவற்றுள் # குறியிட்ட ஆறு நூல்களும் புறப்பாடல்களாகும். எஞ்சிய நான்கும் அகப்பாடல்கள்.

#1. திருமுருகாற்றுப்படை
#2. பொருநராற்றுப்படை
#3. சிறுபாணாற்றுப்படை
#4. பெரும்பாணாற்றுப்படை
5. முல்லைப்பாட்டு
#6. மதுரைக்காஞ்சி
7. நெடுநல்வாடை
8. குறிஞ்சிப்பாட்டு
9. பட்டினப்பாலை
#10. மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை)



நேரிழை மகளிர் உணங்கு உணாக்கவரும்
கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை
.........................................................................

- பட்டினப்பாலை : 23-27

# 5. திருக்குறள்

1. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

அறம் : அதி. 35 : துறவு–1

2. நோய்நாடி நோய்முதல்நாடி அது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

பொருள் : அதி. 95 : மருந்து–8

3. பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து

இன்பம் : அதி. 111 : புணர்ச்சி மகிழ்.–2

ஆசிரியர் : திருவள்ளுவர்
காலம் : கி.பி. இரண்டாம் நூற்றாண்டு
நூல்பெயர் : திருக்குறள் : *பதினெண்கீழ்க்கணக்குத் தொகுப்பு

பின்னணிச் செய்திகள் :

திருக்குறள் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று பகுப்பு(பால்)–களைக் கொண்டது. மேலேயுள்ள மூன்று குறள்களில் முதலாவது அறத்துப்பாலிலும் இரண்டாவது பொருட் பாலிலும் மூன்றாவது காமத்து–பாலிலும் உள்ளன. அறத்துப்பாலில் 38உம், பொருட்பாலில் 70உம் காமத்துப்பாலில் 25உம் ஆக 133 அதிகாரங்கள் உள்ளன. ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்துக் குறள்கள் வீதம் மொத்தம் 1330 குறள்பாக்கள் உள்ளன.

கருத்து :

1. ஒருவர் எந்தெந்த பொருள் / செயல்களிலிருந்து விலகி நிற்கிறாரோ அவருக்கு அந்தந்த பொருள்/செயல்களால் வரும் துன்பம் இல்லாமல் போகிறது.

2. நோயை அறிந்து, நோய் தோன்றுவதற்கான மூல காரணத்தையும் அறிந்து, அதை (மூலகாரணத்தை) நீக்குவதற்கான வழிவகைகளை ஆராய்ந்து அதற்கு ஏற்ப செயல்பட வேண்டும்.
3. எந்தவொரு காரணத்தால் ஏற்படும் நோய்க்கும் வேறு ஒரு பொருளே மருந்தாக இருக்கும். ஆனால் பெண்ணொருத்தியால் ஏற்படும் காதல் நோய்க்கு அந்த பெண் மட்டுமே மருந்தாக இருப்பாள்.

சிறப்பு:

இந்தநூல் உலகோர் அனைவருக்கும் உரிய பொதுவான நீதிகளைக் கூறுவதால் 'உலகப் பொதுமறை' என்று கூறப்படுகிறது. ஒவ்வொரு குறளும் $1\frac{3}{4}$ வரிகளை கொண்டது. அதாவது, முதல் வரியில் நான்கும் இரண்டாவது வரியில் மூன்றுமாக மொத்தம் ஏழு சீர்களைக் கொண்டது. இந்நூலுக்கும் இதன் ஆசிரியருக்கும் 'திரு' என்னும் அடைமொழி சேர்த்து சிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்த நூலின் பெருமையைப் பாராட்டுவதற்காகவே திருவள்ளுவமாலை என்னும் வேறொரு தொகுப்பு நூல் உள்ளது.

பாடல் வகை :

இது 'குறள் வெண்பா' என்னும் பாவகையைச் சேர்ந்தது. குறுகிய அடிகளால் ஆன பாவகையானதால் இது 'குறள்' என்று பெயர் பெற்றது.

❑ சொற்பொருள் குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| 1. | துறவு | – | renunciation (chapter heading) |
| | யாதனின் | – | எவற்றிலிருந்து |
| | யாதனின் யாதனின் | – | எவ்வெவற்றிலிருந்து |
| | நீங்கு | – | விலகு |
| | நோதல் | – | துன்பம், வேதனை |
| 2. | மருந்து | – | medication (chapter heading) |
| | நோய் முதல் | – | நோய்க்கான காரணம் |
| | நாடி (vp) (நாடு + இ) | – | கண்டுபிடித்து; diagnose |
| | தணிக்கும்வாய் நாடி | – | குறைப்பதற்கான வழி அறிந்து |
| 3. | புணர்ச்சி மகிழ்தல் | – | rejoicing in the embrace (chapter heading) |
| | பிணி | – | நோய், நலமின்மை |
| | பிறமன் | – | வேறு ஒரு பொருள் |
| | அணியிழை | – | அழகான பெண் |
| | மருந்து | – | medicine |

## ❑ வினாப் பயிற்சி

1. திருவள்ளுவர் காலம், எழுதிய நூல், அதன் பாவகை, சிறப்பு மற்றும் பின்னணிச் செய்திகளைத் தொகுத்து சுமார் 300 சொற்களில் ஒரு கட்டுரை எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள குறட்பாக்களின் பொருள் சுருக்கத்தைச் சுமார் 100 சொற்களில் ஒரு சிறு கட்டுரையாக எழுதுக.
3. நீங்கள் படித்த வேறு ஏதேனும் மூன்று குறட்பாக்களை நினைவு கூர்ந்து எழுதுக.

---

*பதினெண்கீழ்க்கணக்கு

*நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணைமுப்*
*பால் கடுகம் கோவை பழமொழி மாமூலம்*
*இன்னிலைய காஞ்சியோடு ஏலாதி என்பவே*
*கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு*

என்னும் பழைய வெண்பா பதினெண் கீழ்க்கணக்கில் இடம் பெற்றுள்ள நூல்வரிசையினை வெளிப்படுத்துகிறது. இவற்றுள் நானாற்பது நாலைந்திணை என்பன எட்டு நூல்களைக் குறிக்கும். கார் நாற்பது, கைந்நிலை ஆகியனவும் நான்கு ஐ ந்திணைகளும் அகப்பொருள் பற்றியன. களவழி நாற்பது போர் பற்றியது. எஞ்சிய பதினொன்றும் நீதி பற்றியன.

1. நாலடியார்
2. நான்மணிக்கடிகை
3. இன்னா நாற்பது
4. இனியவை நாற்பது
5. கார்நாற்பது
6. களவழிநாற்பது
7. ஐந்திணை ஐ ம்பது
8. ஐந்திணை எழுபது
9. திணைமொழி ஐ ம்பது
10. திணைமாலை நூற்றைம்பது
11. திருக்குறள்
12. திரிகடுகம்
13. ஆசாரக்கோவை
14. பழமொழி நானூறு
15. சிறுபஞ்சமூலம்
16. கைந்நிலை
17. முதுமொழிக்காஞ்சி
18. ஏலாதி



பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து

இன்பம் : அதி. 111 : புணர்ச்சி மகிழ்தல்-2

# 6. நான்மணிக்கடிகை

கள்ளி வயிற்றின் அகில் பிறக்கும் மான்வயிற்று
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி

ஆசிரியர் : விளம்பிநாகனார்
காலம் : கி.பி. இரண்டாம் நூற்றாண்டு
நூல்பெயர் : நான்மணிக்கடிகை : பதினெண்கீழ்க்கணக்குத் தொகுப்பு

பின்னணிச் செய்திகள் :

இது கடவுள் வாழ்த்தோடு நூற்று ஆறு வெண்பாக்களைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு வெண்பாவும் நான்கு நீதிக் கருத்துகளைக் கொண்டுள்ளது.

கருத்து :

நறுமணப் பொருள் (அகில்) கள்ளிச்செடியில் பிறக்கிறது. ஒளி பொருந்திய அரிதாரம் மான் வயிற்றில் பிறக்கிறது. விலை மதிப்புடைய முத்து பெரிய கடலிலிருந்து பிறக்கிறது. நல்ல ஆள் எந்தக் குடும்பத்தில் பிறப்பார் என்பதை அறிபவர் யார் ?

சிறப்பு :

ஒவ்வொரு பாடலிலும் உள்ள கருத்துகளின் எண்ணிக்கை அடிப்படையில் நூல் பெயர் அமைந்திருப்பது இதன் சிறப்பாகும். நான்மணிக்கடிகை என்பது நால்வகை மணிகள் பதித்துச் செய்யப் பெற்ற கழுத்தணியாகும் (கடிகை – மாலை). இவ்வணி, தன்னை அணிபவர்க்கு நலம் விளைவிப்பது போல, இந்நூல் இதைக் கற்பவர்க்கு நன்மை விளைவிப்பதால் நான்மணிக்கடிகை என்னும் பெயர் பெற்றது.

பாடல் வகை : வெண்பா

❑ சொற்பொருள் குறிப்பு :

| | | |
|---|---|---|
| கள்ளிவயிறு | – | கள்ளிச்செடியின் தண்டுப் பகுதி |
| அகில் | – | நறுமணப்பொருள் |
| மான்வயிறு | – | body of the deer / antelope |
| ஒள்ளரிதாரம் (ஒள் + அரிதாரம்) | – | ஒளிபொருந்திய அரிதாரம் |
| பல்விலையமுத்தம் | – | விலைமதிப்புடைய முத்து |
| நல்லாள் (நல்ல + ஆள்) | – | நல்ல மனிதர் |
| குடி | – | குடும்பம்; family; also it refers to இனம்; class |

❑ வினாப்பயிற்சி :

1. நான்மணிக்கடிகை நூலின் பெயர்க்காரணத்தை எழுதுக.
2. நால்வகை நீதிக்கருத்துகளாக இப்பாடலில் கூறப்படுபவை யாவை ?
3. இந்நூலின் காலம், பின்னணிச் செய்திகள், சிறப்பு ஆகியவற்றைத் தொகுத்து, சுமார் 75 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.

# 7. சிலப்பதிகாரம்

கண்ணகி அணிமணிக் கால்சிலம்பு உடைப்ப
மன்னவன் வாய்முதல் தெறித்தது மணியே, மணிகண்டு
தாழ்ந்த குடையன் தளர்ந்த செங்கோலன்
பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
யானோ அரசன்? யானே கள்வன் !
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது கெடுக என் ஆயுள் என
மன்னவன் மயங்கி விழுந்தனனே.

மதுரைக்காண்டம் : வழக்குரை காதை : 71 - 78.

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | இளங்கோவடிகள் |
| காலம் | : | கி.பி. இரண்டாம் நூற்றாண்டு |
| நூல் | : | சிலப்பதிகாரம் : *ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று |

பின்னணிச் செய்திகள் :

தமிழில் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரண்டும் 'இரட்டைக்காப்பியங்கள்' எனக் கூறப்படுகின்றன. சிலப்பதிகாரம் கோவலன் – கண்ணகி ஆகிய குடிமக்களின் வாழ்க்கையைப் பற்றிக் கூறும் காப்பியமாகும். இக்காப்பியத்தின் தொடக்க நிகழ்ச்சிகள் சோழ நாட்டிலும், இடைப்பட்ட நிகழ்ச்சிகள் பாண்டிய நாட்டிலும், நிறைவு நிகழ்ச்சிகள் சேர நாட்டிலும் நடைபெறுகின்றன. செல்வத்தை இழந்த கோவலன் தன் மனைவி கண்ணகியின் கால்சிலம்பை விற்று வாழ்க்கையை வளப்படுத்த விரும்புகிறான். சோழநாட்டிலிருந்து பாண்டிய நாட்டுத் தலைநகரான மதுரைக்கு மனைவியுடன் வருகிறான். அங்கு அரசியின் சிலம்பைத் திருடியதாக வீண்பழி சுமத்தப்பட்டு கொலை செய்யப்படுகிறான். தன் கணவன் கள்வன் இல்லை என தனது

இன்னொரு கால்சிலம்பைக் காட்டிக் கண்ணகி பாண்டிய அரசனிடம் வாதிடுகிறாள்.

கருத்து :

கண்ணகி தனது அழகிய கால் சிலம்பினை உடைத்தாள். அதிலிருந்து மணி தெறித்தது. மணி மாணிக்க கற்களாக இருந்தன. அதைக்கண்டான் அரசன் ; அப்போது அரசுச் சின்னங்களில் ஒன்றான குடை சாய்ந்தது; செங்கோல் நழுவியது. "நகைகளைச் செய்யும் கொல்லனின் சொல்லைக் கேட்டேன்; நல்லவனைக் (கோவலனைக்) குற்றவாளியெனக் கருதினேன். இத்தவறு செய்த நானா அரசன்? நான்தான் கள்வன்; தென்னாட்டு மக்களைக் காக்கும் நான் நீதியிலிருந்து தவறி விட்டேன். அறிவிலி (அறிவற்றவன்) யாகிய எனது செயலால் அரசுநீதி தவறிவிட்டது. என் வாழ்நாள் இப்பொழுதே முடியட்டும்" என்று கூறி மயங்கி விழுந்தான்.

சிறப்பு :

இது தமிழில் கிடைத்துள்ள முதல் காப்பியம். அக்காலத்தில் தமிழகம் சேர, சோழ, பாண்டிய நாடுகளாகப் பிரிந்து இருந்தது. அம்மூன்று நாடுகளுக்கும் பொதுவான காப்பியமாக இது படைக்கப்பட்டிருக்கிறது. இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழையும் உடைய காப்பியமாகத் திகழ்கிறது. குடிமக்களை (கதைப்பாத்திரங்களாக) முதன்மைப்படுத்திக் கூறும் முதல் தமிழ்க்காப்பியம். பெண்ணினத்தின் பெருமையை நிலைநாட்டும் நோக்கத்திலும் இக்காப்பியம் அமைந்துள்ளது.

பாடல் வகை :

'ஆசிரியம்' என்னும் பாவகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| காற்சிலம்பு | – | காலில் அணியப்பெறும் ஒரு வகை ஆபரணம் (anklet) |
| வாய்முதல் | – | வாயின் அருகில் (உதட்டருகில்) |
| தெறி | – | splash |
| தாழ்ந்த குடை | – | சிறப்பு குறைதல், ஆட்சி சரிதல் (metaphorical) (குடை - umbrella); fallen canopy |

| | | |
|---|---|---|
| தளர்ந்த செங்கோல் | – | சிறப்பு குறைதல், நேர்மை குறைதல் (metaphorical) (செங்கோல் - sceptre) |
| பொன்செய் கொல்லன் | – | தங்க அணிகள் செய்யும் கொல்லன் goldsmith |
| மன்பதை காக்கும் தென்புலம்காவல் | – | மக்களைப் பாதுகாக்கும் தென்னாட்டின் ஆட்சிப்பணி |
| பிழைத்தது | – | (அரசு நீதி) தவறிவிட்டது, conjugated form of the verb 'பிழை' in III person singular past tense |

❑ வினாப்பயிற்சி

1. சிலப்பதிகாரத்தின் பின்னணிச் செய்திகளைச் சுமார் 200 சொற்களில் சுருக்கமாக எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 100 சொற்களில் கட்டுரையாக எழுதுக.
3. சிலப்பதிகாரம் ஒரு குடிமக்கள் காப்பியம் எனக் கூறப்படுவது ஏன்?

---

ஐம்பெருங்காப்பியங்கள் : சிலப்பதிகாரம்
மணிமேகலை
சீவக சிந்தாமணி
வளையாபதி
குண்டலகேசி

இவை தவிர, ஐஞ்சிறுகாப்பியங்களும்
உள்ளன. அவையாவன: யசோதர காவியம்
உதயண குமார காவியம்
நீலகேசி
நாககுமார காவியம்
சூளாமணி



கண்ணகி அணிமணிக் கால்சிலம்பு உடைப்ப
மன்னவன் வாய்முதல் தெறித்தது மணியே, ..........
...........................................................................................

மதுரைக்காண்டம் : வழக்குரை காதை : 71-78

# 8. திருமந்திரம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே

– ஏழாம் தந்திரம் : கீதோபதேசம்–3

ஆசிரியர் : திருமூலர்

காலம் : கி.பி ஏழாம் நூற்றாண்டு

நூல்பெயர் : திருமந்திரம்

பின்னணிச் செய்திகள் :

சைவத்திருமுறைகள் (சைவநூல்கள்) பன்னிரண்டாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் திருமந்திரம் பத்தாம் திருமுறையாக அமைந்துள்ளது. சைவ சித்தாந்தத்தை விளக்கிக் கூறுகிறது. தமிழ் மொழியில் அமைந்துள்ள மிகப் பழைய சமயநூலாகிய இது ஒன்பது தந்திரங்களாகப் பிரிக்கப்–பட்டுள்ளது. 3000 பாடல்களைக் கொண்டுள்ளது.

கருத்து :

எல்லோரும் ஒரு குலத்தைச் (பிரிவை) சேர்ந்தவர்களே. இறைவனும் ஒருவனே. ஆகவே நல்லதையே எண்ணுங்கள். உங்களுக்கு இறப்பு இல்லை. வெட்கப்படாமல் சென்று சேரும் இடமும் வேறு இல்லை. உங்கள் மனத்தில் இறை எண்ணம் நின்று நிலைபெற நீங்கள் இறைவனை நினைத்து வாழுங்கள்.

சிறப்பு :

இப்பாடலின் முதல்வரி பலரும் மேற்கோளாகக் கூறும்படி அமைந்தது ஆகும். இந்நூலின் பாடல்கள் மேற்போக்காக ஒரு பொருளையும், உட்கருத்தாகச் சைவ சமயத் தத்துவத்தையும் உணர்த்துவனவாகும்.

பாடல் வகை :

விருத்தம் என்னும் பாவினத்தைச் சேர்ந்தது.

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| குலம் | – | இனம், பிரிவு |
| தேவன் | – | இறைவன் |
| நினைமின் | – | நினையுங்கள் |
| நமன் | – | எமன் |
| நாண் | – | நாணம், வெட்கம் |
| சித்தம் | – | மனம் |
| நிலைபெறு | – | நிரந்தரமாக இரு |
| நினைந்து உய்மினே | – | நினைத்து வாழுங்கள் |

## ❑ வினாப் பயிற்சி

1. திருமந்திரம் நூல் பற்றிய பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 100 சொற்களில் ஒரு சிறு கட்டுரையாக எழுதுக.
3. சைவத்திருமுறையைச் சேர்ந்த வேறு ஏதேனும் நான்கு நூல்களின் பெயர்களைக் கூறுக.

# 9. திருவாசகம்

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யான் எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

– திருச்சதகம் : அறிவுறுத்தல்–5

ஆசிரியர் : மாணிக்கவாசகர்
காலம் : கி.பி எட்டாம் நூற்றாண்டு
நூல்பெயர் : திருவாசகம்

பின்னணிச் செய்திகள் :

திருவாசகம் சைவசமயத்தைச் சார்ந்த நூல். சைவத் திருமுறைகளுள் இது எட்டாவது திருமுறையாகும். இதில் உள்ள பாடல்கள் அனைத்தும் இறைவனை வழிபடுவதாக அமைந்துள்ளன. மேலேயுள்ள பாடல், இறைவன் எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவன் என்கிற உண்மையை உணர்த்துவதாக அமைகிறது.

கருத்து :

'இறைவனே! நீ வானாக இருக்கிறாய்; மண்ணாக இருக்கிறாய்; காற்றாக இருக்கிறாய்; ஒளியாக இருக்கிறாய்; உடலாக இருக்கிறாய்; உயிராக இருக்கிறாய்; உள்ளவனாகவும் இருக்கிறாய்; இல்லாதவனாகவும் இருக்கிறாய் ; தலைவனாக இருக்கிறாய் ; ஒவ்வொருவரையும் நான், எனது என்று அகங்காரத்துடன் இருப்பவரை ஆட்டுவிக்கிறாய். உன் பெருமையை நான் என்னவென்று சொல்லி வாழ்த்துவேன்!'

சிறப்பு :

இறைவன் ஐம்பெரும் பொருள்களில் (நிலம், நீர், தீ, வளி, வெளி) இரண்டறக் கலந்திருக்கிறான் என்பதை விளக்குகிறது இப்பாடல். இசையுடன் பாடப் பெறும் இப்பாடல்கள் கேட்போரின் எண்ணங்களை

நெகிழச் செய்யும் தன்மை உடையன. 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார்' என்பது இதன் பெருமையை உணர்த்தும்.

பாடல் வகை :

'விருத்தம்' என்னும் பாவினத்தைச் சேர்ந்தது.

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| வளி | – | காற்று |
| ஊன் | – | உடம்பு |
| உண்மையுமாய் இன்மையுமாய் | – | இருந்தும் இல்லாமலும் ; சத்து–அசத்து<br>visible and invisible; concrete and abstract |
| கூத்தாட்டு | – | ஆட்டுவி ஆயள். (v), make (one) act |
| கூத்தாட்டுவான் | – | ஆட்டுவிப்பவன் (இறைவன்) |
| ஆகி (vp), ஆகு(v) | – | become; பெரும்பாலான சொற்கள் வினையெச்ச வடிவத்தில் (vp) அமைந்திருப்பது இப்பாடலின் சிறப்பு. 'ஆய்' என்பதும் 'ஆகி' என்பதன் பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. |

❑ வினாப்பயிற்சி

1. திருவாசகம் பற்றிய பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 100சொற்களில் ஒரு கட்டுரையாக எழுதுக.
3. இப்பாடலில் குறிப்பிடப்படும் சைவத்தத்துவம் யாது ?
4. 'என் சொல்லி வாழ்த்துவனே' என்ற சொற்றொடரின் உரைநடை வடிவத்தைத் தருக.

# 10. திருமாலை

பச்சைமா மலைபோல் மேனிப்
    பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே
    ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய்
    இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
    அரங்கமா நகரு ளானே.

– திருமாலை : 2

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | தொண்டரடிப்பொடியாழ்வார் |
| காலம் | : | கி.பி எட்டாம் நூற்றாண்டு |
| நூல்பெயர் | : | நாலாயிரத்திவ்யப்பிரபந்தம் |

பின்னணிச் செய்திகள் :

நாலாயிரத்திவ்யப் பிரபந்தத்திலுள்ள பாடல்கள் பன்னிரெண்டு ஆழ்வார்களால் பாடப்பட்டுள்ளன. இவர்கள் வைணவ சமயத்தைச் சார்ந்தவர்கள். வைணவக் கடவுளான திருமாலின் பெருமைகள் இப்பாடல்களில் கூறப்படுகின்றன. தொண்டரடிப்பொடியாழ்வார் திருவரங்கப் பெருமாளைப்பற்றி மட்டுமே பாடியுள்ளார்.

கருத்து :

திருவரங்கம் என்னும் பெரிய நகரத்தில் உள்ளவனே, பெரிய மலையின் பசுமை நிறத்தை உடையவனே, பவளம் போன்ற சிவந்த வாயை உடையவனே, தாமரை போன்ற செம்மையான கண்களை உடையவனே, தேவர்களுக்குத் தலைவனான அச்சுதனே, இடையர் குலத்தில் வளர்ந்த குழந்தையே! என்று உனது பெருமையைக் கூறுவதிலே எனக்கு மகிழ்ச்சி கிடைக்கிறது. இந்தப் பெருமை இருக்கிறபோது

இந்திரலோகத்தையே ஆளுகின்ற வாய்ப்புக் கிடைத்தாலும் அது எனக்கு வேண்டாம்.

சிறப்பு :

திருமாலின் திருநாமத்தைச் சொல்லுவதே எல்லாச் செல்வத்திலும் சிறந்த செல்வம் என்பது வைணவர்களின் நம்பிக்கை. அந்த நம்பிக்கையை வெளிப்படுத்துவதாக அமைகிறது இப்பாடல். 'திருமாலை அறியாதார் பெருமாளை அறியார்' என்னும் கூற்று இப்பாடல் இடம் பெற்றுள்ள பகுதியின் சிறப்பை விளக்கும்.

பாடல்வகை :

'ஆசிரிய விருத்தம்' என்னும் பாவினத்தைச் சேர்ந்தது.

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| பச்சை | – | பசுமைநிறம், green colour |
| பவளவாய் | – | coral like (red coloured) mouth |
| கமலச் செங்கண் | – | lotus like (red coloured) eye |
| அச்சுதா | – | அச்சுதன் என்ற பெயரைக் கொண்டவனே |
| அமரர் ஏறு | – | தேவர்களில் காளை (போன்றவன்) |
| ஆயர்தம் கொழுந்து | – | இடையர்களின் (shepherd) குழந்தை (யாக வளர்ந்தவன்) |
| ஆள் (v) | – | govern |
| பெறினும் | – | பெற்றாலும் |
| வேண்டேன் | – | வேண்டும் என்று விரும்பிக் கேட்க மாட்டேன் |
| அரங்க மாநகரம் | – | திருவரங்கம் என்னும் பெரிய நகரம் |
| நகருளானே | – | நகரத்தில் இருப்பவனே |

## ❑ வினாப்பயிற்சி

1. திருமாலை என்ற பிரபந்த நூல் பற்றிய பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 100 சொற்களில் ஒரு சிறு கட்டுரையாக எழுதுக.
3. 'இந்திர லோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே' என்ற பாடலடியைத் தற்கால உரைநடையில் எழுதுக.

# 11. சீவக சிந்தாமணி

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங்கனி சிதறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதம்என் றிசையால்திசை போயதுண்டே

– நாமகள் இலம்பகம்–2

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | திருத்தக்க தேவர். |
| காலம் | : | கி.பி ஒன்பதாம் நூற்றாண்டு |
| நூல் பெயர் | : | சீவகசிந்தாமணி : ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று |

பின்னணிச் செய்திகள் :

சீவகன் என்னும் மன்னனுடைய வரலாற்றைக் கூறும் காப்பியம் சீவகசிந்தாமணி. இது ஒரு சமண சமயம் சார்ந்த நூல். இதற்கு மணநூல் என்றும், முக்திநூல் என்றும் பெயர்கள் உள்ளன. இந்நூல் 13 இலம்பகங்களைக் கொண்டது (இலம்பகம் – பெரும்பிரிவு). இந்நூலின் முதல் இலம்பகம் நாமகள் இலம்பகம். அவ்விலம்பகத்தின் முதற்பாடல் இது. இப்பாடல் சீவகன் நாடாகிய ஏமாங்கத நாட்டின் வளத்தைக் கூறுகிறது.

கருத்து :

ஏமாங்கதநாடு சோலைவளம் மிகுந்த நாடு. காய்கள் நிறைந்திருக்கும் தென்னைமரத்திலிருந்து தேங்காய் ஒன்று கீழே விழ, பூக்கள் நிறைந்த பாக்கு மரத்தின் பாளையிலிருந்து தேன் சிந்துகிறது. தேனைச் சிந்தச்செய்த தேங்காய் பலா மரத்தின் மீது விழுந்து அதன் பழத்தைப்பிளந்தது. அப்பழத்தின் சுளைகள் சிதறின. பலாவைப்பிளந்த தேங்காய் அதற்குக் கீழேயிருந்த இனிப்பான மாங்கனிகளைச் சிதறச்செய்தது. பின்னர் அடுத்திருந்த வாழைப் பழங்களை உதிர்த்தது. பார்க்கும் இடமெல்லாம் இவ்வாறு பழங்கள் நிறைந்த நாடு ஏமாங்கத–நாடு. அதன் புகழ் எல்லாத்திசைகளிலும் பரவியிருந்தது.

சிறப்பு :

இந்நூல் தமிழ் மொழியில் விருத்தப்பாவால் அமைந்த முதல் நூலாகும். பல்வகைச் சந்தஅமைப்பு கொண்டது. கம்பராமாயணம், பெரியபுராணம் போன்ற நூல்கள் தோன்றுவதற்கு இது ஒரு முன்னோடியாக அமைந்தது.

இல்லற இன்பத்தைக் கூறுவது போன்று அமைந்தாலும் துறவற இன்பத்தையே அடிப்படைக் கருத்தாக கொண்டிருக்கிறது இந்நூல்.

பாவகை :

'விருத்தம்' என்னும் பாவினத்தைச் சேர்ந்தது.

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| காய் மாண்ட | – | காய்கள் நிறைந்துள்ள (மாண் – பெருமை worthiness) |
| தெங்கின் | – | தென்னை மரத்தின் (தெங்கு–coconut tree) |
| தெங்கின் பழம் | – | முற்றிய தேங்காய் |
| விழு (v), வீழ (inf.) | – | fall down |
| கமுகு | – | பாக்கு |
| பூ மாண்ட | – | பூ நிறைந்த |
| தீந்தேன் | – | இனிமையான தேன் |
| தொடை | – | a bunch of flowers |
| வருக்கை போழ்ந்து | – | பலா பிளந்து (the bursting of jack fruit); cf. வருக்கைப்பலா |
| தேமாங்கனி | – | தித்திக்கும் மாங்கனி, sweet mango fruit |
| சிதறி(vp), சிதறு (v) | – | scatter, pour out |
| (பழங்கள்) சிந்தும் | – | spill out |
| ஏமாங்கதம் | – | ஏமாங்கத நாடு |
| என்றிசையால் (என்று + இசையால்) | – | என்னும் புகழால் (இசை–புகழ், fame) |
| திசை | – | திக்கு |
| திசையால் போயதுண்டே (போயதுண்டு + ஏ) | – | எல்லாத்திக்குகளிலும் பரவியிருந்தது |

## ❑ வினாப்பயிற்சி

1. தமிழில் உள்ள வேறு சில காப்பியங்கள் யாவை ?
2. சீவகசிந்தாமணி நூலின் பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
3. பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 100 சொற்களில் ஒரு சிறு கட்டுரையாக எழுதுக.
4. பாடல் ஆசிரியர் இப்பாடலை எழுதியதன் நோக்கம் என்ன ?

# 12. கம்பராமாயணம்

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்க இடமின்றி உயிரிருக்கும்
இடம்நாடி இழைத்த வாறோ?
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி !

யுத்தகாண்டம் : மண்டோதரி புலம்பல் – 10081

ஆசிரியர் : கம்பர்

காலம் : கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு

நூல்பெயர் : கம்பராமாயணம் : இராவணன் வதைப்படலம்

பின்னணிச் செய்திகள் :

கம்பரால் எழுதப்பட்டதால் கம்பராமாயணம் எனப் பெயர் பெற்றது. போர்க்களத்தில் இராமனால் இராவணன் கொல்லப்பட்டான். இராவணனின் மனைவி மண்டோதரி போர்க்களத்தில் கிடந்த இராவணனின் உடலைக் கண்டு புலம்புவதாக அமைகிறது இந்தப்பாடல்.

கருத்து :

'வெள்ளை நிறமுடைய எருக்கம்பூ மாலையை அணிந்திருக்கும் சடைமுடியை உடையவன் சிவபெருமான். அவன் இருக்கும் இமய மலையை அசைத்தவன் இராவணன். அத்தகையவனின் உடலில் எள் வைப்பதற்குக் கூட இடம் இல்லாதபடி, அவனது உயிர் இருக்கும் இடத்தைத் தேடி எல்லாப்பகுதிகளையும் துளைத்துள்ளதோ இராமனின் அம்பு? தேன் பொதிந்துள்ள மலர்களைச் சூடிய சீதையின் மீது இராவணன் ஒருவழிக் காதல் கொண்டிருந்தான். சீதையின் மீது

கொண்டிருந்த அந்தக் காதல், உள்ளத்தின் எப்பகுதியில் இருக்கிறது எனத் தேடித்தேடி இராமனின் அம்பு துளைத்ததோ? '

சிறப்பு :

இப்பாடல் அவலத்தை உள்ளடக்கிய சொற்களால் அமைந்துள்ளது. இப்பாடலில் உள்ள இறுதியடி கவிஞரின் கற்பனைத் திறனைக் காட்டுவதாகவுள்ளது. 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்னும் கூற்று அவரது புலமைச் சிறப்பினை வெளிப்படுத்தும்.

பாடல்வகை :

இப்பாடல் 'ஆசிரிய விருத்தம்' என்னும் பா இனத்தைச் சேர்ந்தது.

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| எருக்கம் | – | ஒருவகைச் செடி |
| வெள்ளெருக்கம் | – | வெள்ளை (நிறப் பூவையுடைய) எருக்கம் |
| சடைமுடி | – | (வாரப்படாத சிக்கல்படிந்த) கற்றை முடி |
| வெற்பு | – | மலை |
| திருமேனி | – | சிறந்த (உயர்ந்த) உடற்கட்டு |
| எள் | – | Gingile(oil bearing seeds) |
| இழைத்தவாறோ | – | துளைத்துள்ளதே |
| கள் | – | தேன் |
| மலர்க் கூந்தல் | – | பூ அணிந்துள்ள முடி |
| சானகி | – | சீதை |
| மனச்சிறையில் கரந்த காதல் | – | மனமாகிய சிறையில் திருடி வைத்துள்ள (ஒரு வழிக்) காதல் (அன்பு) |
| தடவியதோ ? | – | தடவியது + ஓ = தேடியது + ஓ ? |
| ஒருவன் | – | (இவ்விடத்தில்) இராமன் |
| வாளி | – | அம்பு |

## ❑ வினாப்பயிற்சி

1. கொடுக்கப்பட்டுள்ள கம்பராமாயணப் பாடலின் பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 100சொற்களில் ஒரு சிறு கட்டுரையாக எழுதுக.
3. 'கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகி ', 'உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி' ஆகியவற்றின் கருத்தை உமது சொந்த நடையில் எழுதுக.

# 13. கலிங்கத்துப்பரணி

வருவார் கொழுநர் எனத்திறந்தும்
    வாரார் கொழுநர் என அடைத்தும்
திருகும் குடுமி விடியளவும்
    தேயும் கபாடம் திறமினோ!

....................................

– கடைதிறப்பு–69

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | செயங்கொண்டார் |
| காலம் | : | கி.பி பன்னிரண்டாம் நூற்றாண்டு |
| நூல்பெயர் | : | கலிங்கத்துப்பரணி |

பின்னணிச் செய்திகள் :

போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனைப் பாராட்டிப் பாடுகின்ற இலக்கியவகை பரணி ஆகும். கலிங்கத்துப் பரணி குலோத்துங்க சோழனின் படைத்தலைவனான கருணாகரத் தொண்டை–மானைச் சிறப்பித்துப் பாடியதாகும். இப்பாடல் கலிங்கத்துப் பரணியில் கடைதிறப்பு என்னும் பகுதியில் உள்ளது. போரிலிருந்து திரும்பி வரும் வீரர்களை எதிர்நோக்கி ஏக்கத்துடன் காத்திருக்கும் அவரவர் மனைவியரை நோக்கிப் புலவர் கூறுவதாக அமைகிறது இப்பாடல்.

கருத்து :

'வருவார் கணவர் என்று கதவைத் திறந்தீர்கள்; பின்னர் வரமாட்டார் என்று கதவை மூடினீர்கள். இரவு முழுவதும் இப்படித் திறந்துதிறந்து மூடியதால் அந்தக் கதவைத் தாங்கியுள்ள குருத்துகள் தேய்கின்றன. அத்தகைய கதவுகளைத் திறவுங்களேன்!'

சிறப்பு :

கதவின் குருத்து தேய்வதாகக் கூறியிருப்பது ஏக்கத்துடன் காத்திருக்கும் மனைவியரின் மனத்துடிப்புகளைக் காட்டுவதாக அமைகிறது.

பாடல் வகை :

இப்பாடல் 'தாழிசை' என்னும் பாவினத்தைச் சேர்ந்தது.

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| கொழுநர் | – | கணவர் |
| வாரார் | – | வரமாட்டார் (X வருவார்) |
| திருகு | – | திருப்பு, turn |
| திருகும் குடுமி | – | திறந்து மூடுவதற்கு அல்லது மூடித்திறப்பதற்கு ஏதுவாக கதவின் கீழ்ப்பகுதியில் அமைந்துள்ள 'கால்' போன்ற பகுதி (knob) |
| விடியளவும் | – | பொழுது விடிகின்ற வரை till dawn |
| தேய் (v) | – | குறுகு, get reduced out of over use |
| கபாடம் | – | கதவு |
| திறமினோ ! (திறமின் + ஓ) | – | திறவுங்களேன் ! |

## ❑ வினாப் பயிற்சி

1. கலிங்கத்துப் பரணி பற்றிய பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 50 சொற்கள் கொண்ட உரைநடையாக எழுதுக.
3. 'தேயும் கபாடம் திறமினோ' என்ற பாடல் வரியினைத் தற்கால உரைநடை வடிவத்தில் எழுதுக.

# 14. ஆத்திசூடி

அறஞ்செய விரும்பு
ஆறுவது சினம்
இயல்வது கரவேல்
ஈவது விலக்கேல்
................

ஆசிரியர் : ஔவையார்
காலம் : கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு
நூல் பெயர் : ஆத்திசூடி

பின்னணிச் செய்திகள்:

'ஆத்திசூடி அமர்ந்த தேவனை
ஏத்திஏத்தித் தொழுவோம் யாமே'

என ஆத்திமாலை சூடிய இறைவன் மேல் வணக்கப்பாடல் அமைந்ததால் இந்நூல் ஆத்திசூடி எனப் பெயர்பெற்றது. இதை எழுதிய ஔவையார் சங்ககால ஔவையாரினின்றும் வேறுபட்டவர்.

கருத்து :

நல்ல செயல்களைச் செய்ய விரும்புங்கள். கோபத்தைக் குறைத்துக் கொள்ளுங்கள். தங்களால் முடிந்ததை மறைக்காமல் செய்யுங்கள். மற்றவருக்குக் கொடுத்து உதவுவதை தவிர்க்காதீர்கள்.

சிறப்பு :

இந்நூலில் 109 பாக்கள் உள்ளன. உயிரும் உயிர்மெய்யுமாகிய தமிழ் எழுத்துகள் ஒவ்வொன்றையும் முதலாகக் கொண்டு அகரவரிசையில் அமைந்திருப்பது இப்பாக்களின் சிறப்பாகும். எளிதில் நினைவு வைத்துக்கொள்ளும்படி அறிவுரைகள் ஓரடிப்பாடல்களாகத் தரப்பட்டுள்ளன. நீதியினைக் கற்றுக்கொடுப்பதற்காகத் தொடக்கப்பள்ளித் தமிழ்ப் பாடங்களில்

தவறாது சேர்க்கப்படும் இலக்கியப்பகுதிகளில் ஒன்றாகும். மேலும் இது ஒரு பெண்பாற் புலவரால் பாடப்பட்ட சிறப்பினையுடையது.

பாடல் வகை : ஓரடிப்பாடல்

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| அறம் | – | ethical or religious code of conduct |
| விரும்பு | – | தனக்கு உகந்ததாகக் கருதுவதை அடைய நினை; want; wish |
| ஆறு (v) | – | (கோபம்) தணிதல்; (of anger) get subsided |
| ஆறுவது (n) | – | the act of getting subsided |
| இயல் (v) | – | (ஒருவரால் ஒன்றைச் செய்ய) முடிதல்; be able to; be possible |
| இயல்வது | – | the act of being possible |
| கரவேல் (கரவு + ஏல்) | – | மறைக்காதே ; disapprove (கரவு – மறை; ஏல் – negative suffix) |
| ஈ (v) | – | கொடு; give |

### ❑ வினாப்பயிற்சி

1. ஆத்திசூடி நூலின் பெயர்க்காரணத்தை எழுதுக.
2. கொடுக்கப்பட்டுள்ள ஒருவரிப் பாடல்களின் கருத்துச் சுருக்கத்தைச் சொந்த வாக்கியங்களில் எழுதுக.
3. உயிரெழுத்துகளை முதலாகக் கொண்ட வேறு ஆத்திசூடிப் பாடல்கள் ஏதேனும் ஐந்தினை தெரிந்து எழுதுக.

# 15. பாரத சமுதாயம்

இனியொரு விதி செய்வோம் – அதை
எந்தநாளும் காப்போம்
தனியொருவனுக்கு உணவிலை யெனில்
செகத்தினை யழித்திடுவோம்

................................

ஆசிரியர் : சுப்பிரமணிய பாரதியார்
காலம் : இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி
நூல்பெயர் : பாரதியார் கவிதைகள்

பின்னணிச் செய்திகள் :

பாரதியார் ஒரு விடுதலைக் கவிஞர். அரசியலில் மட்டுமல்ல பொருளாதாரத்திலும் விடுதலை பெற வேண்டும் என்று விரும்பியவர். பாரத சமுதாயம் ஏழ்மையற்ற வளமான சமுதாயமாக இருக்க வேண்டும் அதற்காக மக்கள் விழிப்புணர்வு பெறவேண்டும் என்ற வகையில் பாடுவதாக அமைகிறது இப்பாடல்.

கருத்து :

நாம் இனிமேல் ஒரு கட்டுப்பாடு செய்து கொள்வோம். அதை எப்போதும் கடைபிடிப்போம். நம்முள் யாரேனும் ஒருவருக்கு உணவு கிடைக்கவில்லை என்றால் அந்நிலையை பொறுத்துக் கொள்ள மாட்டோம். உலகமே அதற்குத் தடையாக இருப்பினும் அதனை அழித்து–விடுவோம்.

சிறப்பு :

இது பாரதியாருடைய மனிதநேய உணர்வை எடுத்துக் காட்டுகிறது. அவருடைய விடுதலை உணர்வையும் வெளிப்படுத்துகிறது. இது பாரத

சமுதாயத்தைக் குறிப்பதாக இருந்தாலும் மனித சமுதாயம் முழுவதற்குமே பொருந்துவதாக இருப்பதைக் காணலாம்.

பாடல் வகை :

இசைப்பாடல்

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| விதி | – | rule |
| காப்போம் | – | காப்பு + ஓம் – பாதுகாப்போம் |
| தனி ஒருவன் | – | any individual |
| உணவிலை | – | உணவு இல்லை |
| எனில் | – | என்றால் |
| செகம் | – | உலகம் |
| அழித்திடுவோம் (அழி + த்திடு + ஓம்) | – | அழித்துவிடுவோம் (we will destroy) |

❑ வினாப்பயிற்சி

1. கொடுக்கப்பட்டுள்ள கவிதை பற்றிய பின்னணிச் செய்திகளைத் தொகுத்து சுமார் 10 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. கவிதையின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 5 வாக்கியங்களில் சொந்த நடையில் எழுதுக.

## 16. சங்கநாதம்

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு !
எங்கள் பகைவர் எங்கோ மறைந்தார்.
இங்குள்ள தமிழர்கள் ஒன்றாதல் கண்டே !

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | பாரதிதாசன் |
| காலம் | : | 20 ஆம் நூற்றாண்டு (1964 வரை வாழ்ந்தவர்) |
| நூல்பெயர் | : | பாரதிதாசன் கவிதைகள் |

பின்னணிச் செய்திகள் :

இவ்வாசிரியரின் பெரும்பாலான கவிதைகள் தனித்தமிழ் இயக்கம் மேலோங்கியிருந்த காலப்பகுதியில் எழுதப்பட்டவை. தனக்கு முன்பே காலமாகிவிட்ட மகாகவி பாரதியின் கருத்துகளுக்கு ஆட்பட்டு, அவருக்குத் தான் அடிமை எனப் பொருள் படும்படி 'பாரதிதாசன்' எனப் பெயரிட்டுக் கொண்டார். இவரது இயற்பெயர் கனக. சுப்புரத்தினம்.

கருத்து :

அழியாத தமிழ்மொழிதான் எங்களது வாழ்வும் செல்வமும் ஆகும். இங்கேயுள்ள தமிழர்கள் அனைவரும் ஒன்று கூடியிருப்பதைப் பார்த்து பகைவர் எல்லோரும் ஒடி மறைந்து விட்டனர்.

சிறப்பு :

இப்பாடலின் மூலம் ஆசிரியரின் மொழிப்பற்று வெளிப்படுகிறது. இது திரையிசைப் பாடலாகவும், பொதுக் கூட்டங்களில் மொழி எழுச்சிப் பாடலாகவும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

பாடல் வகை : இசைப்பாடல்

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| வாழ்வு | – | life |
| வளம் | – | wealth and prospertity |
| சங்கு | – | conch-shell (bugle) |
| முழங்கு | – | roar |
| பகைவர் | – | enemy |
| மறைந்தார் | – | disappeared |
| ஒன்றாதல் | – | getting united |

## ❑ வினாப்பயிற்சி

1. பாரதிதாசனின் இயற்பெயர் என்ன ?
2. பாடலின் கருத்து, சிறப்பு ஆகியவற்றைத் தொகுத்துச் சுமார் ஐந்து வாக்கியங்களில் சொந்த நடையில் எழுதுக.
3. தமிழ் மொழி பற்றி உங்களுக்குத் தெரிந்த பாடல் ஒன்றை எழுதுக.

# 17. திரையிசைப் பாடல்

நினைக்கத் தெரிந்த மனமே உனக்கு மறக்கத் தெரியாதா?
பழகத் தெரிந்த உயிரே உனக்கு விலகத் தெரியாதா?
மயங்கத் தெரிந்த கண்ணே உனக்கு உறங்கத் தெரியாதா ?
மலரத் தெரிந்த அன்பே உனக்கு மறையத் தெரியாதா ?
..............................................
கொதிக்கத் தெரிந்த நிலவே உனக்கு குளிரத் தெரியாதா ?
குளிரும் தென்றல் காற்றே உனக்குப் பிரிக்கத் தெரியாதா?
பிரிக்கத் தெரிந்த இறைவா உனக்கு இணைக்கத் தெரியாதா?
இணைக்கத் தெரிந்த தலைவா உனக்கு என்னைப் புரியாதா?

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | கண்ணதாசன் |
| காலம் | : | இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதி |
| நூல்பெயர் | : | திரையிசைப் பாடல்கள் என்னும் நூலில் உள்ளது. |

பின்னணிச் செய்திகள் :

கவிஞர் கண்ணதாசன் தமிழ்த் திரைப்படங்களுக்கு நூற்றுக் கணக்கான பாடல்கள் எழுதியுள்ளார். இந்தப் பாடல் 'ஆனந்த ஜோதி' என்னும் திரைப்படத்துக்காக எழுதப்பட்டது. காதலன் தன்னை மறந்து விட்டதாகக் கருதிய காதலி ஒருத்தி பாடுவதாக அமைகிறது இந்தப்பாடல்.

கருத்து :

சுயவிளக்கம் கொண்டது

சிறப்பு :

எந்தப் பொருளுக்கும் எதிர்எதிரான இரண்டு நிலைகள் உண்டு என்னும் வாழ்க்கைநெறியை இப்பாடல் உணர்த்துகிறது.

பாடல்வகை :

'இசைப்பாடல்'வகை

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| விலகு | – | go away |
| மயங்கு | – | be charmed |
| உறங்கு | – | sleep |
| மலர | – | blossom |
| மறை | – | vanish |
| கொதி | – | boil |
| குளிர | – | get cooled |
| தென்றல் | – | breeze |
| பிரி | – | separate |
| இறைவா | – | oh! God |
| இணைக்க | – | unite |

நினைக்க – மறக்க; பழக – விலக; மயங்க – உறங்க; மலர – மறைய; கொதிக்க – குளிர; பிரிக்க – இணைக்க

மேற்கண்ட சொற்கள் ஒன்றுக்கொன்று முரண்பொருள் (opposite meaning) கொண்டதாகவும், அனைத்தும் செயவென் எச்ச ( infinitive) வடிவத்திலும் அமைந்திருப்பதைக் காண்க

எளிமையும் இனிமையும் கலந்து எதுகை மோனையுடன் அமைந்துள்ளது இப்பாடல்

## ❑ வினாப் பயிற்சி

1. கொடுக்கப்பட்டுள்ள பாடலின் பின்னணிச் செய்திகளைத் தொகுத்துச் சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. பாடலின் கருத்துச் சுருக்கத்தைச் சுமார் 100 சொற்களில் ஒரு சிறு கட்டுரையாக எழுதுக.
3. பாடலில் உள்ள முரண் சொற்களைப் பயன்படுத்திச் சொந்தமாக ஒரு கவிதை எழுதுக.

# 18. புதுக் கவிதைகள்

## அவதாரம்

தீமையை அழிக்க
கடவுள்
பத்து அவதாரம்
எடுக்க –
இன்று
தீமையே
அவதாரம் எடுத்து விட்டது
பதினொன்றாக.

– ந. நடராசபிள்ளை, தீபம், 1980

கருத்து : சுயவிளக்கம் கொண்டது.

## பசி

தேசமும் தலைவர்களும்
கைவிட்ட எங்களை
நீ மட்டுமே
கைவிட மறுக்கிறாய் !

– மு. பாலகுமார், சுட்டி, அக்–நவம், 1981

கருத்து : சுயவிளக்கம் கொண்டது.

## சுதந்திரம்

இரவிலே வாங்கினோம்
இன்னும் விடியவே இல்லை

–அரங்கநாதன் ('கவிக்கோ' அப்துல் ரகுமானின் மாணவன்), 'வானம்பாடி', டிசம்பர் 1985

கருத்து : சுயவிளக்கம் கொண்டது.

## துக்கம்

சாதிச் சக்கரம்
சுழன்றிடும் நாள்வரை
நீதிச் சக்கரம்
அரைக் கம்பத்தில் தான்

– மு. பாலகுமார், தீபம், மார்ச், 1985

கருத்து : சுயவிளக்கம் கொண்டது.

## கோலம்

மாமிக்குக் கோலம்
எறும்புக்குச் சோறு
காருக்கோ அதுபாதை

– மாலன், கணையாழி, 1991

கருத்து : சுயவிளக்கம் கொண்டது.
பாடல் வகை : ஹைக்கூ கவிதை

## அனாதை*

இன்னொரு மனிதன்
இருக்கும்வரை
யாருமே
அநாதையில்லை !

– பார்த்திபனின் கிறுக்கல்கள், ஆனந்த விகடன், 23.4.2000)

கருத்து : சுயவிளக்கம் கொண்டது.

* அனாதை – orphan

## வாழ்க்கை

விமானம்
ம் த
கு ரை
க் இ
ற ற
ப ங்
ப் கு
ர வ
ய து
உ நிச்சயம்

–இர. பன்னீர்செல்வம், 2001

கருத்து : சுயவிளக்கம் கொண்டது.
பாடல்வகை : சித்ரக்கவி வகை

## ❑ வினாப் பயிற்சி

1. புதுக் கவிதைகளின் சிறப்புக்கூறுகள் (special features), வகை ஆகியன பற்றி சுமார் 70 சொற்களில் ஒரு குறிப்பு எழுதுக.
2. உங்களுக்குத் தெரிந்த / கேள்விப்பட்ட / படித்த ஒரு புதுக் கவிதையை நினைவு கூர்ந்து எழுதுக.
3. உங்களைப் பாதித்த ஒரு நிகழ்ச்சியினை மையமாக வைத்து சொந்தமாக ஒரு புதுக்கவிதை எழுதுக.

- இப்பகுதியில் ஏழு பாடப்பிரிவுகள் உள்ளன. அவை :
  செய்தித் திரட்டு ○ சிரிப்புத் துணுக்குகள் ○ துணுக்குச் செய்திகள் ○ அழைப்பிதழ்கள் ○ அலுவலகக் கடிதங்கள் / குறிப்புகள் ○ சான்றிதழ்கள் ○ வருவாய்த்துறை ஆவணங்கள்

- பாடப்பிரிவுகள் ஒவ்வொன்றுக்கும் பல்வேறு மாதிரிகள் எடுத்துக்-காட்டுகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

- இவை–கல்வி, சமூகம், மற்றும் அரசு அலுவல்கள் தொடர்பாக அன்றாடம் பயன்படுத்தப்பட்டு வரும் மொழியின் கட்டமைப்பு, நடை, சிறப்புச்செய்திகள் ஆகிய சிலவற்றை வெளிப்படுத்துவனவே தவிர, தமிழ் மொழியின் பயன்பாட்டை முழுமையாகப் பிரதிபலிப்பன அல்ல.

- செய்தித்திரட்டு, சிரிப்புத்துணுக்குகள், துணுக்குச் செய்திகள் ஆகிய-வற்றில் மொழிநடை மற்றும் கட்டமைப்புகள் ஏறத்தாழ ஒரே மாதிரியாக இருப்பதால் எடுத்துக்காட்டுகள் அனைத்தும் நாள் இதழ் ஒன்றிலிருந்தும், வார இதழ் ஒன்றிலிருந்தும் தரப்பட்டுள்ளன.

- இதேபோல கொடுக்கப்பட்டிருக்கும் சமூகத் தொடர்புக்கான அழைப்-பிதழ்கள் மற்றும் சான்றிதழ்கள் – பயன்பாட்டில் இருக்கும் ஒரு சில மாதிரிகளே.

- பெரும்பாலான எடுத்துக்காட்டுகளுக்குச் சொற்பொருள் குறிப்புகள் தரப்பட்டுள்ளன. மேலும், புரிந்துகொண்ட செய்திகள் அனைத்தையும் வாய் மொழியில் வெளிப்படுத்தப்படுவதை ஊக்குவிக்கும் வகையில், ஒவ்வொரு பாடப்பிரிவிலும் வினாக்கள் மட்டுமே பயிற்சிகளாகத் தரப்பட்டுள்ளன.

---

நோக்கம், பாடத்தெரிவு, படிநிலை வரிசை பாடத்திட்டங்களின் ஆக்கக்கூறுகள் போன்ற அனைத்துச் செய்திகளும் பொது வடிவமைப்பு மற்றும் அறிமுகப்-பகுதிகளில் விரிவாக ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

# 1. செய்தித் திரட்டு
## Collection of News Items

○ **பத்திரிகை ஆசிரியர் வீட்டில் ரூ. 5 லட்சம் திருடிய 4 பேர் கும்பல் கைது**

பெங்களூர் :

கன்னட தினபத்திரிகை ஆசிரியர் வீட்டு கதவை உடைத்து ஐந்து லட்சம் ரூபாய் மதிப்புள்ள தங்கம், வெள்ளி நகைகளை திருடிய நான்கு பேர் கைது செய்யப்பட்டனர்.

சம்யுக்த கர்நாடக என்ற கன்னட பத்திரிகை ஆசிரியர் சாம்ராவ் வீடு வயாலிக்காவலில் உள்ளது. இவரது வீட்டில் யாரும் இல்லாத நேரத்தில் கதவை உடைத்து உள்ளே சென்று தங்கம், வெள்ளி, கைகடிகாரங்கள் ஆகியவற்றை திருடி உள்ளனர்.

இவர்கள் மொத்தம் 19 வீடுகளில் தங்கள் கைவரிசையை காண்பித்துள்ளனர்.

பெங்களூரில் திருடும் நாட்களில், சிக்பேட்டை, சிட்டி மார்க்கெட், உப்பார் பேட்டை பகுதியில் உள்ள ஓட்டல்களில் ஒரு நாள் மட்டும் தங்குவார்கள். இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு இடத்தில் தங்குவார்கள்.

இந்த நான்கு பேரையும் பசவேஸ்வரா நகர் போலீசார் கைது செய்தனர். இவர்கள் மீது ஏற்கனவே, கோர்ட்டில் வாரண்டுகள் உள்ளன. இவர்கள் கூட்டத்தை சேர்ந்த சிலர் தலைமறைவாகி விட்டார்கள். விசேஷ போலீஸ் படை தேடி வருகிறது.
(காலைக்கதிர், 19.12.2000, ப.6, செவ்வாய் .)

* * * * *

## இந்தியாவை உலுக்கியது பூகம்பம், குஜராத்தில் 1500 பேர் பலி

ஆமதாபாத், சூரத் உட்பட பல மாவட்டங்களில் கட்டடங்கள் சரிந்தன

எங்கு பார்த்தாலும் தோண்டத் தோண்ட மனித உடல்கள், அழுகுரல்கள்

தமிழ்நாடு, பாண்டிச்சேரி உட்பட பல மாநிலங்களிலும் நில நடுக்கம்

புதுடில்லி, ஜன.27

இந்தியாவை நேற்று லேசான நிலநடுக்கம் முதல் பயங்கர பூகம்பம் வரை உலுக்கியது. குஜராத் மாநிலத்தில் நேற்று காலை ஏற்பட்ட பயங்கர பூகம்பத்தில், 1,500 பேர் பலியாகினர். 10 ஆயிரம் பேர் காயம் அடைந்தனர். பலமாடிக் கட்டடங்கள் பலவும் தரைமட்டமாயின. சாலைகள் துண்டிக்கப்பட்டன.

தமிழகம், ஆந்திரா, கேரளா, மகாராஷ்டிரா, உ.பி., உட்பட பல மாநிலங்களில் லேசான நிலநடுக்கம் முதல் கடுமையான பூகம்பம் வரை ஏற்பட்டது. சென்னை உட்பட தமிழகத்தில் சில இடங்களில் கட்டடங்களில் லேசான விரிசல் ஏற்பட்டது. பாத்திரங்கள் உருண்டன. பலருக்கு தலைசுற்றல், வாந்தி, மயக்கம் ஏற்பட்டது. மீண்டும் பல மாநிலங்களில் பூகம்பம் ஏற்படுமா ? என்ற அச்சம் ஏற்பட்டுள்ளது. (தினமலர், 27.01.2001, ப.1, சனி)

### சொற்பொருள் குறிப்பு

நிலநடுக்கம் (பூகம்பம்) – earth quake
பலி – sacrifice (died)
தோண்டு – dig
தரைமட்டமாயின – razed to the ground
துண்டிக்கப்படு – cut off
தலைசுற்றல் – giddiness
வாந்தி – vomit
மயக்கம் – faint

* * * * *

○ **தமிழகத்தில் உணவு பஞ்சம் ஏற்படும் அபாயம் ?**

தஞ்சாவூர், ஆக. 20–

தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்டங்களில் உள்ள காவிரி டெல்டா பகுதிகளில் திறந்த வெளியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள 330 கோடி மதிப்பிலான நெல் மூட்டைகள் வீணாகும் அபாயம் ஏற்பட்டுள்ளது. போதிய இட வசதி இன்மையால் வீணாகும் நெல்மூட்டைகளை சில மாதங்களில் அரசே அழிக்கும் சூழ்நிலையும் உருவாகியுள்ளது. இதனால் தமிழகத்தில் உணவு பஞ்சம் ஏற்படும் நிலை உருவாகி வருகிறது.
(தி. ம., 20–8–2001, ப.1, திங்கள்)

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| அபாயம் | – | danger |
| உணவுப் பஞ்சம் | – | food scarcity |
| டெல்டா பகுதி | – | delta region |
| சேமித்துவை | – | store |
| வீணாகு | – | waste |

Note that the headline of the above news item is accompanied by a question mark to highlight the possible effect of the happenings, being reported upon.

* * * * *

○ **"எலிகள் சாப்பிடுவதை விட ஏழைகளுக்கு உணவை கொடுங்களேன் !": அரசுக்கு சுப்ரீம் கோர்ட் கண்டிப்பு**

புதுடில்லி, ஆக. 22–

'இந்திய உணவுக் கழக கிடங்குகளில் மிதமிஞ்சிய அளவில் உணவு தானியங்கள் வீணாகி கொண்டு இருக்கும் போது, மற்றொருபுறம் மக்கள் பட்டினியால் செத்துக்கொண்டு இருக்கின்றனர் என்பது வேதனை–யளிக்கிறது. எலிகளுக்கும் கரையான்களுக்கும் உணவாவதைவிட, வீணாகிப்போகி கடலில் கொட்டுவதை விட, பசியால் வாடும் நலி–வடைந்த ஏழைமக்களுக்கு வழங்க மத்திய, மாநில அரசுகள் உத்தரவாதம் அளிக்கவேண்டும்' என உச்சநீதிமன்றம் அதிரடி தீர்ப்பை வழங்கியுள்ளது.'
(தி. ம., 22–08–2001, ப.6, புதன்)

❑ சொற்பொருள் குறிப்பு

கண்டிப்பு – stern
கிடங்கு – godown
பட்டினி – starvation
எலிகள் – rats
கரையான் – white ants
நலிவடை – become weak
தீர்ப்பு – judgement

* * * * *

## ○ சென்னையில் ரூ. 62 கோடியில் 'டைசல்' பூங்கா முதல்வர் ஜெ., முன்னிலையில் ஒப்பந்தம் கையெழுத்து

சென்னை, ஆக. 26–

சென்னையில் உயிரியல் தொழில் நுட்ப (டைசல்) பூங்கா அமைக்க, தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகமும் அமெரிக்காவில் உள்ள கார்னல் பல்கலைக்கழகமும் முதல்வர் ஜெயலலிதா முன்னிலையில் நேற்று ஒப்பந்தம் செய்து கொண்டன. 'டைடல்' பூங்கா அருகே அமையும் இந்த 'டைசல்' பூங்கா அடுத்த ஆண்டு டிசம்பர் மாதம் முதல் செயல்படத் தொடங்கும்.

(தி. ம., 26.8.2001, ப.9, ஞாயிறு)

❑ சொற்பொருள் குறிப்பு

பூங்கா – park
ஒப்பந்தம் – agreement
உயிரியல் – biological
தொழில்நுட்ப – technical
டைசல் – TICEL - TIdco CEntre for Lifescienses
டைடல் – TIDco + ELcot - TIDEL;
TIDCO -Tamilnadu Industrial Development Corporation;
ELCOT - Electronic Corporation of Tamilnadu

* * * * *

○ **நிலத்தடி நீர்மட்டம் குறைவு சிறப்பு திட்டத்திற்கு பரிந்துரை**

திண்டுக்கல், செப்.1 –

திண்டுக்கல் மாவட்டத்தில் நிலத்தடி நீர்மட்டம் அதளபாதாளத்திற்கு சென்றுள்ள கிராமங்களில் ரூ.2.25 கோடி செலவில் சிறப்பு குடிநீர் திட்டத்தை செயல்படுத்த அரசுக்கு பரிந்துரை செய்யப்பட்டுள்ளதாக மாவட்ட கலெக்டர் தியாகராஜன் தெரிவித்துள்ளார்.
(தி. ம., 1–9–2001, ப.4, சனி)

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| நிலத்தடி நீர் | – | ground water |
| குடிநீர்த் திட்டம் | – | drinking water project |
| பரிந்துரை | – | recommendation |
| அதளபாதாளம் | – | too deep |

* * * * *

○ **மனைவி கொலை முயற்சி கணவன் கைது**

திண்டுக்கல், செப்.1–

திண்டுக்கல்லில் மனைவியை உயிரோடு தீவைத்து கொலை செய்ய முயற்சி செய்த கணவரை போலீசார் கைது செய்துள்ளனர். காயங்களுடன் மனைவி ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறார். திண்டுக்கல் குமரன்திருநகரை சேர்ந்த பாபுசுபேதார் மகன் சேக்முகமது ரபீக். இவரது மனைவி லத்தீப்பானு (22). கணவன், மனைவிக்கு இடையே அடிக்கடி தகராறு ஏற்பட்டு வந்துள்ளது. இருவருக்கும் வாய்த்தகராறு ஏற்பட்டது. ஆத்திரமடைந்த ரபீக் மண்ணெண்ணெயை பானு மீது ஊற்றி தீவைத்ததாக கூறப்படுகிறது. பானுவின் அலறல் சப்தம் கேட்டு அக்கம் பக்கத்தினர் ஓடியுள்ளனர். அவரது உடலில் எரிந்து கொண்டிருந்த தீயை அணைத்தனர். தீக்காயம் அடைந்த அவர் திண்டுக்கல் அரசு ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டுள்ளார். இன்ஸ்பெக்டர் சந்திரசேனன், எஸ். ஐ . ராமராஜ் வழக்குபதிவு செய்துள்ளனர்.
(தி. ம., 1–9–2001, ப.4, சனி)

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| கொலை முயற்சி | – | attempt to murder |
| தீ வை | – | set fire |
| தீ அணை | – | extinguish the fire |
| சிகிச்சை | – | treatment |
| தகராறு | – | conflict |
| வாய்த்தகராறு | – | tussle, scuffle |
| அலறல் | – | hue and cry |
| அக்கம்பக்கம் | – | surrounding |
| வழக்குப்பதிவு | – | FIR |

* * * * *

## ○ செய்தித் துளிகள்

### பரிசளிப்பு விழா

கொடைக்கானல்: கொடைக்கானல் ரோட்டரி சங்கம் சார்பாக 10ம் வகுப்பு தேர்வில் முதல் மார்க்குகள் பெற்ற மாணவ, மாணவிகளுக்கு சான்றிதழ் வழங்கும் விழா நடந்தது.

கொடைக்கானல் கால்ட்டன் ஓட்டலில் நடந்த விழாவில் ரோட்டரி சங்க தலைவர் ஜான் தேவதாஸ் தலைமை வகித்தார்.
(இ. ம., 1–9–2001, ப.4, சனி)

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| சார்பாக | – | on behalf of |
| சான்றிதழ் | – | certificate |
| விழா | – | function |
| துளி | – | சிறு (செய்தி) ; துணுக்குச் செய்தி |

* * * * *

### ○ இளம்பெண் தற்கொலை

திண்டுக்கல்: வேடசந்தூர் குங்குமக் காளியம்மன் கோயில் தெருவை சேர்ந்த அழகர் மகள் ஜெயலட்சுமி (18). இவருக்கு சுமார் 6

மாதங்களுக்கு முன்பு திருமணம் நடந்தது. குடும்பத்தில் தொடர்ந்து பிரச்னை ஏற்பட்டு வந்துள்ளது. இருகுடும்பத்தினரும் ஒத்துபோகாத நிலையில் சுமார் 15 நாட்களுக்கு முன்பு கணவரிடமிருந்து ஜெயலட்சுமி பிரிந்து வந்துள்ளார். மனமுடைந்த அவர் வீட்டில் தூக்கு மாட்டி தற்கொலை செய்து கொண்டார்.
(தி. ம., 1-9-2001, ப.4, சனி)

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| இளம்பெண் | – | young woman |
| ஒத்துப்போகாத | – | not having aggreement |
| பிரிந்துவந்து | – | having separated |
| மனமுடை(v) | – | மன உறுதி இழத்தல் ; lose heart |
| தூக்குமாட்டு | – | hang |
| தற்கொலை | – | suicide |

* * * * *



## பெண் தொழில் முனைவோருக்கு மூன்று மாவட்டத்தில் தொழிற்பேட்டை

சென்னை, செப்.1–

சென்னை, மதுரை, கோவை போன்ற மாவட்டங்களில் பெண் தொழில் முனைவோருக்காக தொழிற்பேட்டைகள் அமைக்கப்படும் என்று ஊரகத் தொழில் துறை அமைச்சர் பாண்டுரங்கன் நேற்று சட்டசபையில் கூறினார்.
(தி. ம., 1-9-2001, ப.9, சனி)

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| தொழில் முனைவோர் | – | entrepreneur |
| தொழிற் பேட்டை | – | industrial estate |
| ஊரகத் தொழில் துறை | – | department of village industries |

* * * * *



## நீதிபதிகள் ஊதியம்
## மாநில அரசுகளுக்கு சுப்ரீம்கோர்ட் உத்தரவு

புதுடில்லி, செப்.1–

நீதிபதிகளுக்கான ஷெட்டி கமிஷன் ஊதிய விகிதத்தை நான்கு வாரங்களுக்குள் அமல் படுத்துமாறு மாநில அரசுகளுக்கு உச்சநீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது.

உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி ஆனந்த், நீதிபதிகள் பரூச்சா, கிருபால் ஆகியோர் அடங்கிய டிவிஷன் பெஞ்ச் தங்கள் உத்தரவில், "நீதிபதிகள் ஊதிய விகிதத்திற்காக ஷெட்டி கமிஷன் அமைக்கப்பட்டது. சில மாநிலங்களில் ஷெட்டி கமிஷன் அறிவித்துள்ள ஊதிய விகிதம் கடைபிடிக்கப்படாமல், அந்தந்த மாநிலங்களால் உருவாக்கப்பட்ட ஊதிய விகிதத்தின்படி ஊதியம் வழங்கப்படுகிறது.

இந்த மாநிலங்கள், நீதிபதிகளுக்கு ஷெட்டி கமிஷன் பரிந்துரைத்துள்ள ஊதிய விகிதத்தை நான்கு வாரத்திற்குள் வழங்க வேண்டும். இந்த ஊதிய விகிதத்தின்படி இதுவரை வழங்கப்படாமல் இருந்த பாக்கித் தொகையை டிசம்பர் 31ம் தேதிக்குள் மொத்தமாகவோ, தவணை முறையிலோ வழங்க வேண்டும்" என்று உத்தரவிட்டுள்ளனர்.

(தி. ம, 1–9–2001, ப.9, சனி).

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| அமல்படுத்து | – | implement |
| கடைபிடி | – | follow |
| ஊதியவிகிதம் | – | scale of pay |
| பரிந்துரை | – | recommend |
| பாக்கித் தொகை | – | balance amount (arears) |

* * * * *

### ❑ வினாப்பயிற்சி

1. இன்றைய செய்தித்தாளில் நீங்கள் படித்த ஏதேனும் இரண்டு செய்திகளின் சுருக்கத்தை வகுப்பறையில் (5 நிமிடப் பேச்சின் மூலம்) தெரிவிக்க.
2. தமிழ்ச் செய்தித்தாள்கள் சிலவற்றின் பெயர்களைக் கூறி அவை பயன்படுத்தும் மொழிநடைகளின் சிறப்புக் கூறுகள் எவையேனும் இரண்டினை எழுதுக.

# 2. சிரிப்புத் துணுக்குகள்

## Wits and Bits

### ○ மாணவனா ? ஆசிரியரா ?

'ஒரு கல்லூரி வகுப்புக்குள் குரங்கு புகுந்துடுச்சு. அந்த நேரம் உள்ளே நுழைந்த பேராசிரியர், மாணவர்களோடு குரங்கைப் பார்த்து-விட்டுக் கிண்டலாக, 'என்னப்பா.. புது அட்மிஷனா...?'னு கேட்டார். மாணவர்கள் பதிலுக்குப் படுநக்கலாக, 'இல்ல சார் ... புது அப்பாயின்ட்-மெண்ட்' என்றார்கள்...'
(ஆனந்த விகடன், 17.9.2000, ப.99).

❑ சொற்பொருள் குறிப்பு

புகுந்துடுச்சு – புகுந்து விட்டது

கிண்டலாக – mockingly, sarcastically

நக்கலாக – கிண்டலாக

படுநக்கலாக – மிகவும் கிண்டலாக

* * * * *

### ○ பையன்

"இந்தப் பையன் பிற்காலத்துல பெரிய அரசியல்வாதியா வருவான்னு சொல்றியே... எப்படி ?"

"பின்னே என்ன... அஞ்சு வருஷத்துல ஆறு ஸ்கூல் மாறிட்டானே!"
(ஆ. வி., 13.5.2001, ப.73).

❑ சொற்பொருள் குறிப்பு

பையன் – boy

பிற்காலம் – later time, in future

மாறு – change

* * * * *

## ○ குற்றச்சாட்டினால் வந்த குழப்பம்

பெண்கள்தான் எப்போதும் வெட்டியாக பேசிக்கொண்டு பொழுதைக் கழிக்கிறார்கள் என்று குற்றம்சாட்டிக் கொண்டிருந்த ஒரு கணவனுக்கு ஆதாரமாக ஓர் ஆராய்ச்சி முடிவு சிக்கியது. ஒரு நாளைக்கு ஆண்கள் பதினைந்தாயிரம் வார்த்தைகள் பேச, பெண்களோ முப்பதாயிரம் வார்த்தைகள் பேசுகிறார்கள் என்றது அந்த ஆராய்ச்சி முடிவு. இதைச் சுட்டிக்காட்டி, "இதுக்கு என்ன சொல்றே ?" என்று மனைவியை ஏளனமாகப் பார்த்தான் கணவன். சில விநாடிகள் யோசித்துவிட்டு,"இந்த ஆராய்ச்சி முடிவில் தப்பு ஒன்றும் இல்லை. ஆண்களைப் போல் பெண்கள் இரண்டு மடங்கு பேசக் காரணமே, ஆண்களுக்கு எதையும் ஒரே ஒரு தடவை சொல்லிப் புரியவைக்க முடியாது என்பதுதான். அவர்களுக்கு ஒவ்வொன்றையும் இரண்டிரண்டு தடவை சொல்ல வேண்டியிருக்கிறதே!" என்றாள் மனைவி. சற்று குழம்பிப் போன கணவன் கேட்டான் – "நீ என்ன சொல்றே ?"
(நெட் ஜோக் !, ஆ. வி., 2.1.2000, ப.96).

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| கழிக்கிறார்கள் | – | spend |
| சுட்டிக்காட்டு | – | point out |
| புரியவை | – | make (one) understood |
| குழம்பிப்போ | – | get confused |

* * * * *

## ○ அதுக்குத்தான் சண்டை

"ரோட்டில் ரெண்டு பேர் கட்டிப் புரண்டு சண்டை போட்டுக்கிட்டிருந்தாங்க. பக்கத்தில் ஒரு பையன் நின்னு 'அப்பா, அப்பா'னு அழுதுட்டிருந்தான். அந்த வழியா போன ஒருத்தன், அந்தப் பையனிடம் 'என்னடா பிரச்னை... ஏன் அழறே..?'னு கேட்டான். அந்த பையன் 'அப்பா, அப்பா'னு தொடர்ந்து அழுதான். 'சண்டை போட்டுக்கிட்டிருக்கற ரெண்டு பேர்ல உங்கப்பா யாருடா..?'னு கேட்டதுக்கு 'அதுக்குத்தான் ரெண்டு பேரும் சண்டை போடறாங்க'னு சொல்லிட்டு, மறுபடியும் அழுதான் அந்தப் பையன்."
(ஆ. வி., 2.7.2000, ப.26).

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| கட்டிப்புரள் | – | role over in fight |

* * * * *

○ ## ஓடிப்போன ஆடு !

"ஓவியப் போட்டி ஒண்ணு நடந்தது. சின்னப் பசங்க நிறையப் பேரு படம் வரைஞ்சு கொடுத்தாங்க. ஒரு பையன் கொடுத்த பேப்பர் மட்டும் வெள்ளையா இருந்தது. மாஸ்டருக்குப் பயங்கர கோபம். 'என்னடா இது..?'ணு கேட்டார். 'ஒரு ஆடு புல் திங்கற ஓவியம் சார்...'னான் பையன். மாஸ்டருக்குக் குழப்பமாயிடுச்சு. 'ஆடு, புல் எல்லாம் எங்கேடா..?'னார். 'புல் எப்படியிருக்கும் சார்..? அதுதான் ஆடு தின்னுடுச்சே!'னான் பையன். 'அப்படின்னா ஆடாவது இருக்கணுமே..?'னார் மாஸ்டர். 'புல் இல்லாத இடத்துல ஆட்டுக்கு என்ன சார் வேலை..? அதனால் அது ஓடிப் போயிடுச்சு!'னான் பையன்."
(ஆ. வி., 2.7.2000, ப.26,27).

❑ சொற்பொருள் குறிப்பு

பசங்க >பசங்கள் – குழந்தைகள்
ஓவியப்போட்டி – drawing competetion
புல் – grass
ஆடு – goat

* * * * *

○ ## காது கேட்க வாய்ப்பு

ஹியரிங் எய்டு வாங்க கடைக்குப் போனார் ஒருத்தர். "ஏம்பா.. ஹியரிங் எய்டு என்ன விலை?" கடைக்காரரிடம் கேட்டார். "ஏழு ரூபாய்லேருந்து எழுபதாயிரம் ரூபாய் வரைக்கும் மாடல்கள் இருக்கு. எது வேணும் சார் ?" என்றார் கடைக்காரர். நம்ம ஆள் கடைந்தெடுத்த கஞ்சன். ஏழு ரூபாய் மாடலையே எடுக்க சொன்னார். இவரது காதில் அந்த ஹியரிங் எய்டை கடைக்காரர் மாட்டிக் கொண்டிருந்தபோது, "இனி காது நல்லா கேட்கும்தானே?" என்றார் நம்ம ஆள் உஷாராக. கடைக்காரர் சொன்னார் – "இதைப் பார்க்கறவங்க உங்களுக்கு காது கேட்காதுங்கற விஷயத்தைக் கண்டிப்பா தெரிஞ்சுக்குவாங்க. அப்புறம் அவங்க சத்தமா பேசறப்ப காது கேட்க வாய்ப்பிருக்கு சார் !"
(ஆ. வி., 26.8.2001, ப.66).

❑ சொற்பொருள் குறிப்பு

கடைந்தெடுத்த கஞ்சன் – perfect miser
கேள் > கேட்கும் – hear

* * * * *

## ○ பிடிக்காத பேச்சு

"சமையல் ரொம்ப நல்லா இருக்குன்னு என் கணவர் சொன்னா எனக்குப் பிடிக்காது!".
"ஏன் அப்படி ?".
"தற்பெருமை பேசறவங்களைக் கண்டாலே எனக்குப் பிடிக்காது!"
(ஆ. வி., 28.11.99, ப.98).

❑ சொற்பொருள் குறிப்பு

தற்பெருமை – self boast

* * * * *

## ○ வாத்து மடையன்

வாத்துக்கூட்டம் ஒன்று சென்று கொண்டிருந்தபோது ஒருவன், துப்பாக்கியால் வானத்தை நோக்கிச் சுட்டான். அந்தச் சத்தத்தைக் கேட்ட வாத்துக்கள் அனைத்தும் தாங்கள் இறந்துவிட்டதாகவே நினைத்துக் கொண்டு மயங்கி விழுந்தன. மயக்கம் தெளிந்து எழுந்த பிறகுதான் தெரிந்தது மடவாத்துக்களுக்கு – நாம் சுடப்படவில்லை என்று ! இதை வைத்துதான் மடத்தனமான காரியம் செய்பவர்களை, வாத்துமடையன் என்கிறார்கள் !
(ஆ. வி., 24.06.2001, ப.133).

❑ சொற்பொருள் குறிப்பு

வாத்து – duck
வாத்துமடையன் – perfect fool
மயக்கம் – faint, unconsciousness
மயக்கம் தெளி – regain consiousness

* * * * *

❑ வினாப்பயிற்சி

1. வார / மாத இதழ்களில் நீங்கள் படித்து மகிழ்ந்த சிரிப்புத்துணுக்குகளைப்போல சொந்தமாக இரண்டு துணுக்குகள் எழுதுக.
2. தமிழ் வார / மாத இதழ்கள் சிலவற்றின் பெயர்களைக் கூறி அவை ஒவ்வொன்றிலும் நீங்கள் படித்து மகிழ்ந்த ஏதேனும் இரண்டு சிரிப்புத்துணுக்கு–களை வகுப்பறையில் சொல்லுக.

# 3. துணுக்குச் செய்திகள்
# Tit-bits



## நடுகல் வழிபாடு

இந்திய விடுதலைப் போராட்ட வரலாற்றில் தன்க்கு என்று தனி இடம் பெற்றுள்ள வாஞ்சிநாதனின் நடுகல்லுக்கு வீரவணக்கம் செலுத்தும் விழாவை இம்மாதம் 16-ம் தேதி வாஞ்சி இயக்கத்தினர் நடத்தினார்கள். அதென்ன நடுகல்..? சிலைக்கும் நடுகல்லுக்கும் வேறுபாடு உண்டு. நம் விருப்பத்துக்குரிய யாருக்கு வேண்டுமானாலும் சிலை வைத்துக் கொள்ளலாம். ஆனால், நடுகல் என்பது அப்படி அல்ல. களச்சாவைப் பெற்றவர்களுக்கு - அதாவது, ஒரு போராட்டத்தில் ஈடுபட்டு உயிர்நீத்த வீரர்களுக்கு மட்டுமே அது உரியது. நடுகல்லில் அந்தக் கல்லுக்குரிய வீரனின் உருவம் செதுக்கப்பட்டு இருக்கும். ஆனாலும், அது சிலை அல்ல. தமிழர்கள் அந்தக் காலத்தில் நடுகல்லை வழிபட்டு வீரவணக்கம் செலுத்தியது, தங்கள் தாய்நாட்டுக்காகக் களம் புகுந்தவர்கள்மீது அவர்கள் காட்டிய நன்றி உணர்வின் அடையாளம். வீரவாஞ்சிக்கு ஒரு வீரவணக்கம்!

(ஆ. வி., 25.6.2000, ப.48-49).

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| நடுகல் | – | hero stone; a kind of stone memorial errected for those who gave their life for some noble cause; here, for freedom |
| வழிபாடு | – | worship |
| களச்சாவு | – | death in the field |
| வீரவணக்கம் | – | paying tribute to the hero |

* * * * *



## இடக்கரடக்கல்

'சுத்த காம்போதியா இருக்கியேடா'னு ஒருவரைத் திட்டுகிறோம். ஆனால், 'காம்போதி' என்பது ஒரு ராகத்தின் பெயர். அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்..?

காம்போதி பரிதாபமும் சோகமும் இழையும் ஒரு ராகம். கழுதை கத்தும்போதும் பரிதாபமாக ஒரு சத்தம் வெளிப்படும். 'கம்போதி ராகம் மாதிரி' என்று தமாஷாக கழுதையின் கத்தல் அழைக்கப்பட, ஒருவனைக் கழுதை என்று அழைக்க வேண்டுமென்றால் நேரடியாகச் சொல்லாமல் 'காம்போதி' என்று மறைமுகமாகச் சொன்னார்கள். இதற்கு ஆங்கிலத்தில் Euphemism என்று பெயர். தமிழில் – இடக்கரடக்கல் ! அதாவது, நாசூக்காகத் திட்டுவது!
(ஆ. வி., 22.10.2000, ப.74-75).

❑ சொற்பொருள் குறிப்பு

காம்போதி – a kind of 'raga'

இடக்கரடக்கல் – சில பொருள்களை அல்லது செயல்களைச் சுட்டும் நேரடிச் சொற்களை பலர் முன்னிலையில் கூறுவது நாகரிகமாக இருக்காது என்பதால் அவற்றைத் தவிர்த்து வேறு வழியில் மறைமுகமாகக் குறிப்பிடுதல் ; a euphemistic usage

காம்போதி (idiomatic) – sarcastic comment of an unpleasant song - bray of a donkey

நாசூக்கு – nicely, mild (scolding)

Note : Though it is said in the text as '*இடக்கரடக்கல்*', this will not fall under this category according to Tamil grammarians

* * * * *

## ○ Polyntrom வார்த்தைகள்

வலமிருந்து இடமாகப் படித்தாலும் அதே வார்த்தையாக அமைவதுதான் 'பாலின்ட்ரோம்'. தமிழில் 'விகடகவி' என்பது போல! 'பாலின்ட்ரோம்' உபயோகிப்பதில் ஆங்கில மன்னன் ஒட்டோ ராட்காட் கில்லாடி! பிரிட்டனில் 9.3.39–ல் பிறந்தார் அவர். ஆச்சரியம் ... பிறந்த தேதியே பாலின்ட்ரோம்! அவரிடம் ஒரு பேட்டியில் 'உங்களுக்கு என்ன கார் பிடிக்கும் ?' என்றதற்கு 'Race car' என்றார் அவர் (திருப்பிப் படியுங்கள்). 'சாதாரண காரில் என்ன மாடல் பிடிக்கும்?' என்றதற்கு 'A Toyota' என்று பதில் வந்தது. 'சினிமாவுக்கு போவீர்களா ? வீட்டில் டி.வி.–தானா?' என்றதற்கு 'Same nice cinemas' என்றார் ராட்காட். கடவுளுக்கும் பாலின்ட்ரோம் பிடிக்கும் என்று தோன்றுகிறது. எல்லா

பிரச்னைகளையும் ஆரம்பித்து வைத்தவர் பெயரை Eve என்று வைத்தவ-ராச்சே!
(மதன், ஆ. வி., 24.6.2001, ப.133).

❑ சொற்பொருள் குறிப்பு

மன்னன் – king

பிரச்னைகள் – problems

* * * * *

○ 'தமிழில் எவ்வளவு எண் வரை வார்த்தைகள் உண்டு (அல்லது கோடிதான் க்ளைமாக்ஸ் நம்பரா?)'

அ. இந்த விஷயத்தில் சம்ஸ்கிருதத்தையே தமிழ் மிஞ்சுகிறது. இரா. முத்துக்குமாரசாமி (திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்) மேலாண்மை இயக்குநர், தமிழில் 1–ஐ த் தொடர்ந்து 210 சைபர் வரை எண்களுக்கு வார்த்தைகள் இருக்கின்றன என்று விவரமாக கடிதம் எழுதியிருக்கிறார். சுருக்கமாக அதில் சில கீழே!

1–க்குப் பின் 7 பூஜ்யம் = கோடி
14 பூஜ்யம் = மகாகோடி
21 பூஜ்யம் = சங்கம்
35 பூஜ்யம் = விந்தம்
49 பூஜ்யம் = பதுமம்
63 பூஜ்யம் = குமுதம்
77 பூஜ்யம் = சமுத்திரம்
91 பூஜ்யம் = வெள்ளம்
105 பூஜ்யம் = பிரளயம்
119 பூஜ்யம் = சஞ்சலம்
175 பூஜ்யம் = அற்புதம்
203 பூஜ்யம் = அனந்தம்
210 பூஜ்யம் = மகா அனந்தம்

ஆ. தவிர, ஒன்றுக்குக் கீழேயும் தமிழ் செல்கிறது ! 1/2 = அரை, 1/4 = கால் என்பது நமக்குத் தெரியும். 1/320-க்கு என்ன வார்த்தை ? 'முந்திரி' என்கிறது தமிழ்!

– இந்த பட்டியலை எழுதியனுப்பியவர் ஜெ. சுதாகர், சென்னை – 50! இனிமேல் நீங்கள் 'ஒரு முந்திரி தா !' என்று நண்பரிடம் கேட்டு அவர் ஒரு முந்திரியில் 320–ல் ஒரு பகுதியை மட்டும் குண்டூசியில் கச்சிதமாகப் பிய்த்துக் கொடுத்தால் அதுவும் முந்திரியே!
(ஆ. வி., 29.07.2001, ப.132-133).

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| தமிழில் எவ்வளவு எண்வரை வார்த்தைகள் உண்டு | – | upto how many numbers there are words in Tamil |
| எண் | – | number |
| மேலாண்மை இயக்குநர் | – | managing director |
| விவரமாக | – | elaborately |
| கச்சிதமாக | – | correctly, neatly |

* * * * *

## ❑ வினாப்பயிற்சி

1. நீங்கள் தெரிந்து கொண்ட புதிய துணுக்குச்செய்திகள் ஏதேனும் இரண்டை வகுப்பறையில் கூறுக.
2. துணுக்குச் செய்திகளில் பயன்படுத்தப்படும் வாக்கிய அமைப்பு, மொழிநடை ஆகியவற்றின் சிறப்புக் கூறுகள் யாவை ?

# 4. அழைப்பிதழ்கள்
## Invitations

ஓ
ஸ்ரீ குமரன் துணை

**காதணி விழா அழைப்பிதழ்**

நிகழும் தாது வருஷம் வைகாசி மாதம் 6–ந் தேதி ஆங்கிலம் (19–5–1996) ஞாயிற்றுக்கிழமை வளர்பிறை சுக்லபட்சம், துவிதியை திதி ரோகிணி நட்சத்திரம், சித்தயோகம் கூடிய சுபயோக சுப தினத்தில் காலை 6–மணிக்கு மேல் 7.30 மணிக்குள்ளாக ரிஷப லக்கினத்தில்,

கருப்புக்குடி, மு. ஆறுமுகம் – பொன்னம்மாள்
பேரன்களும், எங்களது மகன்களுமாகிய செல்வன்கள்

**V. கார்த்திகேயன், V. பார்த்திபன் V. முத்துக்குமரன்**

ஆகிய இவர்களுக்கு ***சிகை நீக்கி காதணி விழா செய்ய பெரியோர்–களால் நிச்சயித்த வண்ணம்*** சிங்கம்புணரி, காளாப்பூர் திரு. கூத்தையா ***அவர்கள் இல்லத்தில் நடைபெற*** இருப்பதால் தாங்கள் குடும்பத்துடன் வந்திருந்து குழந்தைகளை ஆசீர்வதிக்க வேணுமாய் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| யானும் அவ்வண்ணமே கோரும் : | இப்படிக்கு |
| N. கூத்தையா | A. வெள்ளைச்சாமி |
| ஒய்யம்மாள் | V. வெள்ளையம்மாள் |
| (காளாப்பூர்) | (கருப்புக்குடி) |

### ❑ சொற்பொருள் குறிப்பு

குமரன் துணை – 'எல்லாச் செயல்களுக்கும் குமரக்கடவுள் உதவியாக இருந்து காப்பானாக' என்று வேண்டுதல்

பெரியோர்களால் நிச்சயித்த வண்ணம் – as decided by the elders

காதணி – ear ornament

காதணிவிழா – ear boring ceremony

அழைப்பிதழ் – invitation

| | | |
|---|---|---|
| வளர்பிறை | – | waxing period |
| பேரன்கள் | – | grand sons |
| சிகை | – | முடி; hair |
| ஆசி | – | *ஆசீர்வாதம்* ; blessings ; good wishes |
| ஆசீர்வதி (v) | – | bless; wish |
| வேணும் | – | வேண்டும் |
| யானும் | – | தானும் |
| அவ்வண்ணமே | – | (இன்னொருவருடன் சேர்ந்து தானும் செய்வதாக இருப்பதைத் தெரிவிக்கும் போது) அவ்வாறே; அப்படியே |
| கோரும் | – | (முறையாக) வேண்டிக் கொள்ளுதல் |

* * * * *

○ மாங்கரை அருள்மிகு செல்வ விநாயகர் துணை

**பூப்புனித நீராட்டுவிழா அழைப்பிதழ்**

அன்புடையீர்,

நிகழும் மங்களகரமான பிரமோதி வருடம் சித்திரை மாதம் 27ந்தேதி (10–5–99) திங்கட்கிழமை தசமி திதி சதய நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் பகல் 12–00 மணிக்கு மேல் 1–30 மணிக்குள் சுபவேளையில்

சாணார்பட்டி திரு. அ. சக்திவேல் – பொன்னுத்தாய் இவர்களின் பேத்தியும் எங்களது குமாரத்தியுமான

**திருவளர்ச்செல்வி எஸ். விசுவபிரியாவுக்கு**

பூப்புனித நீராட்டு விழா பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு மேற்படி வைபவம், *திருப்பாலை*, மதுரை–14ல் உள்ள எங்களது இல்லத்தில் நடைபெறும். தாங்கள் குடும்ப சகிதம் வந்திருந்து செல்வியை வாழ்த்தி–யருள வேண்டுகிறோம்.

இப்படிக்கு

தங்கள் நல்வரவை விரும்பும் சுற்றமும் – நட்பும்

சுப. சதாசிவம்
பேச்சியம்மாள்

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| அருள்மிகு | – | *கருணை வாய்ந்த* ; title prefixed to the names of gods |

| | | |
|---|---|---|
| பூப்புனித நீராட்டு | – | ritual connected with puberty |
| நிச்சயிக்கப்படு | – | get decided |
| வாழ்த்தியருள் | – | bless |
| நல்வரவை விரும்பும் | – | (those who) want your gracious presence |
| சுற்றம் | – | உறவு; சொந்தம்; relation; kith and kin |
| நட்பு | – | உறவினர் அல்லாதவருடன் கொள்ளும் உறவு; friendship |
| சுற்றமும் நட்பும் | – | relatives and friends |
| இப்படிக்கு | – | இங்ஙனம்; part of the subscription (of a letter, invitation, etc.) |

* * * * *

○

முருக கடவுள் துணை

## திருமண அழைப்பிதழ்

அன்புடையீர்,

நிகழும் ஆங்கீரஸ ஆண்டு சித்திரைத் திங்கள் 24–ஆம் நாள் (6–5–92) புதன் கிழமை காலை 9.00 மணிக்குமேல் 10.30 மணிக்குள்

எங்கள் குமாரன்

திருவளர்ச் செல்வன் பொன். நாகராஜன்

(லேட்) சு. துரைப்பாண்டி – பழநியம்மாள் அவர்களின் புதல்வி

திருவளர்ச்செல்வி து. சாந்தி

ஆகியோர்க்குத் திருமணம் செய்யப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு மேற்படி திருமணம் பெத்தாம்பட்டி மணமகன் இல்லத்தில் நடைபெற–விருப்பதால் தாங்கள் தங்கள் சுற்றம் சூழ வருகைதந்து மணமக்களை வாழ்த்தியருள வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| தங்கள் நல்வரவை நாடும் | தங்களன்புள்ள |
| பொன். பழநிவேல்–செண்பகவள்ளி | ப. பொன்னன்–கருப்பாயி அம்மாள் |
| பொன். சுப்பையா–உமாதேவி | பெத்தாம்பட்டி, சாணார்பட்டி (அஞ்சல்) 624 304 |

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| சுற்றம் சூழ | – | along with relatives |

திருவளர்ச் செல்வன் – an attribute to groom

திருவளர்ச் செல்வி – an attribute to bride

மணமகன் – bridegroom (மணமகள் – bride)

மணமக்கள் – bridal pair

* * * * *

ஸ்ரீ யானை அடியான் துணை

## திருமண அழைப்பிதழ்

அன்புடையீர்,

நிகழும் மங்களகரமான பவஸ்ரீ ஆண்டு மாசிமாதம் 21ம் நாள் (5–3–95) ஞாயிற்றுக்கிழமை அசுவணி நட்சத்திரம் சித்த யோகமும் கூடிய சுப தினத்தில் காலை 7.30 மணிக்கு மேல் 9–00 மணிக்குள் மேச லக்னத்தில்

எமக்கலாபுரம் கிராமம் கருப்புடையான்பட்டி (லேட்) ஆ.சு. அழகப்ப உடையார்
அவர்களின் குமாரன்
திருநிறைச்செல்வன் **கருப்புத்துரைக்கும்**

எமக்கலாபுரம் கிராமம் கருப்புடையான் பட்டி (லேட்) முத்துச்சாமி (எ) சடையப்ப
உடையார் பேத்தியும் எனது குமாரத்தியுமாகிய
திருநிறைச் செல்வி **ராஜேஸ்வரிக்கும்**

திருமணம் செய்ய பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு மேற்படி திருமண விழா வைபவங்கள் திண்டுக்கல் ரயில்வே ஸ்டேசன் அருகில் வ. மகாலிங்க நாடார் தெய்வானையம்மாள் திருமண மண்டபத்தில் நடைபெறுவதால் தாங்கள் தங்கள் சுற்றம்சூழ வருகை தந்து மணமக்களை வாழ்த்தியருள வேண்டுகிறோம்.

(இருவீட்டார் அழைப்பு)

அவ்வண்ணமே கோரும்
P. ராஜம்மாள்
A. முத்துக்கிருஷ்ணன்

தங்கள் அன்புள்ள
A. முத்தம்மாள், A. நடராஜன்
A. வேணுகோபால்

## ❑ சொற்பொருள் குறிப்பு

இருவீட்டார் அழைப்பு – invitation by both the families

* * * * *

○

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

**நிக்காஹ் (என்னும்) திருமண அழைப்பிதழ்**

அஸ்ஸலாமு அலைக்கும்

அன்புடையீர்,

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் திருவருளாலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் துஆ பரக்கத்தாலும் நிகழும் ஹிஜ்ரி 1418 ஷாபான் பிறை 20 (21–12–97) ஞாயிற்றுக்கிழமை காலை 10–30 மணிக்கு மேல் 12–00 மணிக்குள் முபாரக்கான நல்வேளையில்

K. சையது அஹமது ராவுத்தர் குமாரன்
திருநிறைச்செல்வன் **முகமது அலி** என்கிற மணமகனுக்கும்

A.முஹம்மது ஷெரீப் அவர்கள் குமாரத்தியுமாகிய
திருநிறைச்செல்வி **M. கரிமுத்துல் ஹக்** என்கிற மணமகளுக்கும்

நிக்காஹ் (திருமணம்) பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு இன்ஷா அல்லாஹ் மேற்படி திருமணம் *இளங்காகுறிச்சி ஜிம்மா பள்ளிவாசலில்* நடைபெற இருப்பதால் தாங்கள் தங்கள் சுற்றம் சூழ வருகை தந்து மணமக்கள் ஹக்கில் துஆ செய்து நல்வாழ்த்துக் கூறும்படி வேண்டி கேட்டுக்கொள்கிறோம்.

| அவ்வண்ணமே கோரும் | தங்களன்புள்ள |
|---|---|
| A. முகமது ஷெரீப் | K. பொன்னுத்துரை (எ) |
| மிராசுதார் | சையது அஹமது, மிராசுதார் |
| இளங்காகுறிச்சி, திருச்சி மாவட்டம் | மேட்டுக்கடை, திண்டுக்கல் மாவட்டம் |

(இரு வீட்டார் அழைப்பு)

## ❑ சொற்பொருள் குறிப்பு

திருநிறைச்செல்வன் – an attribute / prefix to the groom's name

நல்வாழ்த்து – well wish

(எ) – 'என்கிற' என்பதன் சுருக்கம்

மிராசுதார் – சொந்த நிலம் வைத்துக்கொண்டு செல்வந்தராக இருப்பவர்

* * * * *

## ○ புதுமனை புகுவிழா அழைப்பிதழ்

அன்புடையீர்,

நிகழும் மங்களகரமான விஷு வருடம் ஆவணி 8ம் தேதி *(24.08.2001)* வெள்ளிக்கிழமை காலை *7.30 மணிக்குமேல் 8.30* மணிக்குள்

தென்றல் நகர், பொன்னகரம் செவன்த் டே பள்ளி அருகில், திண்டுக்கல்

**கலைமணி இல்லம்**

புதுமனை புகுவிழா நடைபெறுவதால் தாங்கள் தங்கள் சுற்றமும் நட்பும் சூழ வருகை தந்து விழாவினை சிறப்பிக்க அன்புடன் அழைக்கின்றோம்.

தங்கள் நல்வரவை விரும்பும்

கரு. கார்த்திக் கலைவாணன்
கரு. மனோன்மணி

தங்களன்புள்ள

செ. கருப்பையா
த. சண்முகவள்ளி

## ❑ சொற்பொருள் குறிப்பு

புதுமனை – new house

புதுமனைபுகுவிழா – housewarming ceremony

* * * * *

## ○ உத்திரகிரியை பத்திரிக்கை (மாதிரி)

உயர்திரு. ........................................................................ அவர்கள்
28.03.99ம் தேதி ஞாயிற்றுக்கிழமை இரவு 10.30 மணிக்கு சிவலோக பதவி அடைந்துவிட்டார். அவருக்கு வருகின்ற பங்குனி மாதம் 30ம் தேதி 13.04.99 செவ்வாய்கிழமை மதியம் 12.00 மணிக்கு எங்களது இல்லத்தில் ஈமகிரியை நடைபெறுகிறது. அனைவரும் கலந்துகொள்ளுமாறு வேண்டிக் கொள்கிறோம்.

மனைவி
மக்கள்
பேரன்பேத்திகள்

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | |
|---|---|
| உத்திரகிரியை | – ஈமக்கிரியை; a ritual performed for the dead |
| சிவலோகபதவி அடைதல் | – Euphimistic usage for death<br>Also see : வைகுண்டபதவி அடைதல், இறைவனடி சேர்தல், இயற்கை எய்துதல் |

* * * * *

## ❑ வினாப்பயிற்சி

1. உங்கள் பள்ளியில் நடைபெறவுள்ள ஆண்டுவிழா ஒன்றுக்கு அழைப்பிதழ் தயார் செய்து காட்டுக.
2. உங்கள் குழந்தையின் காதணி விழாவுக்கு ஒரு அழைப்பிதழ் தயார் செய்க.

# 5. அலுவலகக் கடிதங்கள் / குறிப்புகள்
## Official Communications / Notes

மாவட்ட ஆதிதிராவிடர்நல அலுவலகம்
திண்டுக்கல்

ஒ.மு.26788 / 89 / எச்2 நாள் 31.5.89

குறிப்பாணை

பொருள் : ஆதிதிராவிடர் நலம் – திண்டுக்கல் காயிதே மில்லத் மாவட்டம்–கலப்புமணச் சான்றிதழ் சில திருத்தங்கள் – கோரல் – திரு .................. – மனு தொடர்பாக.

பார்வை : திரு. ................ என்பவரின் மனு நாள் ...................

பார்வையில் கண்ட கடிதத்தில் கேட்டுக் கொண்டதற்கு இணங்க திரு. .................. மற்றும் திருமதி ..................... ஆகியோர் கலப்பு மணம் செய்து கொண்டதற்கு வழங்கப்பட்ட பாராட்டு மடலில் தக்க திருத்தங்கள் செய்து திரும்ப அனுப்பப்படுகிறது.

ஒ–ம்/- மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலர்,
திண்டுக்கல்.

/உ.ந.உ.ப/

கண்காணிப்பாளர்

பெறுநர்

திரு.......................
பெத்தாம்பட்டி
சாணார்பட்டி அஞ். எண் : 624304
திண்டுக்கல்

பதிவு அஞ்சல் ஒப்புதல் அட்டையுடன் அரசு பணிக்கு மட்டும்

அனுப்புகை எழுத்தர்
மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலகம்
திண்டுக்கல் காயிதே மில்லத் மாவட்டம்
திண்டுக்கல்

பெறுநர்
திரு.........................
பெத்தாம்பட்டி
சாணார்பட்டி அஞ். எண்–624304
திண்டுக்கல்

## சொற்பொருள் குறிப்பு

| | |
|---|---|
| மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலகம் | – Office of the District Adi Dravider Welfare |
| குறிப்பாணை | – சிறப்பு உத்தரவு; brief order |
| பொருள் | – Subject |
| பார்வை | – Reference |
| கலப்பு மணச் சான்றிதழ் | – Intercaste marriage certificate |
| சில திருத்தங்கள் | – some corrections |
| கோரல் (கோரு v) | – (முறையாக) வேண்டுதல்; request |
| மனு தொடர்பாக | – regarding the petition |
| பார்வையில் கண்ட கடிதம் | – with reference to the letter cited |
| கேட்டுக் கொண்டதற்கு இணங்க | – வேண்டுகோளுக்கு ஏற்ப; complying with the request |
| கலப்புமணம் | – intercaste marriage |
| வழங்கப்பட்ட பாராட்டு மடல் | – the certificate (already) issued |
| தக்க (திருத்தங்கள்) | – appropriate (corrections) |
| திரும்ப அனுப்படுகிறது | – is returned |
| ஒ–ம் ஒப்பம் | – signature |
| அலுவலர் | – officer |
| உ.ந.உ.ப | – உண்மை நகல் உள்ளபடி |
| கண்காணிப்பாளர் | – superintendent |
| அஞ். எண். i.e. (அஞ்சல் எண்) | – PIN code |

| | | |
|---|---|---|
| பதிவு அஞ்சல் ஒப்புதல் அட்டையுடன் | – | registered post with acknowledgement card |
| அரசு பணிக்கு மட்டும் | – | on government service only |
| அனுப்புகை எழுத்தர் | – | despatcher, despatch clerk |

* * * * *

## தமிழ் இணையப் பல்கலைக்கழகம்
## Tamil Virtual University

பெறுநர்
முனைவர் பொன் சுப்பையா
தேர்வு மற்றும் மதிப்பீட்டுத் துறை
இந்திய மொழிகளின் மைய நிறுவனம்
மானச கங்கோத்ரி
மைசூர் – 570 006.

நாள் :03.09.2001

அன்புடைய முனைவர் பொன். சுப்பையா அவர்களுக்கு,

பொருள்: தொடக்கக் கல்விக் குழு – நான்காவது கூட்ட நிகழ்வுக் குறிப்பு அனுப்புதல் – தொடர்பாக

வணக்கம்

இம்மடலுடன் ஆகஸ்டு மாதம் 10–ஆம் தேதி நடைபெற்ற தமிழ் இணையப் பல்கலைக்கழகத்தின் தொடக்கக் கல்விக் குழுவின் நான்காவது கூட்ட நிகழ்வுக் குறிப்பு இணைக்கப்பட்டுள்ளது. அடுத்த கூட்டம் நடைபெறும் நாள் பின்னர் அறிவிக்கப்படும்.

நன்றி

தங்கள் உண்மையுள்ள,

(த. இரா. சீனிவாசன்)
செயலர்

❑ சொற்பொருள் குறிப்பு

| | |
|---|---|
| பெறுநர் | – receiver; addressee |
| முனைவர் | – Dr. (Ph.D) |
| தேர்வு மற்றும் மதிப்பீட்டுத் துறை | – Evaluation & Testing Unit / Dept. |
| தொடக்கக்கல்விக்குழு | – Committee on primary education |
| கூட்ட நிகழ்வுக் குறிப்பு | – proceedings of the meeting |
| தொடர்பாக | – regarding |
| மடல் | – கடிதம்; letter |
| பின்னர் அறிவிக்கப்படும் | – to be informed later |
| உண்மையுள்ள | – faithfully |
| செயலர் | – secretary |

* * * * *

○ விருதுநகர் மாவட்டக் கல்வி அலுவலர் அவர்களின் செயல்முறைகள்

முன்னிலை :.....................................................

செ.மு. என். 4641/அ5/87. நாள்—— . 4. 1987.

பொருள் : தொழிலாசியர் சான்றிதழ் பயிற்சி – தையல் பாடம்– மே 1987 – காமராசர் மாவட்டம் – தற்காலிக சேர்க்கை அனுமதி – ஆணைகள் வழங்கப்பட்டன.

பார்வை : தமிழ்நாடு பள்ளிக் கல்வி இயக்குநர் அவர்களின் செயல்முறைகள் ந.க.எண்.443984 /கே.1 /86, நாள் 12.3.'87.

காமராசர் மாவட்டம், விருதுநகர் எஸ்.எஸ்.அரசு மேல்நிலைப் பள்ளியில் 2.5.'87 முதல் நடைபெறவுள்ள 'தையல்' பாடத்திற்கான தொழிலாசிரியர் தகுதிகளின் அடிப்படையில் தற்காலிகமாக தேர்வு செய்யப்பட்டுள்ள விபரம் தெரியப்படுத்தப்படுகிறது.

2.5.'87ல் இவ்வாணையுடன் பயிற்சி மையத்தில் நேரடியாக ஆஜராக வேண்டும். 2.5.அ87ல் ஆஜராகும்போது, பொது மற்றும் தொழில்

கல்விச் சான்றுகளின் அசல் பிரதிகள் (ஒரிஜினல் சர்டிபிகேட்ஸ்) பரிசிலனைக்கு கண்டிப்பாக ஒப்படைக்க வேண்டும். 2.5.'87ல் அசல் சான்றுகளை ஒப்படைத்த பின்னரே பயிற்சியில் சேர அனுமதிக்கப்படும்.

அசல் சான்று ஒப்படைக்காமலோ அல்லது விண்ணப்பத்தில் குறிப்பிட்டுள்ள கல்வித்தகுதிகள் பயிற்சியில் சேர தகுதியற்றவையென அறியவரினும் பயிற்சியில் சேர்த்துக் கொள்ளப்படமாட்டாது என கண்டிப்பாக தெரியப்படுத்தப்படுகிறது.

2.5.'87ல் ஆஜராகாமல் பின்னர் வருகைதந்தாலும், பயிற்சியில் அனுமதிக்க பள்ளிக் கல்வி இயக்குநரால் ஒப்புதல் அளிக்கப்படவில்லையென்றாலும் பயிற்சியில் சேர அனுமதிக்கப்படமாட்டாது.

பயிற்சியில் சேரவோ அல்லது பயிற்சி அளிக்கவோ எவ்விதக்கட்டணமும் கிடையாது. ஞாயிறு தவிர வேறு விடுமுறை கிடையாது. எவ்விதமான விடுப்பும் அனுமதிக்கப்படமாட்டாது. பயிற்சி காலத்தில் ஒழுங்கு கட்டுப்பாடு கண்டிப்பாக கடைப்பிடிக்க வேண்டும். இவ்விதிகள் மீறப்பட்டால் கடுமையான நடவடிக்கை மேற்கொள்ளப்படும். 'தமிழ்' போதனா மொழியில் மட்டுமே பயிற்சி அளிக்கப்படும்.

உணவும், உறைவிடமும் அவரவர் சொந்தப்பொறுப்பில் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

மாவட்டக் கல்வி அலுவலர்
விருதுநகர்.

23.3.87

பெறுநர்

......................

161 / ..............

திருமங்கலம் – 626 706

நகல் : தலைமையாசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, விருதுநகர்.

நகல் : பள்ளிக் கல்வி இயக்குநர், சென்னை–6 அவர்களுக்கு
தகவலுக்காக பணிந்து சமர்ப்பிக்கப்பட்டது. சுபா/18.4.

## ❑ சொற்பொருள் குறிப்பு

பயிற்சி – training
தையல் பாடம் – tailoring
ஆணை – உத்தரவு ; order
தொழிலாசிரியர் – technical teacher
தற்காலிகம் – temporary
அசல் சான்று – original
தகுதியற்றவை – disqualified ones
கல்வி இயக்குநர் – director of education
ஒப்புதல் – approval, permission
கட்டணம் – fees
விடுமுறை – leave
ஒழுங்கு – regularity
கட்டுப்பாடு – control, restriction
கண்டிப்பாக – firm
கடைபிடி – follow
விதிகள் – rules
மீறப்படு – violate
கடுமையான நடவடிக்கை – stern action
மேற்கொள் – adopt; (here) initiates
போதனா மொழி – medium of instruction
உணவு – food
உறைவிடம் – accommodation
சொந்தப் பொறுப்பு – own arrangement
மாவட்டக் கல்வி அலுவலர் – district educational officer
பெறுநர் – receiver

* * * * *



அரசு ஆணை

உயர் கல்வி (எச்.1) துறை

அரசாணை (நிலை) எண்.124 நாள் : 22.03.2001

படிக்கப்பட்டவை

1. அரசாணை நிலை எண். 111, உயர்கல்வித்துறை, நாள் 24.3.99
2. அரசாணை நிலை எண். 112, உயர்கல்வித்துறை, நாள் 24.3.99
3. அரசாணை நிலை எண். 113, உயர்கல்வித்துறை, நாள் 24.3.99
4. அரசாணை நிலை எண். 155, உயர்கல்வித்துறை, நாள் 16.4.99
5. அரசுக் கடிதம் எண். 29909/எச்-/98-16, 17, 18, 19 and 20, உயர் கல்வித்துறை, நாள் 24.12.99
6. அரசுக்கடிதம் எண். 29909/எச்-1/99–21, 22, 234, 24, உயர்கல்வித்துறை, நாள் 24–12–99
7. கல்லூரிக் கல்வி இயக்குநரின் கடிதம் எண்.19337/E1/99. நாள் 14.2.2000
8. அரசாணை நிலை எண். 68, உயர் கல்வித்துறை, நாள் 6.3.2000
9. அரசாணை நிலை எண். 356, உயர்கல்வித்துறை, நாள் 17.8.2000
10. அரசாணை நிலை எண். 357, உயர் கல்வித்துறை, நாள் 17.8.2000
11. அரசாணை நிலை எண்.457, உயர் கல்வித்துறை, நாள் 17.11.2000

******

ஆணை

அரசின் மேற்சொல்லப்பட்டுள்ள 1 முதல் 6 வரை உள்ள அரசாணை மற்றும் தெளிவுரைகளில் தமிழக அரசு கல்லூரிகள் / உதவி பொறும் கல்லூரிகள் மற்றும் பல்கலைக்கழக ஆசிரியர்களுக்கு தேசிய நல்கைக்குழு அறிமுகப்படுத்தியுள்ள புதிய ஊதிய விகிதத்தினை 1.1.96 முதல் அமல்படுத்தியும் ஊதியம் நிர்ணயம் செய்யவும் தக்க அரசாணைகளை அரசு வெளியிட்டுள்ளது. மேலும் 1.1.96 முதல் 31.3.99 வரையிலான நிலுவைத் தொகையினை மத்திய அரசின் 80 விழுக்காடு மான்யம் பெற்ற பின்னர் வழங்கலாம் என்றும் அதில், 40 விழுக்காடு

பணமாகவும் 60 விழுக்காடு சேம நலநிதியிலும் வைக்கப்படும் என்றும், மேலும் 1.4.99 முதல் புதிய ஊதிய விகிதத்தில் ஊதியம் பெறவும் தக்க ஆணைகள் வெளியிடப்பட்டுள்ளன. இதற்கேற்ப பல்கலைக்கழக ஆசிரியர்கள், அரசு மற்றும் அரசு உதவி பெறும் கல்லூரிக் கல்வி ஆசிரியர்கள் அனைவரும் 1.4.99ம் நாள் முதல் புதிய ஊதிய விகிதத்தில் ஊதியம் பெற்று வருகின்றனர். மேலும் பல்கலைக்கழகங்களில் பணிபுரியும் ஆசிரியர்கள் மற்றும் கல்லூரி ஆசிரியர்கள் அரசு ஊழியர்களுக்கு 1.4.99 முதல் நிலுவை ஊதியம் வழங்கியது போல் தங்களுக்கும் 1.4.98 முதல் புதிய ஊதிய விகிதம் நிலுவையுடன் முழுதும் வழங்கப்படல் வேண்டும் என்றும் 1.1.96 முதல் 31.3.98 வரை உள்ள நிலுவைத் தொகையில் 80 விழுக்காடு நிலுவையையும் உடன் வழங்கவேண்டும் என்றும் கோரிக்கை வைத்தனர். அரசு இந்த கோரிக்கையை கவனமுடன் பரிசீலித்து, அதன்படி 1.4.98 முதல் 31.3.99 வரையிலான காலத்திற்கு நிலுவைத் தொகை முழுவதும் ரொக்கமாக வழங்க முடிவு செய்து, தக்க ஆணைகளை மேலே 8 முதல் 11 வரை உள்ளவற்றில் வெளியிடப்பட்டுள்ளது.

2. ..........

3. கல்லூரிக் கல்வி இயக்குநர் / தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை இயக்குநர் (தமிழ் பல்கலைக்கழக சார்பாக) தக்க நடவடிக்கை மேற்கொண்டு பல்கலைக்கழகங்கள் மற்றும் கல்லூரி ஆசிரியர்கள் சார்பாக தேவையான நிதியொதுக்கம் இருக்கும் பட்சத்தில் மேற்படி தொகையினை அனுமதிக்கவும், பல்கலைக்கழகம் சார்பாக அந்தந்த பல்கலைக்கழகங்களிலிருந்து பட்டியல் பெற்று தக்க நடவடிக்கை மேற்கொண்டு உடன் இந்நிலுவைத் தொகையினை வழங்க நடவடிக்கை மேற்கொண்டு அரசுக்கு அறிக்கை அனுப்ப கேட்டுக் கொள்ளப்படுகிறது.

4. இவ்வாணை நிதித் துறையின் அ.சா.எண்.1019/நி.செ/பி/2001, நாள் 21.3.2001–ல் பெறப்பட்ட ஒப்புதலுடன் வெளியிடப்படுகிறது.

(ஆளுநரின் ஆணைப்படி)

இ.வீ.மணிவண்ணன்,
அரசு செயலாளர்.

பெறுநர்

துணை வேந்தர் / பதிவாளர், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

துணை வேந்தர் / பதிவாளர், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி

துணை வேந்தர் / பதிவாளர், அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

துணை வேந்தர் / பதிவாளர், அன்னை தெரசா பல்கலைக்கழகம், கொடைக்கானல்

துணை வேந்தர் / பதிவாளர், பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர்.

துணை வேந்தர் / பதிவாளர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

துணை வேந்தர் / பதிவாளர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்.

துணை வேந்தர் / பதிவாளர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

துணை வேந்தர் / பதிவாளர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

கல்லூரிக் கல்வி இயக்குநர், சென்னை – 6

உள்ளாட்சித் தணிக்கைத் துறை இயக்குநர். சென்னை – 108

அனைத்து மண்டல கல்லூரிக் கல்வி இணை இயக்குநர்கள் – கல்லூரிக் கல்வி இயக்குநர் மூலமாக

மாநிலக் கணக்காயர் சென்னை – 9/35/79

கருவூல கணக்கு இயக்குநர், சென்னை – 15

சம்பள கணக்கு அலுவலர், சென்னை – 35/9/5

சம்பள கணக்கு அலுவலர், மதுரை

செயலர், மத்திய அரசு மனிதவள மேம்பாட்டுத்துறை, கல்வித்துறை, புதிய தில்லி – 110 001

செயலர், தேசிய நல்கைக்குழு, புதிய தில்லி.

அனைத்து மாவட்ட கருவூல அலுவலர்கள்.

நகல் : நிதித்துறை (கல்வி), சென்னை – 9

உயர் கல்வித்துறை (K,E,G,F & C) பிரிவுகள், சென்னை – 9

மாண்புமிகு முதல் அமைச்சரின் நேர்முக உதவியாளர், முதல்வர் அலுவலகம், சென்னை – 9

துணைச் செயலர், மாண்புமிகு கல்வி அமைச்சர் அலுவலகம்,
சென்னை – 9

உயர் கல்வித்துறை செயலாளரின் நேர்முக உதவியாளர், சென்னை–9

ஆணைப்படி அனுப்பப்படுகிறது

Sd/- 22.3.2001
பிரிவு அலுவலர்

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| உயர்கல்வி (எச்–1) துறை | – | Higher education (H-1) Department |
| அரசாணை (நிலை) எண் | – | Government Order (....) No. |
| படிக்கப்பட்டவை | – | (those) read |
| மேற்சொல்லப்பட்டுள்ள | – | above said |
| 1 முதல் 6 வரை | – | from 1 to 6 |
| தெளிவுரை | – | details ... |
| உதவிபெறும் கல்லூரிகள் | – | aided colleges |
| தேசியநல்கைக் குழு | – | university grants commission |
| புதிய ஊதிய விகிதம் | – | new pay scales |
| அமல்படுத்து (tr.v) | – | implement |
| ஊதியம் நிர்ணயம் | – | pay fixation |
| (அரசாணைகளை அரசு) வெளியிட்டுள்ளது | – | (Government) issued orders |
| நிலுவைத் தொகை | – | arrears |
| 80 விழுக்காடு மான்யம் | – | 80 percent grant |
| (பெற்றபின்னர்) வழங்கலாம் | – | may be paid (after getting grant) |
| (40 விழுக்காடு) பணமாகவும் | – | (40%) in cash |
| (60 விழுக்காடு) சேமநலநிதியிலும் | – | (60%) in GPF |
| வைக்கப்படும் | – | (to be) kept |

| | | |
|---|---|---|
| புதிய ஊதிய விகிதத்தில் ஊதியம் பெற | – | to get pay in the new scale |
| இதற்கேற்ப | – | accordingly |
| பல்கலைக்கழக ஆசிரியர்கள் | – | university teachers |
| பணிபுரியும் ஆசிரியர்கள் | – | the teachers working (in Universities) |
| அரசு ஊழியர்கள் | – | governement servants |
| நிலுவை ஊதியம் | – | pay arrears |
| நிலுவையுடன் முழுதும் வழங்கப்படல் வேண்டும் | – | to be paid in full with arrears |
| உடன் வழங்க வேண்டும் | – | to be paid immediately |
| கோரிக்கை வைத்தனர் | – | putforth the demand |
| கவனமுடன் பரிசீலித்து | – | having examined carefully |
| நிலுவைத்தொகை முழுவதும் ரொக்கமாக வழங்க | – | to pay the whole arrears in cash |
| தக்க ஆணைகள் | – | appropriate orders |
| கல்லூரிக்கல்வி இயக்குநர் | – | director of collegiate education |
| தமிழ்வளர்ச்சி பண்பாட்டுத் துறை | – | department of Tamil development & culture |
| தக்கநடவடிக்கை | – | appropriate action |
| (ஆசிரியர்கள்) சார்பாக | – | (on behalf of) teachers |
| தேவையான நிதியொதுக்கம் | – | allocation of required funds |
| இருக்கும் பட்சத்தில் | – | if available |
| மேற்படி தொகையினை அனுமதிக்கவும் | – | permitting the above said amount |
| பட்டியல் (பெற்று) | – | (on getting the) list |
| தக்க நடவடிக்கை மேற்கொண்டு | – | by taking appropriate action |
| அரசுக்கு அறிக்கை அனுப்பக்கேட்டு கொள்ளப்படுகிறது | – | required to submit a report to government |
| நிதித்துறை | – | department of finance |
| ஒப்புதல் | – | approval |

| | | |
|---|---|---|
| ஆளுநரின் ஆணைப்படி | – | by orders of Governor |
| அரசு செயலாளர் | – | Secretary to Government |
| துணைவேந்தர் | – | vice chancellor |
| பதிவாளர் | – | registrar |
| உள்ளாட்சித் தணிக்கைத் துறை | – | dept. of local fund audit |
| இயக்குநர் | – | director |
| இணை இயக்குநர் | – | joint director |
| மண்டல | – | regional |
| மாநிலக் கணக்காயர் | – | accountant general |
| கருவூலக்கணக்கு இயக்குநர் | – | director, treasury accounts |
| சம்பளகணக்கு அலுவலர் | – | salary accounts officer |
| மனிதவளமேம்பாட்டுத்துறை | – | department of human resource development |
| மாவட்ட கருவூல அலுவலர் | – | district treasury officer |
| மாண்புமிகு | – | honorable |
| பிரிவு அலுவலர் | – | section officer |

❑ வினாப்பயிற்சி

1. நீங்கள் தமிழ் படித்துத் தேர்ச்சிபெற்ற விபரத்தை உங்கள் மாநிலத்தின் கல்வி இயக்குநருக்கு தெரிவிப்பதுபோல மாதிரி கடிதம் ஒன்று தயாரிக்க.
2. உங்கள் பள்ளியில் தமிழ்பயிற்றுவிப்பதற்குத் தேவையான புத்தகங்களை சலுகை விலையில் வழங்குமாறு சென்னையில் உள்ள தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநருக்கு ஒரு கடிதம் எழுதுக.
3. உங்கள் பள்ளியில் மாணவர்களைச் சேர்ப்பதற்கான விதிமுறைகளைக் கூறும் அறிவிப்புக் கடிதம் / சுற்றறிக்கை ஒன்று தயார் செய்க.

# 6. சான்றிதழ்கள்
# Certificates

O

தமிழ்நாடு அரசு
Government of Tamil Nadu

பள்ளி கல்வித்துறை
Department of School Education

**மாற்றுச் சான்றிதழ்**
**Transfer Certificate**

**Recognised by the Director of School Education**
**பள்ளிக் கல்வி இயக்குநரால் அங்கீகரிக்கப்பட்டது.**

வரிசை எண். Serial No. | சேர்க்கை எண் Admission No.

1.(a) பள்ளியின் பெயர் ...
Name of the School

(b) கல்வி மாவட்டப் பெயர் ...
Name of the Educational District

(c) வருவாய் மாவட்டப் பெயர்
Name of the Revenue District

2. மாணவர் பெயர் (தனித்தனி எழுத்துக்களில்) ...
Name of the pupil (in Block letters)

3. தந்தையின் அல்லது தாயாரின் பெயர் ...
Name of the Father or Mother of the pupil

4. தேசிய இனம் மற்றும் சமயம் ...
Nationality and Religion Hindu / Christian / Muslim

5. இனம் / Community
அவன் / அவள் பின்வரும் ஐ ந்து பிரிவு களில் எவையேனும் ஒன்றைச் சார்ந்தவரா என்பது
Whether he/she belongs to

(a) ஆதி திராவிடர் அல்லது பழங்குடி ...
Adi Dravidar (Scheduled Caste) or (Scheduled Tribe)

(b) பின் தங்கிய வகுப்பு ...
Backward Class

(c) மிகவும் பின் தங்கிய வகுப்பு ...
Most Backward Class

(d) ஆதி திராவிடர் இனத்திலிருந்து கிறிஸ்தவ மதத்திற்கு மாறியவர் ...
Convert to Christainity from Scheduled Caste or

(e) அட்டவணையிலிருந்து நீக்கப்பட்ட இனம் ...
Denotified communities.

மாணவர் / மாணவியர் மேற்குறிப்பிட்ட ஐந்து பிரிவுகளில் ஏதாவது ஒன்றைச் சார்ந்தவராக இருந்தால் அந்த பிரிவுக்கு எதிரே 'ஆம்' என்று எழுதவேண்டும். அத்துடன் அவர் / அவள் குறிப்பாக எந்த இனத்தைச் சார்ந்தவர் என்றும் குறிப்பிடவேண்டும்.

If the pupil belongs to any of the five categories mentioned above, write 'Yes' against the relevant item and also indicate the particular community to which he / she belongs

6. பாலினம் Sex ...

7. பிறந்த தேதி எண்ணிலும் எழுத்திலும் ...
(மாணவர் சேர்க்கைப் பதிவேட்டில் உள்ளபடி)
Date of birth as entered in the admission Register
in figures & words

8. உடலில் அமைந்த அடையாளக் குறிகள் ...
Personal marks of Identification

9. பள்ளியில் சேர்க்கப்பட்ட தேதி மற்றும் ...
சேர்க்கப்பட்ட வகுப்பு (வருடத்தை
எழுத்தால் எழுதவும்)
Date of admission and standard in which admitted
(the Year to be entered in words)

10. மாணவர் பள்ளியை விட்டுச் செல்லும் ...
நேரத்தில் படித்துவந்த வகுப்பு (எழுத்தில்)
Standard in which the pupil was studying at the
time of leaving (in words)

11. மேல் வகுப்பிற்கு உயர்வு பெற ...
தகுதியுடையவரா என்பது
Whether qualified for promotion to higher Standard

12. மாணவர் படிப்பு உதவித் தொகை எதுவும் ...
பெற்றவரா (அதன் விவரத்தை குறிப்பிடுக)
Whether the pupil was in receipt of any scholarship
(Nature of the scholarship to be specified).

13. மாணவர் கடைசி பள்ளி வருடத்தில் மருத்துவ ...
ஆய்வுக்கு சென்றவரா (முதல் தடவை அல்லது
அதற்கு மேல்-குறிப்பிட்டு எழுதவும்)
Whether the pupil has undergone Medical Inspection
during the last academic year (First or Repeat to
be specified)

14. மாணவர் பள்ளியை விட்டுச் சென்ற தேதி ...
Date on which the pupil actually left the school

15. மாணவரின் ஒழுக்கமும் பண்பும் ...
The pupil's conduct and character

16. பெற்றோர் அல்லது காப்பாளர் மாணவரின் ...
மாற்றுச் சான்றிதழ் கோரி விண்ணப்பித்த தேதி
Date on which application for transfer certificate was made on behalf of the pupil by the parent or guardian

17. மாற்றுச் சான்றிதழின் தேதி ...
Date of the Transfer Certificate

18. படிப்பு காலம் / Course of Study

| பள்ளியின் பெயர் Name of the School | கல்வி ஆண்டு Academic Year (s) | படித்த வகுப்பு Standard Studied | முதல் மொழி First Language | பயிற்று மொழி Medium of Instruction |
|---|---|---|---|---|
| | | | | |

19. பள்ளித் தலைமை ஆசிரியரின் கையொப்பமும்
தேதியும், பள்ளியின் முத்திரையுடன்
Signature of the Headmaster with date and with school seal

குறிப்பு : 1, இச்சான்றிதழில் அழித்தல்கள் மற்றும் நம்பகமற்ற அல்லது மோசடியான திருத்தங்கள் செய்வது சான்றிதழை ரத்து செய்ய வழிவகுப்பதாகும். Erasures and unauthenticated or fradulent alterations in the certificate will lead to its cancellation.

20. பள்ளித்தலைமை ஆசிரியர் மையினால் கையொப்பமிட வேண்டும். பதிவு செய்யப்பட்ட விவரங்கள் சரியானவை என்பதற்கு அவரே பொறுப்பாளர்.
Should be signed in ink by the Head of the Institution, who will be held for the correctness of the entries.

பெற்றோர் அல்லது காப்பாளர் அளிக்கும் உறுதிமொழி.
Declaration by the parent or Guardian.

மேலே 2 முதல் 7 வரையிலான இனங்களுக்கெதிரே பதிவு செய்யப்பட்டுள்ள விவரங்கள் சரியானவை என்றும் எதிர்காலத்தில் அவற்றில் மாற்றம் எதுவும் கேட்கமாட்டேன் என்றும் நான் உறுதியளிக்கிறேன்.

I hereby declare that particulars recorded against items 2 to 7 are correct and that no change will be demanded by me in future.

பெற்றோர் அல்லது காப்பாளரின் கையொப்பம்
Signature of the Parent / Guardian

* * * * *



தமிழ்நாடு அரசு
[Emblem]

R.Dis / /98 6/98 GCP-26-1-3,00,000 Cps.-22-3-96

S C

மாவட்டக் குறியீடு எண்:
District Code

சான்றிதழ் எண் :
Certificate No.

வட்டக் குறியீடு எண் :
Taluk Code

கிராமக் குறியீடு எண் :
Village Code

## சாதிச் சான்றிதழ்
## COMMUNITY CERTIFICATE

*திண்டுக்கல் மாவட்டம் திண்டுக்கல் வட்டம் சாணார்பட்டி கிராமம் / நகரம், திரு. / திருமதி / செல்வி / செல்வன் .............................. தகப்பனார் / கணவர் பெயர் .............................. வகுப்பைச் சார்ந்தவர், தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர் உத்திரவுகள் (திருத்தப்பட்ட) சட்டம் 1976, வரிசை எண் ..............ன்படி தாழ்த்தப்பட்ட பிரிவைச் சார்ந்தவர் எனச் சான்றளிக்கப்படுகிறது.*

This is to certify that .................... Son/Daughter of Thiru ............................ of ........................... Village /Town, .................. Taluk ........................................... District of the State of Tamil Nadu belongs to ............................................. Community, which is recognised as a Scheduled Caste as per the Scheduled Castes and Scheduled Tribes Orders (Amendment) Act, 1976, vide Serial No.................

திரு / திருமதி / செல்வன் / செல்வி .............................. என்பவரும் அவருடைய குடும்பத்தினரும் தமிழ்நாட்டில் ...................... மாவட்டத்தில் .............................. வட்டத்தில் .............................. கிராமத்தில் / நகரத்தில் வசித்து வருகிறார்கள் எனச் சான்றளிக்கப்படுகிறது.

2. It is certified that Thiru/Tmt./Selvan/Selvi ............... and his / her family ordinarily reside(s) at ..................... Village/Town .................. Taluk ............... District of Tamil Nadu.

முத்திரை
Seal

கையொப்பம் :
Signature

நாள் :
Date

தனி எழுத்துக்களில் பெயர் :
Name in Capital Letters

பதவி பெயர் :
Designation.

* * * * *

# குடியுரிமைச் சான்றிதழ்

குறிப்பு : (i) ஆதி திராவிடர் பழங்குடியினர் அல்லது ஆதி திராவிடர் அல்லது கிறித்துவ மதத்திற்கு மாறிய ஆதி திராவிடர் இனத்தைச் சேர்ந்த மாணவர்கள் மட்டும் இச்சான்றிதழை விண்ணப்பத்துடன் அனுப்ப வேண்டும்.

(ii) வருவாய்த் துறை அதிகாரிகள் மட்டுமே (சான்றிதழ் அளிப்பதற்காக அதிகாரம் பெற்றவர்) இச்சான்றிதழில் ஒப்பமிட வேண்டும்.

(iii) இச்சான்றிதழ் மிகவும் இன்றியமையா ஆவணமாகும். அத்துடன் இச்சான்றிதழின் அடிப்படையில்தான் முக்கியமாக படிப்புதவித் தொகை வழங்கப்படுகிறது. எனவே இச்சான்றிதழை வழங்கும் அலுவலர் மேலே குறிப்பிடப்பட்ட வகுப்பைச் சார்ந்த மாணவருக்கு மட்டுமே உள்ளபடியாகப் படிப்புதவித் தொகைக் கிடைக்கத்தக்க வகையில் போதுமான அளவு எச்சரிக்கையுடன் இச்சான்றிதழை வழங்க வேண்டும் என அறிவுறுத்தப்படுகிறார்.

நான் அறிந்த அளவில் ..........................................................................................................

1. *சாணார்பட்டி கிராமம் பெத்தாம்பட்டி* எனும் இருப்பிடத்தில் வாழும் *திரு. பழனிவேல்* அவர்களின் *மகள் செல்வி மங்கையர்க்கரசி* அவர்கள் *சென்னை* மாநிலத்தைச் சார்ந்தவர் என்றும் அவர் இந்திய குடியுரிமை பெற்றவர் என்றும் சான்றளிக்கிறேன்.

2. இவருடைய *தந்தை சென்னை* மாநிலம் *திண்டுக்கல்* மாவட்டம் *திண்டுக்கல்* வட்டத்தைச் சார்ந்த *பெத்தாம்பட்டி* ஊரில் நிலையாக வாழ்ந்து வருபவர் என்று சான்றளிக்கிறேன்.

3. 1999 .... ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 31 ஆம் நாளுடன் முடிவடைந்த கடந்த ஆண்டில் பெற்றோர்கள் ஆகியோருக்கு அனைத்து ஆதாரங்களிலிருந்தும் அமைந்த மொத்த ஆண்டு வருவாய் *ரூ9600/- ஒன்பது ஆயிரத்து அறுநூறு* ஆகும்.

இடம் : பெயர் (தனித்த எழுத்துக்களில்) /ஒப்பம்/

நாள் : பதவிப் பெயர் : வட்டாட்சியர்

முழு முகவரி : திண்டுக்கல்

(அலுவலக) முத்திரை

சான்றிதழ் வழங்கும் அலுவலரின் முத்திரையில்லாத சான்றிதழ் ஏற்கப்படமாட்டாது.

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| ஆதி திராவிடர் | – | scheduled caste |
| பழங்குடியினர் | – | scheduled tribe |
| வருவாய்த்துறை அதிகாரி | – | revenue officer |
| ஒப்பமிடு | – | sign |
| இன்றியமையா | – | important |
| ஆவணம் | – | record |
| அடிப்படையில் | – | on the basis |
| படிப்புதவித்தொகை | – | educational scholarship |
| எச்சரிக்கை | – | caution |
| வழங்கு | – | issue |
| அறிவுறுத்து | – | instruct |
| இருப்பிடம் | – | place of residence |
| குடியுரிமை | – | citizenship |
| அனைத்து ஆதாரங்கள் | – | (from) all sources |
| தனித்த எழுத்துக்களில் | – | in separate (bold) letters |

* * * * *



சான்றிதழ் வ. எண் / CERTIFICATE S.No. HSV **1760204**

அரசுத் தேர்வுகள் துறை, சென்னை – 600 006.

DEPARTMENT OF GOVERNMENT EXAMINATIONS, CHENNAI - 600 006.

**மேனிலைப் பள்ளிக் கல்விச் சான்றிதழ்**

**HIGHER SECONDARY COURSE CERTIFICATE**

தொழில் முறைக் கல்வி / VOCATIONAL EDUCATION

தமிழ்நாடு அரசின் அதிகாரத்திற்கு உட்பட்டு வழங்கப்படுகிறது

ISSUED UNDER THE AUTHORITY OF THE GOVERNMENT OF TAMILNADU

தேர்வர் .............................. .................. இல் மேனிலைப் பள்ளி இறுதி வகுப்புத் தேர்வெழுதிக் கீழ்க்காணும் மதிப்பெண்களைப் பெற்றுள்ளார் என்று சான்றளிக்கப்படுகிறது.

*Certified that the above mentioned candidate appeared for the Higher Secondary Examination and obtained the following marks :*

| பாடம் Subject | கருத்தியல் Theory | செய்முறை Prac. | பெற்ற மதிப்பெண் 200க்கு Marks obtained for 200 |
|---|---|---|---|
| ........... | ............ | ......... | ...................... |
| ........... | ............ | ......... | ...................... |

மொத்த மதிப்பெண்
TOTAL MARKS ..................

பிறந்த நாள் / DATE OF BIRTH    பதிவெண் / REGISTER NO.    ம.அ.ப. குறியீட்டெண் & நாள் / TMR CODE NO. & DATE

பள்ளியின் பெயர் / SCHOOL    பாடத் தொகுப்பு எண் / GROUP CODE

இத்தேர்வில் தேர்ச்சி பெற ஒவ்வொரு பாடத்திலும் 200க்குக் குறும அளவு 70 மதிப்பெண் பெறவேண்டும். இது பகுதி முறையில் தேர்வெழுதித் தேர்ச்சி பெறுவதற்கும் பொருந்தும். கருத்தியல் மற்றும் செய்முறைத் தேர்வுகள் கொண்ட பாடங்களில் தேர்ச்சி பெறக் கருத்தியல் தேர்வில் 150க்குக் குறும அளவு 40 மதிப்பெண்களும், செய்முறைத் தேர்வில் 50க்கு குறும அளவு 30 மதிப்பெண்களும் பெறவேண்டும்.

MINIMUM FOR A PASS : 70 MARKS OUT OF 200 IN EACH SUBJECT. THIS INCLUDES PASSING UNDER THE COMPARTMENTAL SYSTEM ALSO. FOR THE SUBJECTS CONSISTING OF THEORY AND PRACTICAL EXAMINATIONS MINIMUM MARKS FOR A PASS IS 40 OUT OF 150 IN THEORY AND 30 OUT OF 50 IN PRACTICAL.

தேர்வரின் ஒப்பம்
Candidate's Signature

செயலாளர்,
மேனிலைப் பள்ளிக் கல்வித் தேர்வுக் குழுமம், தமிழ்நாடு
Secretary, Board of Higher Secondary Examination, Tamilnadu

## ❑ சொற்பொருள் குறிப்பு

குறுமஅளவு – minimum

கருத்தியல் – theory

செய்முறை – practical

தேர்ச்சி – pass

மதிப்பெண்கள் – marks

* * * * *

## ○ மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
## அறிவியற் புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழக ஆட்சிப்பேரவை ―――――――― அறிவியல் இளையர் பட்டம் பெறுதற்கு தகுதியுடையவர் என முறையாக அமைக்கப் பெற்ற தேர்வினோர் சான்றளித்தவாறு, ―――――――― இல் நடைபெற்ற தேர்வில் ―――――――― பாடத்தில் ―――――――― வகுப்புப் பெற்று, இப்பட்டப்பேற்றுக்கு உரியவர் ஆகின்றார் என இதன்வழி அறிவிக்கின்றது.

பல்கலைக்கழக முத்திரையுடன் இது வழங்கப்படுகின்றது

(முத்திரை)
பல்கலை நகர், மதுரை 625021
நாள் : ..................

துணைவேந்தர்

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| பல்கலைக்கழகம் | – | university |
| அறிவியற் புலம் | – | faculty of science |
| ஆட்சிப் பேரவை | – | syndicate |
| அறிவியல் இளையர் | – | Bachelor of Science, B.Sc. |
| முறையாக | – | duly |
| தேர்வினோர் | – | examiners |
| இதன்வழி | – | through |
| பட்டப்பேற்றுக்கு | – | பட்டத்தைப் பெறுவதற்கு |
| பல்கலைக்கழக முத்திரை | – | university seal |
| துணைவேந்தர் | – | vice chancellor |

* * * * *



## மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
## ஒப்பிலக்கியத் துறை
## தமிழியற் பள்ளி
## நன்மதிப்பிதழ்

மதுரை காமராசர் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத் துறையின் சார்பில் 1994 பிப்ரவரித் திங்கள் 24, 25 ஆகிய இரண்டு நாட்களில் நடைபெற்ற 'ஐக்கூ' பணிமனையிலும் ஒப்பிலக்கியக் கருத்தரங்கிலும் கலந்து கொண்ட *திரு. மோ. தமிழ்மாறன், ஆய்வாளர், தமிழியல் துறை, பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சிராப்பள்ளி* அவர்களைப் பாராட்டி இந்நன்மதிப்பிதழ் வழங்கப்படுகிறது.

தலைவர் & ஒருங்கிணைப்பாளர்
தமிழியற் பள்ளி

துணை வேந்தர்

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| ஒப்பிலக்கியத்துறை | – | department of comparative litrature |
| தமிழியற்பள்ளி | – | school of Tamilology |
| 'ஐக்கூ' | – | kind of small verses originated from Japan |
| பணிமனை | – | workshop |
| கருத்தரங்கு | – | seminar |
| ஆய்வாளர் | – | researcher |
| நன்மதிப்பிதழ் | – | certificate of appreciation |
| ஒருங்கிணைப்பாளர் | – | coordinator |

* * * * *

## பாரதிதாசன் பல்கலைக்கழகம் :: :: திருச்சிராப்பள்ளி
## தமிழியல் துறை
## வருகைச் சான்றிதழ்

பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில் 2000, பிப்ரவரி 2, 3, 4 ஆகிய நாட்களில் நடைபெற்ற 'விலங்கியல் தமிழ்க் கலைச் சொற்கள் தரப்படுத்தும்' கருத்துப் பயிலரங்கில் *பேராசிரியர் / முனைவர்* —————— *பேராளராகக் கலந்து கொண்டார் எனச் சான்றளிக்கிறேன்.*

4.2.2000

ORGANIZING SECRETARY,
SEMINAR ON TECHNOLEXICOGRAPHY
DEPT. OF TAMIL STUDIES,
BHARATHIDASAN UNIVERSITY,
TIRUCHIRAPPALLI - 620 024.

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| தமிழியல் துறை | – | dept. of Tamilology |
| வருகைச் சான்றிதழ் | – | attendance certificate |
| விலங்கியல் | – | zoology |
| கலைச் சொற்கள் | – | technical terms |
| தரப்படுத்து | – | standardise |
| கருத்துப் பயிலரங்கு | – | seminar |
| பேராளர் | – | deligate |
| கலந்துகொள் | – | participate |
| சான்றளி | – | certify |

* * * * *



**தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்**
மொழியியல் துறை

**TAMIL UNIVERSITY, THANJAVUR**
DEPARTMENT OF LINGUISTICS

பொது மொழியியல் புத்தொளிப் பயிற்சி
REFRESHER COURSE IN GENERAL LINGUISTICS

**சான்றிதழ்**
**CERTIFICATE**

பல்கலைக் கழக மானியக் குழுவின் நல்கையுடன் 1998 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 23–ஆம் தேதி முதல் மே மாதம் 13–ஆம் தேதி வரை தமிழ்ப் பல்கலைக்கழக மொழியியல் துறை நடத்திய பொது மொழியியல் புத்தொளிப் பயிற்சியில் திரு / திருமதி / செல்வி ———————————— பங்கேற்றார் என்று சான்றளிக்கப்படுகிறது.

*This is to certify that Mr/Mrs/Miss ———————— attended the Refresher Course in General Linguistics conducted by the Department of Linguistics, Tamil University, Thanjavur from 23rd April to 13th May, 1998 with the financial assistance from the University Grants Commission.*

தஞ்சாவூர்
13–5–98 இயக்குநர் துணைவேந்தர்

❑ சொற்பொருள் குறிப்பு

| | | |
|---|---|---|
| பல்கலைக்கழக மானியக்குழு | – | university grants commission |
| நல்கை | – | grant |
| பங்கேற்றார் | – | (he) participated |

* * * * *

❑ வினாப்பயிற்சி

1. உங்கள் பள்ளியில் படித்து முடித்த ஒரு மாணவன் அல்லது மாணவிக்கு கல்விச் சான்றிதழ் (course certificate) தயாரித்து வழங்குக.
2. தலைமை ஆசிரியர் தருவதுபோல நன்னடத்தைச் சான்றிதழ் ஒன்று தமிழில் தயார் செய்க.

# 7. வருவாய்த்துறை ஆவணங்கள்

## Revenue Records

○

### பட்டா

TK8ANO : 524/1409 Dated 23.06.2000

R.F. III-A.30-மதுரை.

நம்பர் 11.

.........திண்டுக்கல்.......... ஜில்லா, ........திண்டுக்கல்....... தாலூகா, ......69. சாணார்பட்டி....... கிராமத்தில் ..........பட்டாஎண் : 469.......... க்கு கொடுக்கப்பட்ட பட்டா.

மாசாந்திர கிஸ்தி
பொன்னன் மகன் நாகராஜன்

இந்த பட்டாவில் கண்ட தீர்வையை பக்கத்தில் கண்டிருக்கிற கிஸ்திப்படி மணியக்காரனிடத்தில் செலுத்த வேண்டியது. ஆனால் உத்தரவின்றி செய்த சாகுபடிக்கு விதிக்கப்பட்ட தீர்வையை அது விதிக்கப்பட்ட விவரம் உமக்கு தெரிவிக்கப்பட்ட 30 தினத்திற்குள் செலுத்தி விட வேண்டியது

பிரிவு 1. – கைப்பற்று நிலத்தின் புலவாரி விவரங்கள்.

குறிப்பு– இந்தப் பட்டாவில் தாக்கலாயிருக்கும் தீர்வை மேல் சாகுபடியின் மாசூலின் சர்க்கார் வீதத்தின் ரொக்க விலையை மாத்திரம் காட்டுகிறது. மேற்படி நிலங்களில் உலோகங்கள் கண்டுபிடிக்கப்பட்டு வேலை நடத்தப்பட்டிருந்தால் அவைகளுக்காக ஜாஸ்தி தீர்வை செலுத்தவேண்டியதாக இருக்கும்.

| வருஷமும், விவரங்களும் (1) | புலத்தின் நம்பரும் உட்பிரிவும். (2) | புன்செய். விஸ்தீர்ணம். (3) | | புன்செய். தீர்வை. (3) | | நன்செய். விஸ்தீர்ணம். (5) | | நன்செய். தீர்வை (6) | | மொத்தத் தீர்வை (7) | | ஷரா (8) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 13......ம் பசலி கைப்பற்றிலுள்ள பலன்கள் | | ஏ. | செ. | ரூ | பை | ஏ. | செ | ரூ | பை | ரூ | பை | |
| மொத்தம் | | | | | | | | | | | | |

மண்டல துணை வட்டாட்சியர்
திண்டுக்கல்

## ❑ சொற்பொருள் குறிப்பு

| | |
|---|---|
| பட்டா | – (குறிப்பிட்ட எண்ணுள்ள நிலம், வீட்டுமனை முதலியவற்றிற்கு) வரி செலுத்த வேண்டிய உரிமையாளர் யார் என்பதைக் காட்டும் ஆவணம்; a settlement record which shows who, as the owner of a specified land, is obliged to pay the tax. |
| மாசாந்தர > மாதாந்திர | – மாதத்திற்கு ஒரு முறையான; ஒவ்வொரு மாதத்திற்கும் உரிய; monthly |
| கிஸ்தி | – நிலவரி; land revenue; kist. |
| தீர்வை | – வரி; duty ; tax |
| மணியக்காரர் | – (முன்பு) கிராமத்தில் நிலவரி வசூல் முதலியவற்றைக் கவனிப்பவர்; (formerly) village official entrusted with the collection of land revenue, house tax, etc. |
| உத்தரவு | – ஆணை; order |
| சாகுபடி | – விளைச்சல்; பயிர்வளர்ப்பு; cultivation |
| விதிக்கப்படு | – விதி – விதிக்க – விதிக்கப்படு – (வரி முதலியவற்றின் வசூலுக்காக) அறிவிக்கப்படுதல் |
| கைப்பற்றுநிலம் | – எடுத்துக்கொள்ளப்பட்ட நிலம் ; land taken possession (unlawfully) |
| புலவாரி | – திக்கு (அ, பக்க முறையில்; directionwise; according to direction. |
| தாக்கலாயிரு | – பதிவாகியிரு; ஒப்படையாகிவிடு ; having got filed or submitted. |
| மாதூல் | – மகசூல் – (தானியப்பயிரின்) விளைச்சல் ; agricultural produce or yield |
| உலோகங்கள் | – (இரும்பு, தங்கம் போன்ற) திடப்பொருள்கள்; metals (like iron, gold, etc.) |
| புன்செய் | – பாசனத்துக்கு மழைநீரை மட்டுமே நம்பியிருக்கும் நிலம்; dry land |
| நன்செய் | – (ஆறு, ஏரி முதலியவற்றால்) பாசனவசதிபெற்ற நிலம்; wet land |
| விஸ்தீர்ணம் | – பரப்பு; பரப்பளவு ; area |
| ஷரா | – குறிப்பு ; remark |
| பசலி | – கிராமத்தில் விளைநிலம் பற்றிய கணக்குகளுக்கான (பயிரிடும் காலமான ஜூலை முதல் அறுவடை முடியும் காலமான மே–ஜூன் வரை கணக்கிடும்) ஓர் ஆண்டு; accounting year for land revenue; fazli |

## ○ பட்டா மாற்றம் செய்யப்படுவதற்கான படிவம்

——— ம் பசலியில் ——————— ஜில்லா, தாலுாகா, ————— கிராமத்தில் இறந்துபோன பட்டாதார்களின் பெயர்களையும் இன்னார்பேரில் பட்டாக்களை கொடுக்கவேண்டியதென்பதையும் தெரிவிக்கிற ஸ்டேட்மெண்டு.

| இறந்துபோன பட்டாதார்கள். | | இறந்துபோன தேதி | இறந்து போனவர்களின் வாரிசுகளும் அவர்களின் பந்துத்துவமும், வயதும். | கிராம உத்தியோகஸ்தர்களின் சிபாரிசு | கைப்பற்றை யார்பேரில் பதிவு செய்யும்படி உத்திரவு செய்யப்படுகிறதோ அவருடைய பெயரும், தொழிலும் உத்திரவுக்கு ஏதேனும் ஆதாரமிருந்தால் அதுவும் (நம்பர், தேதி இங்கே பதிவு செய்ய வேண்டியது). |
|---|---|---|---|---|---|
| கூட்டு அல்லது தனிப்பட்டா நெம்பர் (1) | பெயரும், தொழிலும் | (2) | (3) | (4) | (5) |
| | | | | | |
| | | | | | |

### ❑ சொற்பொருள் குறிப்பு

படிவம் – நிரப்புவதற்கான இடங்களுடன் கூடிய கேள்விகள் அல்லது வாசகங்கள் அடங்கிய தாள்; (printed) form

இன்னார்பேர் – இப்படிப்பட்டவர்; such and such person; in the name of such and such person

வாரிசுகள் – ஒருவருக்குப்பின் அவருடைய சொத்து முதலியவற்றை சொந்தமாக்கிக் கொள்ளும் உரிமை படைத்தவர்; one who inherits; heir; one who enjoys the property by inheritance

பந்துத்துவம் – உறவு; relationship

கிராம உத்தியோகஸ்தர் – கிராமப்பணியாளர்; village official

* * * * *

○

# கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அனுப்பப்படும் உத்தரவு

————ம் பசலியைச் சேர்ந்த T. R. கரன்ட் ———ம் நம்பரின் மேல் உத்தரவு.

——ம் நெ. கிராமத்திலுள்ள கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அனுப்பப்பட்டது. அவர்கள் இந்த பத்திரிகை பெற்றுக்கொண்ட ஏழு தினங்களுக்குள் அடியிற்கண்ட கேள்விகளுக்குப் பதிலெழுதி தங்களுடைய பத்திரங்களுடன் இதை திருப்பியனுப்பவேண்டும்.

———— ஆபிஸ் தாசில்தார்

தேதி ———— 19........

| கேள்விகள் | பதில்கள் |
|---|---|
| 1. (a). விணைப்பத்தில் குறிப்பிட்டுள்ள நிலத்தின் விவரம், விஸ்தீர்ணம், தீர்வை, ஸர்வே நம்பர், உட்பிரிவு நம்பர், ஆகிய இவை 2-ம் ந. 10(1)-ம் ந. கிராமக் கணக்குகளுடன் வைத்துப் பரிசோதித்துப் பார்த்துச் சரியாயிருக்கின்றனவாவென்று கண்டறியப்பட்டதா; தப்பாயிருப்பதாகத் தெரியவந்தால், சரியான விவரங்களைக் கண்டறிந்து குறிப்பிடவும். | |
| (b) ட்ரான்ஸ்பர் செய்யப்படும் நிலத்தின் ரெஜிஸ்டரான சகல கைப்பற்றுதாரர்களின் பெயர்களையும் அந்த நிலத்தின் தீர்வையுங்கூட குறிப்பிடவும். | |
| 2. விற்கப்பட்ட நிலத்தைத் தவிர வேறே எந்த நிலங்களாகிலும் கைப்பற்று இருக்கின்றனவா ? பட்டாவின் நம்பர் என்ன ? (மேலும்), பிரஸ்தாப கிராமத்திலுள்ள கடைசி பட்டாவின் நம்பர் என்ன ? | |
| 3. (a) ட்ரான்ஸ்பர் செய்யப்படும் நிலமானது ஒரு பூர்த்தியான உட்பிரிவு அல்லது ஸர்வே புலமா அல்லது ஒரு பாகமா ? | |
| (b) (ட்ரான்ஸ்பர் செய்யப்படும் நிலமானது ஏற்கனவேயுள்ள ஒரு உட்பிரிவு அல்லது ஸர்வே புலத்தின் பாகமாயிருந்தால்), பிரத்யேகமாய் அனுபவித்து வந்ததைக் காட்டும் வரப்புகளாவது இதர அடையாளங்களாவது அந்தப் பூமியில் இருக்கின்றனவா ? (அந்தப்படி | |

இருக்கிறபட்சத்தில்) உட்பிரிவு சம்பந்தமான ஸ்கெட்ச்சுகளையும் (குறிப்புப் படங்களையும்) ஸ்டேட்மென்டுகளையும் தயார் செய்து சேர்த்தனுப்பவும்.

தேதி.
கிராம முனிசிப்.
கர்ணம்

❑ சொற்பொருள் குறிப்பு

| | |
|---|---|
| பத்திரம் | – சொத்தின் விபரம் அடங்கிய பதிவு செய்யப்பட்ட முத்திரைத்தாள் ; registered docment (of property, etc.) |
| ஸர்வேநம்பர் | – Survey No. |
| பரிசோதி | – (சரியாயிருக்கிறதா என்று) கண்டறி ; examine (whether right) |
| பிரஸ்தாப கிராமம் | – குறிப்பிட்ட (அ) சொல்லப்பட்ட கிராமம் ; said village; village under reference |
| வரப்புகள் | – வயலைப் பகுதிபகுதியாகப் பிரிக்கும் சிறுகரைகள் ; ridges of a field |
| கிராம முன்சிப் | – கிராம அதிகாரி (முன்பு); munsif of village (formerly) |
| கர்ணம் | – கிராம வரிக்கணக்குகளை எழுதிவைக்கும் அலுவலர்; village accountant |

* * * * *

## ○ கிராமங்களில் வீட்டுமனைகளை ஒப்படை செய்வது விஷயமாய்ப் பிறப்பிக்கப்படும் உத்திரவின் நமூனா.

### XIX–ம் அனுபந்தம்

### (21–ம் நி–ர். நிலை உத்தரவு, 7–வது பாரா, (ii) பகுதி. 1

*சாணார்பட்டி கிராம உட்கடை –*

*பெத்தாம்பட்டியி*(கிராமத்தி)லிருக்கும் ...*பழனி மகன் பொன்னன்*.. என்பவருக்கு தெரிவிப்பது என்னவென்றால் .......*திண்டுக்கல்*........ தாலூக்காவைச்சேர்ந்த ...*பெத்தாம்பட்டி*......*சாணார்பட்டி* கிராமத்திலிருக்கும் ஒரு வீட்டு மனைக்காக அவர் செய்துகொண்ட விண்ணப்பம் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ...........*பாதை*...க்கு வடக்கிலும், ...*பாதை*..க்குக் கிழக்கிலும், .......*பிளாட் 13*.......க்குத் தெற்கிலும், .......*பிளாட் 21*......க்கும் மேற்கிலும் இருப்பதும் (ஆகிய நான்குமாலுடன்) .......*மூனரை*....... ஸெண்ட் அல்லது ............... சதுர கெஜ விஸ்தீர்ணமுள்ளதுமான அடியிற்கண்ட நிலத்துண்டானது. போர்டாரின் 21–ம் நி–ர். நிலை உத்திரவில் கண்ட நிபந்தனைகளின் படிக்கும் கீழ்க்கண்ட திட்டங்களுக்குட்பட்டும் அவருக்கு ஒப்படை செய்யப்பட்டிருக்கிறது.

| மனைப் பிரிவுகளின் படத்திலுள்ள எழுத்து | பிளாக் நம்பர். | நிலத்துண்டின் நம்பர். |
|---|---|---|
| பிளாட் நம்பர் 22 | | SNo. : 71/2B |

## நிபந்தனைகள்

1. பிரஸ்தாப மனையின்மேல் ஒரே ஒரு வீடு கட்டவேண்டும்.

2. இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கும் ஷெட்யூலில் கண்ட விபரமும் அளவுள்ளதும் ஓலை முதலியவைகளினால் கூரை போட்டதுமான / மேல் ஒரு மூடிய அல்லது தரிசு போட்டதுமான ஒரு கட்டிடத்தை 197/ ..............வரு. தூன் மீ 9. தேதி யிலிருந்து ஆறு மாத காலத்துக்குள் கட்டி முடிக்க வேண்டும்.

நகல் – கர்ணம், சாணார்பட்டி கிராமம்

ஸ்பெஷல் தாசில்தார்
நில ஆர்ஜிதம் திண்டுக்கல்

❑ சொற்பொருள் குறிப்பு

நி–ர் – 'எண்'ணைக் குறிக்கும் சுருக்க வடிவம்; the abbreviated form of number

வரு. – வருடம்; ஆண்டு ; year
மீ. – மாதம் என்பதன் சுருக்கவடிவம்
வீட்டுமனை – வீடு கட்டுவதற்காக அளந்து பிரிக்கப்பட்டிருக்கும் நிலம் ; நிலப்பகுதி ; site for a house
ஒப்படை – (வீடு கட்டுவதற்காக நிலத்தை ஒருவருக்கு) வழங்குதல் ; ஒப்படைத்தல்; entrust
பிறப்பிக்கப்படு – அறிவிக்கப்படு; be declared; be announced
நமூனா – (விபர வரிசை அடங்கிய) விண்ணப்பபடிவம் ; form (of application)
அனுபந்தம் – பின்னிணைப்பு ; appendix
விண்ணப்பம் – (உதவி கேட்டு (அ) நடவடிக்கை எடுக்கும்படி வேண்டி எழுதப்படும்) கடிதம் ; மனு; application; petition
அங்கீகரி – ஏற்றுக் கொள்; ஒப்புக்கொள்; accept; approve (of)
திட்டங்களுக்குட்படு – செயல்முறை ஏற்பாடு (அ) வரை முறைகளுக்குக் கட்டுப்பட்டு
நிலத்துண்டு – நிலப்பகுதி ; piece of land
நிபந்தனை – கட்டுப்பாடு ; condition
ஷெட்யூல் – அட்டவணை ; schedule
ஓலை – பனை, தென்னை போன்ற மரங்களின் இலை ; leaf of the trees like palmyra, coconut, etc.
கூரை – ஓடு, ஓலை முதலியவற்றால் அமைக்கப்படும் வீட்டின் மேல்பகுதி ; roof made up of tiles palmyra leaf, etc.
தரிசு – வெற்று நிலம் ; uncultivable land
நில ஆர்ஜிதம் – தனிப்பட்டவர் நிலத்தை பொது நன்மைக்காக அரசு எடுத்துக் கொள்ளுதல் ; acquisition of land
நான்குமால் – நான்கு பக்கங்கள் ; boundary on four sides

* * * * *

## ○ ரூபாய் 5,500-00 க்கு சுத்தக்கிறைய சாசனப் பத்திரம்
### 1991-ம் வருடம் பிப்ரவரி மாதம்-19 (பத்தொன்பது தேதி)

திண்டுக்கல் வட்டம் சாணார்பட்டி கிராமம் பெத்தாம்பட்டியில் இருக்கும் *ப. பொன்னன் குமாரர் விவசாயம் பொன். நாகராஜன்* அவர்களுக்கு.

திண்டுக்கல் வட்டம் சாணார்பட்டி கிராமம் கஸ்பாவில் இருக்கும் *வேட் க. பெரியகருப்பனம்பலம் குமாரர் விவசாயம் தொத்தன் என்ற கருப்பணன்* அம்பலம்-1. மேற்படி, மேற்படியூர். மேற்படி1-வது நபரின் மனைவி வீட்டுக் குடித்தனம் *மூக்காயி என்ற கருப்பாயம்மாள்-2* ஆக இரண்டு பேர்களும் சேர்ந்து எழுதிக் கொடுத்த சுத்தக்கிறைய சாசனப் பத்திரம் என்னவென்றால்...

இதனடியிற்கண்ட சொத்தை மட்டும் நாளது தேதியில் நாங்கள் தங்களுக்கு ரூபாய் 5,500-00 க்கு சுத்தக்கிறையம் செய்து கொடுத்து இந்த ரூபாய் ஐ ந்து ஆயிரத்து ஐ ந்து நூறும் எங்களுடைய குடும்பச் செலவிற்காகவும், சில்லறைக்கடன்கள் தீர்ப்பதற்காகவும், நாளது தேதியில் நாங்கள் தங்களிடம் ரொக்கம் பெற்றுக் கொண்டும் சொத்தையும் இது முதல் தங்கள் சுவாதீனத்திலும் அனுபவத்திலும் நாங்கள் ஒப்புவித்தும் அதன்படி தாங்களும் சுவாதீனமும் அனுபவமும் ஒப்புக் கொண்டுவிட்டபடியால் இது முதல் தாங்களே தங்களிஷ்டம்போல் சர்வ சுதந்திர பாத்தியங்களுடன் ஆண்டு அனுபவித்துக்கொண்டு சுகத்திலிருப்பீர்களாகவும். கிறையச் சொத்தைப் பொருத்து வேறு எவ்வித வில்லங்கமும் இல்லையென்று தங்களை நம்பும்படி உறுதியாய்ச் சொல்லுகிறோம். அப்படி ஏதேனும் பின்னிட்டு வில்லங்கம், விவகாரம், தர்க்கம், தகரார்கள், ஏற்பட்டால் அவைகளை எங்களுடைய சொந்த இதர ஐவேசிலிருந்து சிலவு செய்து தீர்த்துக் கொடுப்போமாகவும்.

### ❑ சொற்பொருள் குறிப்பு

| | |
|---|---|
| சுத்தக்கிறையம்> சுத்தக்கிரையம்> சுத்தக்கிரயம் | - (வீடு, நிலம் போன்றவை பெறும்) முழுமையான விலை; complete price (offered and accepted for a land or house) |
| சாசனப் பத்திரம் | - நிலம், வீடு போன்றவற்றை விற்பதற்கான நோக்கம் போன்ற விபரங்கள் எழுதப்பட்ட ஆவணம் ; document containing the details of land or house being sold |
| கஸ்பா | - வட்டாரம்; பகுதி |
| அம்பலம் | - ஊர்ப் பொது நிகழ்ச்சிகள் நடைபெறும் பொது இடம் ; community place in a village where public activities held (in former times) |
| மேற்படியூர் | - முன்னால் குறிப்பிட்ட ஊர் ; the village mentioned above |
| நாளது தேதி | - மாதத்தில் குறிப்பிட்ட எண்ணுடைய நாள் ; day of the indicated date |
| சில்லரைக்கடன் > சில்லறைக்கடன் | - உதிரிக் கைமாற்று ; small loan |

| | |
|---|---|
| கடன்தீர் | – கைமாற்று வாங்கியதைத் திருப்பிக்கொடுத்தல் ; clear the debt, loan, etc. |
| ரொக்கம் | – (ready) cash |
| ஒப்புவி | – ஒப்புக்கொடு; ஒப்படைத்தல்; entrust |
| அனுபவம் | – (here) அனுபோகம் – உடமையை அனுபவிக்கும் உரிமை; possession |
| தங்களிஷ்டம்போல் | – தங்கள் விருப்பம்போல் ; as per your wish |
| வில்லங்கம் | – சொத்துக்களின் பேரில் கடன்வாங்கியிருத்தல் போன்ற குறை ; encumbrance on property |
| விவகாரம் | – குழப்பம் ; dispute |
| தர்க்கம் | – விவாதம் ; வாக்குவாதம்; argument |
| தகராறு | – சிறுசண்டை; wrangle |
| ஐவேசு | – சொத்து ; property |
| சிலவுசெய்து> செலவு செய்து | – செலவு செய்து; செலவழித்து ; by meeting the expenses |
| தீர்த்துக் கொடு | – (வில்லங்கங்களை) சரிசெய்துகொடு ; rectify (the disputes / encumbrances) |

* * * * *



# தனித்தனி ஆஸ்திப் பொறுப்பு ஸ்டேட்மெண்டு

A.__________நெ.__________சொசைட்டி மெம்பர்கள் ஆஸ்திப்பொறுப்பு ஸ்டேட்மெண்டு

மெம்பர் நெ.______பெயர் ____________________ தகப்பனாரின் பெயர்______________

மேல் விலாசம் ______________________________________________________

## (1) ஸ்தாவர சொத்து

| விபரம் | நஞ்சை | | | புஞ்சை | | | இதர ஸ்தாவரம் | | | வீடு | | மொத்தம் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | விஸ்தீரணம் | கிஸ்தி | மதிப்பு | விஸ்தீரணம் | கிஸ்தி | மதிப்பு | விஸ்தீரணம் | கிஸ்தி | மதிப்பு | சங்கியை | மதிப்பு | விஸ்தீரணம் | மதிப்பு |
| | ஏ. செ | ரூ பை | ரூ | ஏ. செ | ரூ.பை | ரூ. | ஏ.செ | ரூ.பை | ரூ. | | ரூ. | ஏ. செ | ரூ. |
| A. சங்கத்தின் விவகார எல்லைக்குள் | | | | | | | | | | | | | |
| B. மேற்படி விவகார எல்லைக்கு வெளியில் | | | | | | | | | | | | | |
| மொத்தம் | | | | | | | | | | | | | |

## (2) ஜங்கம சொத்து

| விபரம் | மாடு | ஆடு | வண்டி | நகை | ரொக்கம் லேவாதேவி | இதரம் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| சங்கியை | | | | | | | |
| மதிப்பு ரூ. | | | | | | | |

மேலே கண்ட சங்கதிகள் உண்மையென்று பிரமாணமாய் சொல்லுகிறேன்.

சங்கம் சீல்

தேதி ------------------198

மெம்பர் கையெழுத்து

(பஞ்சாயத்தார்களின் அபிப்பிராயம்)

## ❑ சொற்பொருள் குறிப்பு

ஆஸ்திப் பொறுப்பு – சொத்து(அ) உடமைப்பொறுப்பு ; (one's responsibility of property

நெ. – 'நம்பர்' என்பதன் சுருக்கவடிவம்; abbreviated form of number

மெம்பர் – உறுப்பினர்; member

விலாசம் – முகவரி; address

ஸ்தாவரச்சொத்து – immovable property

ஜங்கமச் சொத்து – movable property

லேவாதேவி – தனிபட்டமுறையில் வட்டிக்குக் கடன்கொடுத்து வாங்கும் தொழில் ; money-lending

சங்கியை – எண்ணிக்கை

சங்கதி – நடைபெற்ற செயல்; நிகழ்ச்சி ; சம்பவம் ; happening; event

பிரமாணம் – ஆதாரத்தோடு (அ) புனிதமாகக் கருதும் ஒன்றைச் சாட்சியாக வைத்து உறுதியாகக் கூறுவது ; with evidence; oath

அபிப்பிராயம் – கருத்து ; opinion

* * * * *

## ❑ வினாப்பயிற்சி

1. வீடு விற்பதாக நினைத்து, மாதிரி விற்பனைப் பத்திரம் (sale deed) ஒன்றைத் தயார் செய்க.

2. வருவாய்த்துறை ஆவணங்களில் பயன்படுத்தப்படும் சிறப்புச் சொற்கள் ஏதேனும் பத்தினை எழுதி அவற்றிற்குரிய பொருளையும் எழுதுக.

---

குறுக்க விளக்கம்

நி–ர் – number என்பதில் உள்ள 'n'க்கு இணையாக தமிழில் 'நி' என்றும் 'r'க்கு இணையாக 'ர்' என்றும் சுருக்கி எழுதியுள்ளனர்.

நெ. – number என்பதன் உச்சரிப்புக்கு ஏற்ப முதல் எழுத்தை 'நெ' என்று குறிப்பிட்டுள்ளனர்.

மீ. – மாதம் என்பதன் சுருக்க வடிவம்

வரு. – வருஷம்>வருடம் என்பதன் சுருக்க வடிவம் (தமிழில் 'ஆண்டு')

ஸ்ரீ – 'ஶ + ரீ' என்ற கிரந்த எழுத்துக்களின் கூட்டு வடிவம் ஸ்ரீ

# தேசிய கீதம் (நாட்டுப் பண்)

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே!

– *மகாகவி இரவீந்திரநாத தாகூர்*

கருத்து :

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒரிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமய மலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே, உனக்கு வெற்றி! வெற்றி! வெற்றி!

❑ சொற்பொருள் குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| கணிக்கின்ற | – (one who) determines | உள்ளக்கிளர்ச்சி | – enthusiasm |
| இன்னொலி | – sweet voice | பரவு | – worship |


INDIA
N
JAMMU & KASHMIR
Srinagar
HIMACHAL PRADESH
Shimla
Chandigarh
PUNJAB
PAKISTAN
CHINA (Tibet)
UTTARANCHAL
Dehradun
HARYANA
DELHI
ARUNACHAL PRADESH
Itanagar
NEPAL
SIKKIM
Gangtok
BHUTAN
RAJASTHAN
Jaipur
UTTAR PRADESH
Lucknow
Patna
BIHAR
ASSAM
Dispur
NAGALAND
Kohima
Shillong
Imphal
MEGHALAYA
MANIPUR
Agartala
TRIPURA
Aizawl
MIZORAM
GUJARAT
Gandhinagar
Bhopal
MADHYA PRADESH
Ranchi
JHARKHAND
WEST BENGAL
Calcutta
CHHATTISGARH
BANGLADESH
Raipur
ORISSA
Bhubaneshwar
MAHARASHTRA
Mumbai (Bombay)
Hyderabad
ANDHRA PRADESH
ARABIAN SEA
BAY OF BENGAL
Panaji
GOA
R
KARNATAKA
Bangalore
LAKSHADWEEP
Chennai (Madras)
PONDICHERRY (Puducherry)
Port Blair
TAMILNADU
ANDMAN & NICOBAR ISLANDS
KERALA
Thiruvananthapuram
INDIAN OCEAN
8